முதற்பதிப்பு: செப்டம்பர், 1965

விலை: ரூ. 3-50

அச்சிட்டோர் :
மெட்ரோபாலிட்டன் பிரிண்டர்ஸ்,
சென்னை-2.

திரு. கோவி. மணிசேகரன் சிறப்பான எதிர்காலத்தை நோக்கி வந்துகொண்டிருப்பவர்.

அகிலன்—

திரு. கோவி. மணிசேகரன் ரசமாகக் கதைசொல்லும் தந்திரங்களைத் தெரிந்தவர்; வெற்றி கண்டவர்.

—சாண்டில்யன்

## சிறப்பான எதிர்காலம்!

"எழுத்து சோறு போடுமா?"—விறு விறு விறுப்பாக எழுந்த காலமொன்றுண்டு. அதன் தலையில் ஓங்கி ஓர் அடி அடித்துத் தரைமட்டமாக்கிய சிற்பிகள் பலர் உளர். அவர்களுள் பளிச்சென மிளிர்ப்பவர்தான் திரு. கோவி.மணிசேகரன். 'கோவி' என்றாலே சரித்திரத்தை எழுதுபவர் என்ற எண்ணத்தை எளிதிலே நிலைநாட்டியவர். இளைஞர்; துடி துடிப்புடன் காணப்படுபவர் பேச்சிலும், எழுத்திலும்—ஏன்? எதிலுமே துடி துடிப்பாகவே இருப்பவர். ஒல்லியான உடல். உயரமான உருவம். எவரையும் நண்பராகக் கொள்ளும் பண்பு. நண்பரைக் கண்டால் 'ஓ.ஃ.கோ' என்ற ஆனந்த ஆரவாரம் கொண்ட வரவேற்பு; சிறிய விஷயத்திலும் உணர்ச்சி வசப்பட்டுத் தம்மை மறப்பவர். அதுவும் சரித்திரப் புதினங்களை எவரேனும் இகழ்ந்தால் போதும்; உடனே அக்கினி கோபம் கொள்வார். அதனால்தான் முதல் கன்னி முயற்சியாக 'அக்கினிகோபம்'* என்ற

* இப்புதினத்தைத் 'தரங்கிணி' என்ற தலைப்பில் வானதி பதிப்பகம் வெளியிட்டிருக்கிறது.

பெருநாவலைப் படைத்து விட்டார் போலும்! சரித்திரத்தின்மீது மீளாக்காதல் கொண்டவர்.

தம் நெஞ்சைக் கவர்ந்த எழுத்தை எங்காவது இவர் படிக்க நேர்ந்தால் அதனைப் படைத்தவர் தம்மை வெறுப்பவராக இருந்தாலும், அவருக்குத் தம்முடைய பாராட்டுதலை அனுப்புவார்.

சளைக்காமல் படிப்பதில் ஆர்வம் கொண்ட தால் பிற நாட்டு வரலாறுகளைப் பின்னணியாகக் கொண்டு தமிழில் பல நாவல்களைத் தந்துள்ளார். இலங்கையைப் பின்னனியாக வைத்துத் தமிழ கத்தில் 'தேவ தேவி' என்ற புதினத்தை முதன் முதலில்படைத்தவர். பல்லாளச்சோழனைத் தலைவ னுகக்கொண்டு, அன்பால் பௌத்தரைத் தம்பால் ஈர்த்து, அங்கே தமிழ்ப் பண்பாட்டை உலவவிட்ட நிகழ்ச்சியே 'தேவ தேவி'—சிறப்பான கருத் துள்ள நாவலாகும்.

விறுவிறுப்பான நடையில் காதல் போராட் டத்தை அழகான முறையில் புனைந்த நவீனம் 'முகிலில் முளைத்த முக'மாகும். இலங்கையைப் போலவே குப்தமரபைக்கொண்டு படைத்த புதினமே 'பத்தாயிரம் பொன் பரி'சாகும்.

ஒரு தளபதியின் தலைக்குப் பகடை'பத்தாயிரம் பொன்'. படிக்கச் சுவைமிகுந்த நடையிலே எழுதி யுள்ளார். காதலும், கடமையும் ஒன்றையொன்று மோதி தளபதியைப் பித்தனுக்குகின்றன. ஒரு முனையின் விளிம்பில் காதல் உயர்கிறது. அதற்

காக அவன் தலை பத்தாயிரம் பொன்னுக்குப் பகடையாக்கப்படுகிறது. சிறப்பான சேவையால் தண்டனை விதித்த மாபெரும் மன்னனிடமே பரிசையும், புகழையும் பெறுகிறான் தளபதி. இதுவே பத்தாயிரம் பொன் பரிசு. இதிலே கிரேக்க கதா பாத்திரங்களும் வருகிறார்கள். மிடுக்கான நடையிலே எழுதியிருக்கிறார்.

பிறநாட்டு வரலாற்றைத் தமிழில் தர ருஷ்ய வீரன் 'ஓலக்'கையும், திபெத்திய சூழ்நிலையில் 'பனிநிலப் பாவை' போன்ற நல்ல சிறு கதைகளை யும் படைத்துள்ளார்.

அக்காலத்தில் குலோத்துங்கனைப் பற்றிப் பரணி பாடினார் ஜயங்கொண்டார். இக்காலத்தில் அழகான நாவலைப் படைத்திருக்கிறார் 'கோவி!'

கருணாகரத் தொண்டைமானைப் பகைவர் மத்தியில் நடமாடவிட்டு (நம் மனத்தை ஊசலாட வைத்து) 'பகையாளி நிலையை உறவாடி அழி' என்ற சூத்திரத்திற்கேற்ப நாவலை அமைத்துச் சென்றுள்ளார். ஜயங்கொண்டரை ஆணவத்தால் பரணிபாடக் கட்டளைப்பிறப்பித்தான் கலிங்க மன்னன். தம்மை இகழ்ந்த கலிங்க மன்னனின் வீழ்ச்சியினையே பரணி பாடப் போவதாக வஞ்சினம் கொண்டார் ஜயங்கொண்டார், எனக் கற்பனைக்கண்களுடன் இந்நாவலைஉருவாக்கினார். வரலாறு, சொல், சூழ்நிலை, பண்பாடு, நாகரிகம் என ஐவகை விதிகளின் எல்லைக் கோட்டிலே நின்று நல்ல முறையில் எழுதியுள்ளார்.

'கோவி' குருகுலமுறையில் இசையறிவைப் பெற்றவர். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் இசையிலே பட்டம் பெற்றதால் இசைஞானப் புலமையை நாவல்களில் திறமையாகக் கையாண் டுள்ளார். அதுவும் ஏழிசை வல்லபி யாழை மீட்டும் பாணியை இவர் கூறும் போது, 'செம்பியன் செல்வி' நம் நெஞ்சிலே நிற்காமல் போகாது. அதுபோல விஜயநகர கிருஷ்ண தேவ ராயர் நெஞ்சிலே தெய்வீக மணம் வீசிக் களித்த மோகனுங்கியைப் 'பொற்காலப் பூம்பாவை'யாகப் பொலிவுடன் ஆக்கியுள்ளார். விஜயநகர வரலாறு ஒரு பெரிய கடல். அதனில் மூழ்கி அவர் கண் டெடுத்த முத்தே 'பொற்காலப் பூம்பாவை' யாகும். 'பொற்காலம் என்ருலே இறைவன் குடிலுக்குப் பொன் வேய்ந்த நினைவு வராமல் போகாது' என்ற எண்ணத்தையொட்டி சுந்தர பாண்டியன் வரலாற்றைப் 'பொன்வேய்ந்த பெருமா'ளாக வடித்துக் கொடுத்திருக்கிருர்.

சரித்திரத்தில் சிறு பொறி இவர் பார்வையில் கிடைத்தால் போதும். உடனே சிறுகதையாகவோ, நாவலாகவோ அது மாறிவிடும்.

திரு. கோவி. மணிசேகரன் அவர்கட்குச் சிறப்பான எதிர்காலமுண்டு என்பதில் ஐயமில்லை.

'அமுதசுரபி'

(15-7-1962)

# சிறையில் எழுந்த கீதம்

முன்னிலவு காலம். செருக்கார்ந்த கோல முடன் கீற்றுநிலவு உதயமாகிக் கொண் டிருந்தது. அதன் ஒளி அப்போதைச்குச் சிறிதாரு லும், ஆனந்தம் எப்போதும் போலவே பெரியதா யிருந்தது. முக்கண்ணனுடைய முடியிலமர்ந்த பெருமை, அதற்குத் தனியான செருக்கையும், ஆனந் தத்தையும் அளித்து விட்டது போலும்!

பாவம், அந்த நிலவு! முழுமுதற் கடவுளின் உள்ளும் புறமுமாக ஒன்றிப் பிரகாச நிலையடைந்து விட்ட கதிரவனைப் பற்றி அதற்கு என்ன தெரியும்? எல்லாம் தெரிந்துதானு இந்தப் புவனம் சுழல்கிறது?

சந்திரகிரி அரண்மனை மேன்மாடத்து நிலாமுற் றத்தில் தனியனுக அமர்ந்து சிந்தனைக்குச் சிறகுகளைப் படைத்துக் கொண்டிருந்த விஜய ரகுநாதநாயக்கன், கூன்நிலவைக் கூர்ந்து கூர்ந்து கவனித்துக் கொண் டிருந்தான். எதிரே, தென்னை மரங்களின் கீற்றுச் சிறகுகள், நிலவை மறைப்பதும், திறப்பதுமாக அசைந்தன. தென்றலென்ற பொதிகைத் தூதன் பரந்த மனப்பான்மையுடன், வஞ்சனையில்லாமல் இந்த உலகை அணைத்து இதம் தந்து கொண்டிருந் தான்.

எங்கோ ஓர் ஒற்றைக்குயில் மெல்லிய இழைக் கீற்ருன இசையை எழுப்பி, அமைதிக்கு ஒரு மகுடம் வைத்தது. அந்த நாதத்தின் சுருதியைக் கணித்து அளவிடுபவன் போன்று, மூக்கின்மேல் வலக்கரத்து ஆள்காட்டி விரலை வைத்துத் தேய்த்துத் தலையசைத்துக் கொண்டான் சங்கீத விற்பன்னன் ரகுநாதன். இசைதானே அவன்; அவன்தானே இசை! அவன் தோற்றுவித்த 'ஜயந்தசேனு' ராகம் ஒன்று போதுமே, அவனுடைய இசைப் பெருமையைப் பறைசாற்ற!

குயிலின் இசைக் குரலை மீறி,மற்றுமொரு சங்கீதக் குரல் கேட்கிறதே! அதுவும் குயிலின் குரலா? இல்லையே......இல்லையே......பின்......?

ஒரு பெண்ணின் குரல்...ஆமாம்; யாழையும் மீற வல்ல-தேனையும் திகட்டவல்ல ஒரு பெண்ணின் இனிய கண்டத்திலிருந்து எழும் கானக்குரல்! அதில் ஏன் இத்தனை சோகச் சுவை பரிதாபமாகக் கலவையிடுகிறது?

எங்கிருந்து கேட்கிறது இந்தக் குரல்? தென் திசையிலிருந்து மிதந்து வருகிறதே! யார் இந்நேரத்தில் பாடுவது? தன்னுடைய துயரங்களை யெல்லாம் கொட்டித்தீர்க்கும் தீனக் குரலல்லவா அது! ஏதோ விடுதலை கோரி எழும் துன்பியலாக அது தொனிக்கிறதே! இப்படிப் பாடவல்ல பெண்ணணங்கு இந்தச் சந்திரகிரி அரண்மனையில் இருக்கிருளா?

"விஜய ரகுநாதா! வெட்ட வெளியில் அமர்ந்திருக்கிருயே! உடம்புக்கு ஏதேனும் வந்துவிடப் போகிறதப்பா! பிறகு நான், பிரதானி கோவிந்த தீட்சிதர்க்குப் பதில் சொல்லியாக வேண்டும்!" என்று குரல் கொடுத்த

வண்ணம் வந்துகொண்டிருந்தார் விஜய நகர வேந்தர், வேங்கிடபதிராயர்.

• •

வேந்தர்க்குத்தான் எத்துணை கரிசனை. இராதா? பூண்டோடு அழித்துவிடவேண்டும் என்று கங்கணம் கட்டிக்கொண்டு புறப்பட்ட பீஜப்பூர்ப் படைகளைச் சிதறடித்து, வெற்றியை நிலைநாட்டித் தந்துதவிய மாவீரனுயிற்றே தஞ்சைபுரி வேந்தன் ரகுநாத நாயக்கன்! சமயத்தில் ரகுநாத நாயக்கன் படை நடத்தி வந்து கொண்டிராவிடில், இந்நேரம் விஜய நகரமோ பெனுகொண்டாவோ, சந்திரகிரியோ முகலாயர்களுடைய கோட்டங்களாக மாறியிருக்குமே! வேங்கிடபதிராயரோ, பெனுகொண்டா ஸ்ரீரங்கராயரோ சிறைவாசம் செய்ய நேரிட்டு இருக்குமே! வெற்றி முழக்கமிட்ட வேந்தன் ரகுநாதனைப் பாதுகாத்துத் தஞ்சைக்கு அனுப்பிவைக்கும் வரை, வேந்தர் வேங்கிடபதிராயரே பொறுப்பேற்றார் என்றால் வியப்பதற்கென்ன இருக்கிறது?

விஜய ரகுநாதன், மெல்லப் புன்னகைத்த இதழ்களை அசைத்துக்கொண்டவனாய் வேந்தர் வேங்கிடபதிராயரை நோக்கினான். "விஜய வேந்தரே! தனிமை மனிதனுக்குத் தெய்வ சந்நிதானத்தைத் திறக்கிறது! அதிலும் இம்மாதிரியான சூழ்நிலை, சொர்க்கத்தையே படைத்துவிடுகிறது!"

"உண்மை ரகுநாதா, முற்றிலும் உண்மை! இந்தக் கிழத்துக்கு அவையெல்லாம் எங்கே தெரியப்போகிறது? எல்லாரும் மனிதர்களாகத்தான் பிறக்கிறார்கள்; ஆனால், மன்னர்களாவதில்லை. மன்னர்களெல்லாருமே, அன்றொரு பொற்காலத்தைக் கண்ட, கலை இலக்கியச்

சக்கரவர்த்தி,விஜயநகரப் பெருமன்னர் கிருஷ்ணதேவ ராயராகி விடுவதில்லை; இன்னொரு பொற்காலத்தைக் காணப்போகும் ரகுநாதனுகவும் உருவெடுக்கப் போவதில்லை! இதுவும் ஒருவித தெய்வ சிருஷ்டிதான்!''

முன்பு கேட்ட அதே கீதம்—பெண்ணொருத்தியின் சோகக் கீதம் மீண்டும் காற்றில் மிதந்து வந்தது. சொற்களும் தெளிவாகக் கேட்டன. அந்தச் சொற்களில், பெண்ணின் பிறவித் துன்பங்கள் பிரதிபலித்தன.

விஜய ரகுநாத நாயக்கன் மீண்டும் தன்னை மறந்து செவிகளைத் தென் திசைப்பக்கம் திரும்பினுன். வேந்தர் வேங்கிடபதிராயர்க்குப் பாடுவது யார் என்பது புரிந்துவிட்டது.

"இதுவும் ஒருவித தெய்வ சிருஷ்டிதான்!'' என்று ரகுநாதன் முணுமுணுத்துக் கொண்டான். பிறகு வாய்திறந்தே சொன்னுன்: "வேந்தரே! சங்கீத ஞானம் எல்லாருக்குமே கை கூடி விடுவதில்லை; அந்த ஞானத்தைக் கைவரப் பெற்றவர்கள் அனைவருக்குமே இம்மாதிரியான அமுதக்குரல் அமைவதுமில்லை!''

"உண்மை ரகுநாதா, முற்றிலும் உண்மை!''—வேந்தர் ஆமோதித்தார்.

"அரண்மனையில் இவ்வளவு அழகாகாகப் பாடும் பெண்மணிகளும் இருக்கிறுர்களா?''

ரகுநாதன் சற்றுநேரம்வரை வேந்தர் வேங்கிடபதி ராயரைக் கூர்ந்து கவனித்தான். அவரிடமிருந்து என்ன மறுமொழி வரப்போகிறது என்பதைக் கேட்கத் தன்னுடைய காதுகளைக் கூர்தீட்டிக்கொண்டான்.

'இப்படிப்பட்ட மதுர கண்டத்தைப் பெற்ற மங்கை, யாராக இருக்கக்கூடும், என்பதை அறிந்து கொள்ள ரகுநாதனின் உள்ளம் துடித்தது.

கொஞ்ச நேரம் வரை யோசித்த வேந்தர் வேங்கிட பதிராயர் சொன்னார்: "அரண்மனையில் இல்லை ரகு நாதா ..சிறைமனையில் இருக்கிறார்கள்—இல்லை, இருக்கிறாள்!"

"சிறை மனையில் இருக்கிறாளா? யார் அவள் வேந்தரே?"

"நீ அவளைத் தெரிந்து கொண்டுதான் ஆக வேண்டுமா ரகுநாதா?"

"நிச்சயம் தெரிந்து கொள்ளவே என் மனம் விரும்புகிறது!"

"அப்படியானால் சொல்லுகிறேன. செஞ்சி அரசன கிருஷ்ணப்ப நாயக்கனுடைய திருமகள் அபரஞ்சி!"

"யார்? அபரஞ்சியா? அந்த அழகு வஞ்சியா?'

"அவளை உனக்குத் தெரியுமா ரகுநாதா!"

"தெரியும். ஒருமுறை பார்த்திருக்கிறேன். நான் கலாவதியை மணககும் முன்னர் அவளை மணந்து கொள்ளவும் விரும்பினேன். ஆனல்..."

"ஆனல்...? என்ன நடந்தது ரகுநாதா?"

"அந்த அகங்காரி என்னை மணக்க மறுத்து விட்டாள்?"

"என்ன! மாவீர ரகுநாதனை மணக்க அவள் மறுத்தாளா? தென்னகத்து ராஜகுமாரிகள் 'நீ,''நான்' என்று போட்டியிட்டு நிற்கும் சகல கலா விற்பன்னனை

மணக்க அவள் மறுத்து விட்டாளா? 'ஆணழகனை உன்னை மணக்க அவள் மறுத்துவிட்டாளா? ஆச்சரிய மாக இருக்கிறதே!''

''எனக்கும் ஆச்சரியம்தான் வேந்தரே! அவள் எந்தக் குற்றம் கண்டு இவ்வாறு மறுத்தாள் என்பது தான் இன்றளவும் எனக்குப் புரியாத ஒன்ருக இருக்கிறது! அது சரி! கிருஷ்ணப்பனைத்தானே சிறைப்பிடித்தீர்கள்?''

''இல்லை; குடும்பத்தையே சிறைப்பிடித்து வந்து வைத்தாகிவிட்டது!''

''கொடுமை! கொடுமை வேந்தே, மிகக் கொடுமை!''

''எது கொடுமை? நண்பன் போல் நடித்து, எதிரி யின் பால் சேர்ந்துகொண்டு துரோகம் விளை வித்தானே கிருஷ்ணப்ப நாயக்கன், அது கொடுமையா? இல்லை, தவம் செய்தாலும் பெறமுடியாத ரகுநாத நாயக்கனை மணாளனுக ஏற்கமறுத்தாளே அபரஞ்சி, அது கொடுமையா? எது கொடுமை, விஜய ரகுநாதா?'

''முன்னது வலிமை! பின்னது கொடுமை!''

''ரகுநாதா! இம்மாதிரியான பதர்களுக்கு, இவ் வாருன தண்டனைகள் விதித்தால்தான் ஏனையவர் களுக்குப் புத்தி வரும்! இந்தமாதிரியான நிகழ்ச்சி கள், உலக சரித்திரத்தில் ஏராளமாக நடை பெற்றிருக்கின்றன!''

''அது என் காலத்தில் இருக்கக்கூடாது என்பது தான் வேந்தரே என்னுடைய கருத்து!''

''உனக்காக வேண்டுமானுல் நாளை இது பற்றிக் கலந்து ஆலோசிக்கலாம்! வா, ரகுநாதா! நித்திரைக்கு நேரமாகவில்லை?''

விஜய ரகுநாத நாயக்கன் மெல்ல எழுந்தான். அப்படி எழும்போது அவன் அணிந்திருந்த ஆபரணங்களெல்லாம் சலசலத்தன. மனத்திலிருந்த சலசலப்புக்கு இவை சுருதி சேர்ப்பனபோலிருந்தன.

சிறைக் கூடத்திலிருந்து சோக கீதம் இன்னும் கேட்டுக்கொண்டே இருந்தது. 'அபரஞ்சி அழகி மட்டுமல்ல, இசைவாணியாகவும் இருக்கிருள்'—ரகுநாதனுடைய மனம் தன்னுள் முனகிக்கொண்டது. அவனுடைய விசித்திரமான மனப்போக்கினை எண்ணி, உள்ளுக்குள் வியந்தவராய் முன்னே நடந்துகொண்டிருந்தார் விஜய குலவேந்தர் வேங்கிடபதிராயர்.

## காவிய நாயகன்

பொழுது வண்ணமாக விடிந்தது. பத்து நாழிகைகள் கழித்தே ரகுநாத நாயக்கன் துயிலெழுந்தான். அவனுக்கான எல்லாப் பணிகளும் சகல மரியாதைகளுடன் நடைபெற்று முடிந்தன. காலை உணவருந்த, வேந்தர் வேங்கிடபதியே நேரில் வந்தழைத்தார். ரகுநாதனுக்கு எண்ணமெல்லாம் சிறைக் கோட்டத்திலிருந்தது. அதை வெளியே காட்டிக்கொள்ளாதவனாய் உடன் சென்றான்.

சிறியதானாலும், அழகுற அமைந்த விருந்து மண்டபத்தில் இருவரும் அமர்ந்தனர். பரிசாரகன் பல வகையான பண்டங்களைப் பரிமாறினான். ஏதோ முறைமைக்கு உண்ணுபவன் போல் காணப்பட்டான் ரகுநாதன். வேந்தர் இதனைக் குறிப்பாலுணர்ந்து கொண்டார்.

"ரகுநாதா! அபரஞ்சியைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?"—வெட்ட வெளிப்படையாகவே, குறிப்பால் உணர்ந்ததன் பேரில் பேச்சைத் தொடங்கினார் வேந்தர் வேங்கிடபதி ராயர்!

"நினைக்க என்ன இருக்கிறது? நான் அவளை நேரில் சந்திக்கவேண்டும். பிறகுதான் முடிவைப்

பற்றிக் கூறமுடியும்!"—ரகுநாதன் பற்று இல்லாதவன் போலக் காட்டிக்கொண்டான். உண்மையில் அவனுக்குப் பற்றிருக்கத்தான் செய்தது. அபரஞ்சியை அடையவேண்டும் என்று, அவன் ஒரு காலத்தில் ஒவ்வொரு இரவிலும் கனவு கண்டதுண்டு. அந்தக் காலத்தில், இத்தனைக்கும் செஞ்சி அரசன் கிருஷ்ணப்ப நாயக்கன் நல்லுறவிலும் இருந்தான். ஆனால், இந்த அபரஞ்சிக்கு என்ன வந்துவிட்டது? ஏன் மறுத்தாள்? எதில் குறை கண்டாள்? இதைத்தான் ரகுநாதன் அறியத் துடித்தான்.

உணவும் முடிந்தது. இருவருமாக விருந்து மண்டபத்தைவிட்டு வெளியே வந்தனர்,

"வேந்தே! தஞ்சைப் படைகளைப் பார்வையிட்டாகி விட்டதா? தளபதிகளுக்கு எந்தக் குறைவும் இல்லாமல் உபசாரம் நடைபெற்றுவரும் என்று நம்புகிறேன்!"

"ரகுநாதா! உன்னுடைய கடமைக்கு நீ கேட்டாய்! எனினும், அவர்கள் மூன்று தினங்களுக்கு முன் நடந்த போரில் என் மானத்தைக் காத்தவர்களாயிற்றே! அவர்களைக் காக்க எனக்குத் தெரியாதா? சரி, சரி! நீ போய் அரச உடைதரித்து, அலங்காரம் செய்து கொண்டிரு! இதோ நானும் தயாராகுகிறேன்! இருவருமாகச் சிறைச்சாலையைப் பார்வையிடச் செல்வோம்!',

"உடன் நம்முடையத் தளவாயையும் அழைத்துச் செல்ல விரும்புகிறேன்! அவரையும் அழைத்து வரும்படி ஆளனுப்புங்கள்!"

"அப்படியே செய்கிறேன் ரகுநாதா!"

வேந்தர் வேங்கடபதிராயர் விடைபெற்ருர். ரகுநாதனும் தன்னை வெகுவாக அலங்கரித்துக்கொள்ளும் வேக உணர்ச்சியுடன் அறையினுள் நுழைந்தான்.

நிலைக்கண்ணாடி பூரணப் பெரு மிதத்துடன் அவனை வரவேற்றது. கண்ணாடிகளுக்கும் ஓர் அதிர்ஷ்டம் வேண்டும்! எத்தனையோ அழகில்லாத அட்டகாசங்களிடமும், குறையுணராத குரூபிகளிடமும் இந்தக் கண்ணாடிகள் அகப்பட்டுச் சித்திரவதைகளை அனுபவிக்கின்றன! ரகுநாதனை வரவேற்ற கண்ணாடி மகிழ்ந்ததில், சத்தியமான பொருளிருந்தது.

காமவேள் மதனை வெல்லக் கூடிய அளவுக்குத் தன்னை அலங்கரித்துக் கொண்டான் ரகுநாதன். கேவலம், ஒரு சிறைக் கூடத்துக்குச் செல்லுகிறேம் என்ற நினைவே அவனுக்கில்லை. ஏதோ நகரவலத்துக்குப் புறப்படும் அழகுத் தோரணையுடன்தான் அவனுடைய நினைவு காணப்பட்டது. எந்த விதத்திலும் ரகுநாதன் மிக உயர்ந்தவனுக இருந்தாலும், இந்த வகையில் பலவீனமானவனே! பெண்கள் விஷயத்தில், எந்த ஆணும் பலவீனப்பட்டுப் போய் விடுவதுதான் மரபா? இல்லை, இயற்கையின் விதியா? மிகப் பெரும் 'மல்லன்கூட ஒரு ரோஜாப் பூவை எத்தனை மென்மையாகப் பறிக்கிருன்—நுகர்கிருன்!

அலங்காரங்கள் முடிந்தன. வெளியிலிருந்து வேந்தர் வேங்கிடபதிராயர் குரல்கொடுத்தார். நெஞ்சத்தை மகிழ்விக்கும், தஞ்சை மாநகர வேந்தன் —வெஞ்சமர்ச் சிங்கம்—கொஞ்சிடும் இசைக்கோன் விஜய ரகுநாத நாயக்கன் வெளியே வந்தான்! அவனைக் கண்ட ராயர் அயர்ந்து நின்றுவிட்டார்!

இவன் சிறைச்சாலைக்கு வருகிறானா? இல்லை, சந்திரகிரி வீதிகளில் சிங்காரப் பவனிவரப் புறப்பட்டானா?

எத்தனை அரசவீறு கொண்ட தோற்றம்! மலர்க் கணை மன்னனும் மன்மதனை, இவனிடம் என்ன செய்ய முடியும்? முடிதரித்த அந்த முகத்திலே ஒளிக்கக்கும் பிறை நிலாத் திலகம், சந்திரகிரிக்கு எடுத்து காட்டாகத் திகழ்கிறதா? வைர வைடூரிய ஆபரணங்கள், தஞ்சைமா நகரின் செல்வ வளங்களை எடுத்தோது கின்றனவா?

வியந்த வேந்தர் விளக்கம் கேட்காமல் பின் நடந்தார். ஆயினும், ரகுநாதன் முன்னே நடந்து கொண்டே கேட்டான்: "வேந்தரே! நான் எப்படி இருக்கிறேன்?"

என்ன பதில் சொல்வார் விஜய வேந்தர்?

"ரகுநாதா! நீயே ஒரு காவிய நாயகன்! நீயும் ஒரு காவியம் போலத்தானிருக்கிறாய்!"

"இல்லையா?"

"ஆமாம் ;காவியம் பெண்ணுக்குத்தான் உவமைப் பொருள்!"

"ஏன்? அது ஆணுக்குப் பொருந்தாதா? இல்லை, காவியங்களில் ஆண்கள் இடம்பெறுவதில்லையா? தஞ்சைபுரிவாசா! பலவீனமான கண்களுக்குத்தான் பெண்கள் காவியம், ஓவிய மெல்லாம்! உண்மையில் சொல்லப்போனால், பெண்களும் ஆண்கள் மாதிரியே எண்ணுகிறார்கள்! அவர்களுடைய உணர்ச்சி, ஆண்களை விடப் பன்மடங்கானது. நல்ல ஆண்

மகனைக் கண்ட எவளும், அவனைக் காவியத்துக்கு மேலாக ஒப்பிட்டே தீருகிருள்! நீயும் அப்படித்தான்!"

"இல்லையே! அப்படி ஒப்பிட்டிருந்தால் அபரஞ்சி என்னை ஒதுக்கி இருக்கமாட்டாளே!"

"அது அவளுடைய கண்களின் குற்றம்; இல்லை யென்ருல் மனக் குற்றம்!"

"இதைத் தெரிந்துகொள்ளத் தான் இப்படியான இந்த அலங்காரம்!"

"புரிகிறது, ரகுநாதா! நன்ருகப் புரிகிறது!"

ரகுநாதன் அலட்சியமாகச் சிரித்தபடி, "ஆமாம்; தளவாயை அழைத்துவரச் சொன்னேனே!"

"மலையழகைச் சுற்றிப் பார்க்கச் சென்றி ருக்கிருராம்!"

"மலைகள் சூழ்ந்த சந்திரகிரி, கண்களுக்கோர் விருந்துதான்! என் தளவாயும் ஒருகலா ரசிகன்!"

வேந்தர்கள் இருவரின் வருகையைக் கண்டு, சிறையதிகாரி பதறியடித்துக் கொண்டு எதிரே வந்து வரவேற்ருர். சிறைக்கூடத்தின் காவலர்கள் மரியா தைச்செலுத்தி நின்ருர்கள். அவர்கள் அனைவருமே தஞ்சை நாயக்கன் ரகுநாதனைக் கண்டு மோகம் நிறைந்த விழிகளுடன் வியந்தனர். 'ஆஃகா! என்ன அழகு! என்ன அழகு! கொள்ளை யழகு'

அபரஞ்சி அடைக்கப்பட்டிருந்த சிறையறையின் முன்னே வந்து நின்ருர், வேந்தர் வேங்கிடபதி ராயர். ஆனால், ஆங்கே...

சிறைக் கதவங்கள் திறந்திருந்தன. உள்ளே அபரஞ்சியைக் காணேம்!

3

# பழியோ? சோதனையோ?

"பிரபோ! வழக்கப்படிக் காலைக் கடனை முடித்துவரக் காவலுடன் சென்றிருக்கிறார்கள் அபரஞ்சி"—சிறைத் தலைவர் சிரம்தாழ்த்திப் பதில் சொன்னார். வேந்தர் வேங்கிடராயரும், தஞ்சை வேந்தன் ரகுநாதனைச் சிறைக் கோட்டத்துத் தனியறை நோக்கி அழைத்துச் சென்று அமரசெய்தார். ரகுநாதனுடைய உள்ளத்தில் போராட்ட அலைகள் பெரிதாக விரிவதும், அடங்குவதுமாகக் காணப்பட்டன! அபரஞ்சியின் அகத்தின் மறைவை இன்று எப்படியும் அறிந்துகொள்ள வேண்டும்; அத்துடன் அவள் மட்டும் தான் அழகியா? இல்லை, ரகுநாதனும் அழகன்தானா? என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டுமே! அவளுடைய பொருளற்றச் செருக்கைப் புதைக்க இதுவே நல்ல தருணம்!

"ரகுநாதா! ஒன்றை நான் தெரிந்து கொள்ளலாமா? சிறைப் பார்வைக்குப் புறப்பட்ட உனக்கேன் இந்தச் சித்திர அலங்காரம்?"-வேங்கிட பதி ராயர் வினயமாகக் கேட்டார்.

தஞ்சைவேந்தனின் உதடுகள் ரோஜாமொட்டின் மலர்த்தொடக்கம் போன்று மெல்ல விரிந்தது. கரிய பெரிய கண்கள் பொருளுணர்வோடு விஜய ராயரை

நோக்கின. "வேந்தே! காரணத்தோடுதான் இந்த மன்மத அலங்காரத்துடன் புறப்பட்டேன்! அபரஞ்சி யின் அழகு நாணலைப்போல் அமிழ்கிறதா? இல்லை, மயிலின் கழுத்தைப்போல் நிமிர்கிறதா என்பதை அறியத்தான்."

"விநோதமான விஷப்பரீட்சை!"

"வேடிக்கையான விஷப்பரீட்சையும் செய்யப் போகிறேன்! பார்க்கத்தானே போகிறீர்கள்!"

இதற்குள் சிறைத்தலைவர் வந்து அபரஞ்சி திரும்பி விட்டதாகச் செய்தியறிவித்தார். இருவரும் எழுந்தனர்; சிறைநோக்கி நடந்தனர்.

அபரஞ்சி அடைபட்டச் சிறைக் கதவங்களைப் பணியாளன் ஒருவன் பூட்டிக் கொண்டிருந்தான். அதனைக் கவனித்த ரகுநாதன், தொலைவில் வந்த வண்ணமாகவே சிறைக் கதவங்களைப் பூட்ட வேண் டாம் என்று சமிக்ஞை செய்தான். அவ்வண்ணமே அந்தப் பணியாளன் பூட்டாமல் திறவு கோலை இடுப்பில் செருகிய வண்ணம், வணங்கி அகன்றான். உள்ளே சென்று உடைமாற்றத் தொடங்கிய அபரஞ் சிக்குப் பணியாளனுடைய போக்குப் புதிரைக் கிளப்பி யது. 'ஏன் இந்தப் பணியாளன் கதவங்களைப் பூட் டாது விட்டுச் செல்லவேண்டும்? இவனுக்கென்ன பைத்தியமா? இல்லை மறதியின் காரணமா?'

உடையைக்கூட மாற்றாமல் அவள் வெறிதது நோக்குவதற்கும், அதற்குள் அங்கு வேங்கிடபதி ராயரும், ரகுநாதனும் வந்து நிற்பதற்கும் சரியாக இருந்தது. காரணத்தைப் புரிந்து கொண்ட அபரஞ்சி, தன்னிலையை மறந்தாள். தான் எந்த உடையில் அப்

போது இருக்கிறோம் என்பதை மறந்து விட்டாள். எதிரே நிற்பவர்கள் ஆடவர்கள் என்பதையும்கூட மறந்துவிட்டாள் என்றுதான் சொல்ல வேண்டும்! அவள் யாரை இப்படி உற்று உற்று நோக்குகிறாள்? வேங்கிடபதி ராயரையா? சே! அவளுக்கென்ன பைத்தியமா?

மன்மதநாயகனாக எதிரே பளிங்குப் பதுமைபோல் அசையாமல் நின்றிருந்த தஞ்சைபுரி வேந்தன் ரகு நாத நாயக்கனைத்தான் அவளுடைய அஞ்சன விழிகள் விழுங்கிச் சுவைத்துக் கொண்டிருந்தன. அவள் எதிர் பாராதக் காட்சி அது! அவள் எதிர்பாராத வருகை அது! அவள் எதிர்பாராத தரிசனம் அது!

தோகை இமைகள் படபடத்தன. கருவிழிகளில் ரகுநாதன் நின்ற கோலத்துடன் குடிபுகுந்து சிலை யாகப் பதிந்தான்.

அபரஞ்சியின் அந்த மருட்சியை எத்தனை நேரம் தான் ரகுநாதன் மௌனமாக நின்று கவனித்தானோ! அவனுக்கே அது தெரியாது. "ரகுநாதா! நான் சற்று நேரம் வரை விடைபெறலாமா?" என்று விஜயராயர் குரலெழுப்பிய பிறகுதான், ரகுநாதன் தன்னுணர்வு அடைந்தான். அவன் மட்டும்தானா? அபரஞ்சியும் தான். உடனே அவள் உடை மாற்றிக்கொள்ளத் துடித்து முயன்றாள்! எப்படி முடியும்? எதிரே துவாரக பாலர்களைப் போல இருபுறமும் இரு ஆடவர்கள் நிற்க—அவள் எப்படித்தான் உடையை அவிழ்த்து மாற்றிக்கொள்வாள்? அவளுடைய புழுவான துடிப்பு நிலையைக்கண்ட வேங்கிடபதி ராயர் "ரகுநாதா! கொஞ் சம் பொறுத்து வரலாமே!" என்றார். ரகுநாதன் மெல்லச் சிரித்துக் கொண்டான். "இப்போது என்ன

வந்துவிட்டது?'' கொஞ்சம்கூட புரிந்துகொள்ளாமல் கேட்கிருனே இந்த ரகுநாதன்! "தஞ்சை நாயகர் அபரஞ்சி..." என்று அவர் முடிக்கவில்லை; இடை புகுந்த ரகுநாதன், "புடமிட்ட தங்கம்போல் இருக்கிருள்!" என்று கூறி முடித்தான். 'அபரஞ்சி' என்ற பெயருக்கும் அதுதான் சரியான பொருள்!

"அபரஞ்சி! நலம்தானே?" தூய தெலுங்கில்தான் அவளிடமும் கேட்டான் ரகுநாதன்.

அபரஞ்சி நாணித் தலைகவிழ்த்தாள். அவள் என்ன பதில் சொல்வாள்? சொல்லமுடியும்? அதுவும் சிறையில் அடைபட்ட அந்தப் பொன் சிட்டுக்கு நலம் என்ன வேண்டிக் கிடக்கிறது?

'என்ன அபரஞ்சி? காதுகளுக்கு வயதாகி விட்டதா? இல்லை, அவற்றுக்கும் செருக்கேறி விட்டனவா?" ரகுநாதன் கேள்விக்கு அபரஞ்சியின் அஞ்சனவிழிகள் பதில் கூறும் முகாந்திரமாக ஏறெடுத்து நோக்கின. முத்து முத்தாக நீர் கோவை யிட்டது!

"கண்கள் குளிக்க மறந்து விட்டனவா?"

அபரஞ்சி கண்களைத் துடைத்துக் கொண்டாள். அப்போது அதுவரை அசையாமலிருந்த அவளுடைய அங்கங்கள் தென்றல் தூதுவனின் மெல்லிய விரல்கள் பட்டதும் அசைந்து கொடுக்கும் பூங்கொத்துக்களாய் அழகு காட்டின. மார்பில் கச்சையணியாமல் வெறுமனே மேலாக்கணிந்து கொண்டிருந்ததால், அவளுடைய சந்தன இளம்மேனி,ஈரம் உலராதக் காரணத்தாலும் காலைக் கதிரவனின் கிரணங்கள் அதை மெழுகிக் கொண்டிருந்ததாலும் அசல் புடம்போட்டத் தங்க

மாகவே ஒளி வீசியது. தும்பைப் பூவினும் வெண்மை யான பாலாவித் துகில் போர்த்திய அந்தப் போதை நிறைந்த இளமைத் தேகத்தை, இன்றைக்கெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம் போலத் தோன்றியது ரகுநாதனுக்கு. ஆனால், முதுகிழவர் வேங்கிடபதிராயர் மட்டும் சிறையருகே நின்றிருந்தாரே தவிர கண்கள் வேறெங்கோ மேய்ந்து கொண்டிருந்தன! அது அவ ருடைய கிழட்டுச் சபலத்தைக் காட்டியதாக எண்ண வேண்டாம். வயதின் முதிர்ச்சிப் பண்பையே அது காட்டியது. இந்த இருவருடைய நிலையையும், கணீ ரென்ற அபரஞ்சியின் குரல் கலைத்தது: "தஞ்சைபுரி வேந்தே! இந்த அபாக்கியவதியைப் பழிவாங்க வந்தீர் களா? இல்லை, சோதிக்க வந்தீர்களா?" கண்களில் நீர் அருவியாகப் பாய்ந்தது. அந்தச் சலசலப்பில் சோகத் தின் மெல்லிதான இசை, நுட்பமாக—மிக நுட்பமாகக் கேட்டதை ரகுநாதன் மட்டுமின்றி வேங்கிடபதி ராயரும் உணர்ந்தார்.

# இறைவன் விட்ட வழி

தஞ்சை நாயக்கன் ரகுநாத போஜன் இளநகைப்புடன் ஏறெடுத்துப் பார்த்தான்.

"அபரஞ்சி! நான் எப்படி வந்தால் உனக்குப் தருமமாகப் படுகிறது?"

"எப்படி வந்தாலும் தருமமே! ஆனல், நான் இந் நிலையில் இருக்கும்போது தாங்கள் பிடிவாதமாக வந்து நிற்கிறீர்களே...இதுதான் தருமமல்ல என்ப தைப் பணிவோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன்!"

இந்தப் பதிலுக்கான பொருள்? எளிதில் விளங்கிக் கொள்ள முடியாத அளவுக்கல்லவோ இவளுடைய பேச்சு அமைவு பெற்றிருக்கிறது...

"இந்நிலையில் என்றல்...? அபரஞ்சி! நீ சிறைப் பட்டிருக்கும் இந்நிலையில் நான் உன்னை வந்து பார்த் தது கொடுமை என்கிருயா?"

"இல்லை; சிறையும், அரண்மனையும் ராஜ குடும் பங்களுக்குப் பேதம் கொண்ட இருப்பிடங்களாக எனக்குப் படவில்லை. இது நான் எதிர்பார்த்ததும் கூட! ஆனல், ஒரு பெண், குளித்து முடித்து அவ ளுடைய இளமை நிரபராதியாக அவமானச் சிறை பூண்டிருக்கும்போது, அலங்காரத் திருக்கோலம்

கொண்டு ஓர் ஆடவர் எதிரே நிற்பதுமல்லாமல், சோதனையாகவும், பழியாகவும் பேசுவது தருமம் ஆகாது என்பதைத்தான் சூசகமாகக் குறிப்பிட்டேன்!''

தஞ்சை நாயக்கன் கலகல வென்று சிரித்தான். தன் குற்ற முணர்ந்து அவன் நாணுவான் என்றுதான் அபரஞ்சி எதிர்பார்த்தாள். ஆனால், ரகுநாதன் அப்படி யில்லாமல் அகம்பாவமாகச் சிரிக்கிறானே!

''அபரஞ்சி! நீயும் அலங்கரித்துக் கொள்ள வேண்டும் என்று விழைகிறாயா? அதுவும் சிறைக் கூடத்தில்?''

''ஏன்? நான் அலங்கரித்துக் கொள்ளக்கூடாதா? எனக்கு அழகில்லையா? என் உடலுக்குத்தானே சிறை? என்னுள்ளத்துக்கோ, அழகுக்கோ அல்லவே?''

''அப்படியென்ன பிரமாதமாக உன்னால் அலங் கரித்துக் கொள்ள முடியும்? அபரஞ்சி! உன் நோக்கம் எனக்குப் புரிகிறது! சரி! உனக்கு நான் கடைசிச் சந்தர்பபமாக எதையேனும் செய்ய வேண்டும் என்ற நோககத்துடன வந்திருக்கிறேன்! நீ விரும்பியதைக் கேள்!''

அபரஞ்சியின் இதயம் நன்றாக விழித்துக் கொண்டது. சரி இதுதான் அரிய வாய்ப்பு! இதை வீணில் பயன் படுத்தாமல் விட்டுவிட்டால், தன்னை விட முட்டாள் வேறு யாரும் இருக்க முடியாது.

''அரசே! நான் கேட்டால் அட்டியின்றி அந்த வரத்தைக் கொடுப்பீர்களா?''

''நிச்சயம் தருவேன்!''

''எதைக் கேட்டாலும்?''

"உன் பொருட்டு!"

"சரி! கேட்குமுன ஒன்றைச் சொல்லேன்! நான் ஒரு சிறைக் கைதி அபரஞ்சியாக வரம் கேட்கவிரும்ப வில்லை செஞ்சியின் இளவரசியாக வந்து நின்று வரம் கேட்க விரும்புகிறேன்!"

'போதுமா?"

"மற்றும் ஒன்று!"

"என்ன அது?"

"தங்களை வரம் கேட்குமுன்னம் நான் எனது தந்தையைக் காண வேண்டும். செஞ்சி இளவரசி அபரஞ்சியை முழுக் கோலத்துடன் என் தந்தை கிருஷ்ணப்ப நாயக்கர் காணவேண்டும். ஏனென்றால், நான் கேட்கும் வரத்தின் காரணமாக மீண்டும் என் தந்தையைக் காணமுடியாத பாக்கியம் ஏற்பட்டாலும் ஏற்படலாம்!"

தஞ்சை வேந்தன் ரகுநாத நாயக்கனுக்கு ஒன்றுமே புரிபடவில்லை. இந்த அபரஞ்சியின் நோக்கம் புதிராக இருக்கிறதே! 'மீண்டும தந்தையைக் காண முடியாத அபாக்கிய வதியாகலாம்' என்றால்...

நான் நினைப்பது ஒன்று; நடக்கப் போவது வேறாகப் போய்விடுமோ? ஒருவிதத்தில் வரம் கேட்கத் தூண்டிய தன் முதற்பகுதி நினைத்ததுபோல் நடந்தது. அது: அவளும் தனக்கு நிகராக அலங்கரித்துக் கொள்ள விரும்புகிறாள் என்பதுதான். அவளும் தான் ரதிகோலத்தில் வந்து நிற்கட்டுமே, பார்த்துவிடலாம் என்று எண்ணிய அந்த முதற்பகுதி நிறைவேறியது சரியே! இவள் அடுத்து தந்தையைக் காண வேண்டும்

என்றும், அப்படிக் காணுமல்போனால், மீண்டும் சந்திக்கும் பாக்கியம் ஏற்படுமோ, ஏற்படாதோ என்றும் பேச வேண்டியதன் நோக்கம்?

தஞ்சை நாயக்கன் ரகுநாதனைப் போன்ற நிலையே அதுவரை நடப்பனவற்றைக் கவனித்துக் கொண்டிருந்த விஜயராயர் வேங்கடபதி வேந்தர்க்கும் ஏற்பட்டது. ஏதோ நடக்கப்போகிறது .. அது மங்கலமாகவும் இருக்கலாம்! அமங்கலமாகவும் இருக்கலாம்!

வேங்கிடபதிராயரிட மிருந்து மெல்லிதான ஒரு மூச்சு ஓசைபட எழுந்து அடங்கியதை ரகுநாதனும் சவனித்தான். கிழவர் ஏதோ ஒரு கிறக்கத்தில் தன்னை மறந்து, பயந்தோ, வியந்தோ மூச்சு விடுகிறார் என்று தன்னுள் எண்ணிக்கொண்டான் தஞ்சை வேந்தன்.

"அபரஞ்சி! உன தந்தையை நீ அவசியமாகக் கண்டுதான தீரவேண்டுமா?"

"என் வரத்தின் முக்கிய நோக்கமே அதில்தானே இருக்கிறது? தாங்கள் விரும்புகிறீர்களோ, இல்லையோ நானறியேன். ஆனல், தாங்கள் தான் இந்த சிறைப் பறவைக்கு வரம் கொடுக்க நாடி வந்தீர்கள்; நான் கேட்டேன்!"

அபரஞ்சிதான் எததுணைத் திறமையாகப் பேசுகிறாள்! இந்த ரகுநாத நாயக்கன் அவளிடம் தலை குனியத்தான் போகிறான்! இவளால் ஏதோ ஒரு பயங்கரச் சூழல் உருவாகவே, ரகுநாதனை விதி சிறைக் கூடம் நோக்கி அழைத்து வந்திருக்கிறது! இல்லையென்றல், சிறைப் பார்வைக்குச் செல்லுகிறோம் என்பதை உணராமல் மன்மதக கோலம் பூண்டிருப்பானு இவன்?

ஏதோ, அபரஞ்சியைப் பழிவாங்கிச் செருக்கை யடக்க வேண்டும் என்று புறப்பட்ட இவன், தன்னைத் தானே பழிவாங்கிக் கொண்டும், செருக்கை யடக்கிக் கொண்டும் திரும்பப் போகிருனே என்னவோ?—

வேங்கிடபதிராயர் தம்முள் இவ்வாறெல்லாம் எண்ணிப் பொருமிக் கொண்டிருந்தார். இவன் இப்படித் தத்துப் பித்தென்றுஏதேனும் நடந்துகொள்ள நேரிடில, பெரும் ராஜதந்திரியும், மாவீரரும், தஞ்சை மகாப் பிரதானியுமான கோவிந்த தீட்சதர்க்கு என்ன பதில் சொல்ல முடியும்? பெயரைக் கேட்ட மாத்திரத்தில் தட்சிணப் பீடமே நடுநடுங்கும் பெரியவராயிற்றே அவர்! பதினேழாம் நூற்ருண்டின் சாணக்கியப் பெருமானுயிற்றே! சாணக்கியர் அர்த்தசாஸ்திரி! இவரோ சகல கலா சாஸ்திரியாயிற்றே!

விஜயராயர் கலக்கமுற்ருர்.

வெகு நேரம் வரை சிந்தித்த தஞ்சை வேந்தன் ரகுநாத நாயக்கன், அழகு நல்லாள் அபரஞ்சி விரும்பிய வண்ணமே உத்தரவளிக்க விஜயராயர் வேங்கிடபதி வேந்தரை வேண்டினன். தம்முடைய அரசமானத்தைக் கழுவியவனும், சுல்தான்களின் சிம்ம சொப்பனக்காரனுமான ரகுநாத நாயக்கனுடைய இந்த வேண்டுதலை நிராகரிக்க முடியாமல், அவ்வண்ணமே ஆணை பிறப்பித்தார் வேங்கிடபதிராயர்.

வேல் தாங்கிய இருகாவலர் சூழ அரண்மனையின் அலங்கார மாடம் நோக்கி அழைத்துச் செல்லப் பட்டாள் அபரஞ்சி. அப்படி அவள் சொல்லும்போது வேலினும் கூரிய இரு ஆயுதங்கள் ரகுநாதனைத் தாக்கிச் சற்றே உலுக்கவும் செய்தன! அந்தக் கூரிய

விழிகளுக்குத் தான் எத்துணை காந்தசக்தி! எத்துணை மிருதுவான வலிமை!

தஞ்சை வேந்தன் ரகுநாதனும், விஜயராயரும் மீண்டும் தனியறை நாடிச்சென்று அமர்ந்தனர். வெகு நேரம் வரை அமைதி இருவரையும் விழுங்கிக் கொண்டிருந்தது. மனத்தில் குமைந்த எண்ணத்தை வெளியிடாவிட்டால் தலையே வெடித்துவிடும் போலிருந்தது வேங்கிடபதிராயருக்கு!

"தஞ்சைபுரிவாசா! உன்னுடைய இந்த விஷப் பரீட்சை முடிவில் உன்னையே விழுங்கிவிடுமோ என்று ஐயுறுகிறேன்!"

விழித்த நோக்கலுடன் கூறிய விஜயராயரை, வெகுநேரம்வரை கூர்ந்து கவனித்த தஞ்சைநாயக்கன், பொறுமையாகச் சொன்னான்:

"விஷத்தைச் சிருஷ்டிப்பவனுக்கு அதை முறிக்கவும் தெரியும்!"

"என்னமோ! இறைவன் விட்ட வழி!"

"ராயரே! ஒன்றுக்கும் கவலைப்பட வேண்டாம்! அபரஞ்சி, விடுதலையைத்தான் கோருவாள். நானும் அவளை மட்டும் விடுவிக்கவேதான் வந்திருக்கிறேன்! ஆனால், அதற்கு முன்னம் அவளை என் காலடியில் வீழ்த்தித்தான், விடுதலை செய்யத் தங்களை உத்தரவு கோருவேன், என் வெற்றியின் பெயரால்!"

விஜயவேந்தர் மலைத்து நின்று விட்டார்! அவருடைய மலைப்பாவது இந்தவிதத்தில் ஒப்புக் கொள்ளக்கூடியதே! வேறு விதத்தில் விடுதலை கோரும் முகாந்திரமாகத் திரும்ப விருக்கும் அபரஞ்சியின் முடிவைக் கேட்டு, மலைத்து நிற்கப்போகிறானே ரகுநாதன்; அதுவல்லவோ சுவையான கட்டம்!

# தந்தையும் மகளும்

சிறைக்கோட்டம் முழுவதும் அந்தச் செய்தி அதற்குள் எப்படித்தான் பரவியதோ?

ஆச்சரியம்தான்! மேலும் மேலும் ஆச்சரியப்பட்டுக்கொண்டிருந்தான் வடக்குத்திசைச் சரிவைச் சார்ந்த ஒரு சிறையில் அடைபட்டுக் கிடந்த கிருஷ்ணப்ப நாயக்கன்—செஞ்சியின் முன்னாள் அரசன்—அபரஞ்சியின் அருமைத்தந்தை! 'அபரஞ்சிக்கு ஏற்பட்ட இந்தச் சோதனை ஏதாயிருக்கும்? எதற்காக இவள் தன்னை அலங்கரித்துக் கொள்ள விழைந்தாள்? மன்னனை மயக்கித் தன் பலவீனத்தை வெளிப்படுத்தும் அளவுக்குப் புத்திசாலித்தனமான மூளை அவளுக்கு எப்படி உதயமாகி இருக்க முடியும்? ஏன் இந்த எண்ணம் அவளுக்கு முதலில் ஏற்பட்டது? அவளுக்குத்தான் அப்படி ஏற்பட்டதென்றாலும், அவளை அலங்கரித்துக்கொள்ள அனுமதித்ததுமல்லாமல், அலங்கார வசதிகளை வேறு வேங்கிடபதிராயர் கவனித்திருக்கிறாரே! என்ன வியப்பான செய்தி இது?'—

கிருஷ்ணப்ப நாயக்கனுடைய சிந்தனை இவ்வாறெல்லாம் அலை மோதிக் கொண்டிருந்தபோது சிறைப் பணியாளன் ஒருவன் வந்து தலை வணங்கி நின்றான். குற்றவாளியானாலும் ஒரு நாட்டரசனை எப்படி மதித்து

நடத்த வேண்டும் என்ற பண்பாடு தென்னாட்டுக்கே அந்நாளில் ஒரு தனிச் சொததா யிருந்தது. அந்தப் பண்புப் பயிற்சியின் வழிவந்த சிறைப் பணியாளனும் செய்தியை அறிவித்தான் : "ஐயா! தங்கள் திருக் குமாரத்தி தங்களைக் காண வருகிறார்கள்!"

'அரசே' என்று அழைக்கப்பட்டவன், 'ஐயா' என்று அழைக்கும் நிலைக்கு வந்துவிட்ட காலநிலையை எண்ணி, மனக் கண்ணீர் விட்டான் கிருஷ்ணப்ப நாயக்கன். எனினும், மகள் வருகிறாள் என்ற தேனைச் செய்தி கண்ணீர்விட்ட மனத்தைச் சற்றே தேற்றியது

சிறைக் கம்பிகளைப் பிடித்துக்கொண்டான் கிருஷ்ணப்ப நாயக்கன். அனுடைய சிவந்தவிழிகள், இப்படியும் அப்படியுமாக நோக்கின. எப்பக்கத்தின் வழியாக அபரஞ்சி வருகிறாள்?—காலின் சதங்கை யோசை மட்டும் 'கலீர்கலீர்' என்று ஒலித்துக் கொண்டிருந்தது! அதோ, அபரஞ்சியும் தென்பட்டுவிட்டாள்! ஆ.ஃகா! அபரஞ்சியா அவள்? கிருஷ்ணப்ப நாயககனுடைய அருமந்த புதல்வி அபரஞ்சியா அவள்? செஞ்சி நாட்டின் வஞ்சிக்கொடியா அவள்? அடடா! என்ன அழகு... கொள்ளையழகு! என்ன கம்பிரம்...மயிலின் கம்பீரம்!

'வானுலகிலிருந்து வழிபிரிந்து பூவுலகுக்கு வந்து விட்ட அப்பரஸ்தான் இவளோ' என்று ஆச்சரியப் படத்தக்க அளவுக்குத் தன்னை அலங்கரித்துக் கொண்டு, 'இவள் நடைக்கு முன்னே அன்னம் வெட்கும்' என்று சொல்லத்தூண்டும்வகையில் நடந்து வரும் காட்சியை இன்றைக்கெல்லாம் பார்க்கலாம் போல் தோன்றியது. ஏன் இந்த அலங்காரம் இவளுக்கு?

அருகே வந்தாள் அப்சரஸ் அபரஞ்சி!

தந்தை என்ன பேசுவது...எதைப்பேசுவது என்று புரியாமல் திகையாய்த் திகைப்பதைக் கண்டு, கொஞ்சமும் தயங்காமல் கலகலவென்று நகைத்துவிட்டாள் அபரஞ்சி. அடுத்து சொன்னாள்: "அப்பா! என்னை ஆசீர்வதியுங்கள்!"

என்ன! இவளை ஆசீர்வதிப்பதா? ஏன்? எதற்காக?

"ஏனப்பா, திகைக்கிறீர்கள்?"

"ம்...ஒன்றுமில்லையம்மா...ஒன்றுமில்லை! திடீர் என்று ஓர் அப்சரஸ் போல் அலங்கரித்துக் கொண்டு என் எதிரே வந்து, 'ஆசீர்வதியுங்கள் அப்பா' என்றால் எனக்கு ஒன்றுமே புரியாமல் போனதில் ஆச்சரியமில்லையல்லவாம்மா? உண்மையில் சொல்லப்போனால் உன்னுடைய அலங்காரத்தைக் கண்டு நான் என்னை மறந்துவிட்டேன்! நாம் செஞ்சியில் இருப்பதாகவே ஒரு பிரமை தட்டிவிட்டது."

"வெறும் பிரமையில்லையப்பா! நிஜமான நடப்புத் தான்!"

"என்ன சொல்லுகிறாய் அபரஞ்சி?"

"நடக்கப்போவதை!"

"விரிவாகச் சொல்லக்கூடாதா?"

"முதலில் ஆசீர்வதியுங்கள்!"

"தீர்க்க சுமங்கலியாக இருக்க வேண்டுமம்மா!"

"எதிர்பார்த்த ஆசீர்வாதமப்பா! நான் தஞ்சைபுரி வேந்தர் ஸ்ரீ.ஸ்ரீ.ஸ்ரீ. விஜயரகுநாத போஜ மகாராஜரை மணாளராகக் கொள்ளப்போகிறேன்!"

அபரஞ்சி இவ்வாறு கூறிமுடித்ததும், 'இவளுக்கென்ன பைத்தியமா பிடித்துவிட்டது' என்று நினைப்பதற்குப் பதிலாக, நாயக்கருக்கே பைத்தியம் பிடித்துவிடும்போலிருந்தது. விஜயரகுநாத நாயக்கனுக்கு இவள் மனைவியாகப் போவதா? நடக்கிற காரியமா இது? ஏன்? நடக்கக் கூடாது?

"என்னப்பா யோசிக்கிறீர்கள்?"

"இப்படி நடக்குமா என்று முதலில் யோசித்தேனம்மா! ஏன் நடக்கக் கூடாது என்று இப்போது யோசிக்கிறேன்! அம்மா! என் காதுகளை நமபலாமா?"

"என் அழகை நம்புங்கள்; என் புத்திச் சாதுர்யத்தை நம்புங்கள்!"

கொஞ்சம் கூட மனத்தில் மாசு மருவில்லாமல் தான் அவள் இப்படிக் கூறினாள். கிருஷ்ணப்ப நாயக்கனுடைய குறுக்கு மூளை கிறுக்குத் தனமாக எண்ணி விட்டது. சதியும், வஞ்சனையும் நிறைந்த அவனுடைய சிந்தனை மேலும் வேலை செய்யத் தொடங்கியது. 'என் அழகை நம்புங்கள்; என் புத்திச் சாதுர்யத்தை நம்புங்கள்'— எத்தனை சாணக்கியச் சுருக்கமான பதில் இது!

"அம்மா அபரஞ்சி! உன் அழகையும், புத்திச் சாதுர்யத்தையும் நம்புகையில் நான்...ம்...அந்தக் கனவு ஒருபுற மிருக்கட்டும். இப்போது நீ எப்படிக் காரியத்தைச் சாதிக்கப் போகிறாய்? எனக்கொன்றும புரியவில்லையே! ரகுநாதனே உன்னை மனைவியாகத் தேர்ந்தெடுத்து விட்டானா?"

அபரஞ்சியின் கண்கள் திடுமென்று கனன்றன. "அப்பா! நா காப்பது நல்லது. முன்பு தஞ்சை புரிவேந்தர் தங்களுக்குப் பகைவராக இருக்கலாம்.

இப்போது அவர் எனக்குக் கணவராகப் போகிறவர். அவரை மரியாதைக் குறைவாக 'அவன்' 'இவன்' என்று பேசுவதை என்னுல் தூளியும் அனுமதிக்க முடியாது. மேலும், அவர் ஒரு சாதாரணச் சிற்றரசர் அல்லர்! தென்னுட்டு மாவீரப் பெருமன்னர்! நினைவிருக்கட்டும்!"

மகளின் இந்த அழுத்தமான—அதட்டலான சொற் போரைக் கேட்டு கிருஷ்ணப்ப நாயக்கன் பல கணங்கள் அரண்டு, மருண்டு போனுன். அபரஞ்சியா இவ்வாறு பேசுகிருள்? நம்ப முடியவில்லையே!

"அப்பா! கொஞ்சம் கோபமாகப் பேசியதற்காக என்னை மன்னியுங்கள்! என்ன இருந்தாலும் தஞ்சை வேந்தர் தங்கள் மருமகனுர். அந்த மட்டில் கூட நினையாமல் மரியாதைக் குறைவாகப் பேசலாமா?"

"இன்னும் மருமகனுகவில்லையே அம்மா!"

"அவரை நான் என் மனத்தில் மணளராக வரித்து விட்ட பிறகு தங்களுடைய மருமகனுர்தானே அப்பா?"

"உண்மையம்மா, முற்றிலும் உண்மை! ஆமாம்... இது விஷயமாக நீ எப்படி..."

"எல்லாவற்றையும் பிறகு சொல்லுகிறேன்!"

"மீண்டும் இந்தச் சிறை நாடி அரசியாக வருவாயா'ம்மா?"

"இல்லை; தாங்கள் செஞ்சி அரசராகச் சந்திரகிரி அரண்மனையில் எங்களை நாடி வருவீர்கள்!"

"கிருஷ்ணப்ப நாயக்கர் பெரிதாக வியந்தார்.

அவள் மேலும் நேரம் கடத்த விரும்பாமல் விடைபெற்ருள். அப்படி விடைபெறும்போது, 'மனமே! நான் எண்ணியிருப்பதுபோல் நடத்தப் போகும் நாடகம் உருவாகுமா?' என்று கேட்டுக் கொண்டாள். கடைசியாகத் தான் வணங்கும் ஆதி பராசக்தி தேவியை வழிபட்டுக் கொண்டாள். அப்போது சிறையறிவிப்பு மணியோசை மும்முறை ஒலித்து அடங்கியது.

6

# யாரழகு பேரழகு?

ஏறத்தாழ ஏழு நாழிகை வரை காத்துக கிடந்த தஞ்சை விஜயரகுநாத பூபதியும், சந்திரகிரி வேங்கிடபதி ராயருமு தூரத்தே நூபுர வோசை கெட்டு முதலில் செவி தீட்டிப் பிறகு கண் தீட்டி எதிர்பார்த்தனர். ஆனுல், கேட்ட நூபுர வோசை அருகே, மிக அருகே வந்து...அதோ தொலைவில், மிகத்தொலைவில் போவானேன்? அந்த இனிய ஓசை இப்போது கேட்கக்கூட இல்லையே!

கண்கள் ஏமாற்றமாக இமைச் சிறகுகளை அசைத்துக் கொண்டன. அடடா! அபரஞ்சியின் பேரழகு எத்தன்மை வாய்ந்ததாக இருக்குமோ என்று எதிர்பார்த்த கண்கள்தாம் எதத்துணைக்கு ஏங்கி இரண்டை இரண்டு கவனித்துக் கொண்டன!

அபரஞ்சிதானே வந்தாள்! வந்தவள் மீண்டும் எங்கு நாடிச் சென்ருள்? அதற்குள் ஏதேனும் திட்டத்தை மாற்றிக்கொண்டாளா? ஒருவேளை தந்தையைக் கண்டு திரும்பியதில் மனமாற்றம் கண்டு விட்டாளா! கிருஷ்ணப்ப நாயக்கன் மகாவிஷமி என்பது தெரிந்ததுதான்! அந்த விஷமத்தனத்தைக் காட்டிவிட்டாளு?

சிந்தைக் குழம்பி காணப்பட்ட இருவரையும் ஒரு நிலைப்படுத்தினான் அப்போது வந்து வணங்கி நின்ற சிறைக்கோட்டத்துத்' தலைமைக் காவலன். "அரசே! அபரஞ்சி தேவிகாரு காராக்கிருகத்துக்குப் போய் விட்டார்கள்."

"என்ன!"—ரகுநாதன் வியந்தான். எனினும் எழுந்தான்; நடந்தான். பின்னே வேங்கிடபதிராயரும் தொடர்ந்தார்.

இருவரும் அபரஞ்சி அடைபட்டிருந்த சிறை நாடிச் சென்று நின்றனர். அவர்களுடைய கண்களை அவர்களாலேயே நம்பமுடியவில்லை. பளிச் பளிச் சென்ற மின்னல் .வெட்டு சிறைக் கதவுகளைப் பெயர்த்துக் கொண்டு வெளியேறுவது போன்ற ஒரு பிரமை! தேவகன்னிகை ஒருத்தி பூலோகப் பாவம் செய்து தண்டனை அனுபவிக்கிறாளோ என்ற ஒரு மாய நினைவு! தூய வெண்பட்டாடையும் கச்சையும் அணிந் திருந்தாள். இடுப்பில் வானநிறத் துண்டைச் சுற்றி முடிபோட்டுத் தொங்கவிட்டிருந்த கீழ்த் திசைப் பாணியின் கலவை, வெகு அழகாக இருந்தது. செவி களில் வைரச் சந்திர வளையத்தோடும், மூக்கில் நத்தும், நெற்றியில் பிறைச்சிட்டியும், கழுத்தில் சந்திர வளைய அட்டிகையும், கரங்களில் நட்சத் திரங்கள் பொறிக்கப் பெற்ற வளையல்களும், காலில் நூபுரங்களும் ஓர் அழகுக் காவியத்தையே படைத்துக் கொண்டிருந்தன. காமவேளின் பூந்தனுசை ஒத்த அவளுடைய அங்க அமைப்பு, கள்ளருந்தாப் போதையைத் தந்தன. அள்ளிச் செருகிய சித்திரக் கொண்டையில் ஒற்றை ரோஜா ஆனந்தமாகச்

சிரித்துக் கொண்டிருந்தது. செவ்விய • அதரங்கள் புன்னகையை அணிந்திருந்தன. நெற்றியிலே நிலாத் திலகம்! மை தீட்டிய கெண்டை விழிகளில் 'ரதியும் மன்மதனும்' அமர்ந்து இன்பத்தைப் பற்றிய 'உபந்நியாச' த்தில் மூழ்கியிருந்தனர். கோபுரக்கல சங்களாய்த் திகழ்ந்த மார்பகங்களின் கீழே பள்ள மாய்த் தொப்பூழ்வரை வளைந்து சரிந்த அமைப்பு நிலை, ஒரு தெய்வ மங்கையை நினைவுபடுத்தியது. கதலித் தொடையின் முழங்கால்வரைதான் ஏற்றமும் தாழ்த்தியுமாகச சேலை சரிந்து காணப்பட்டது. அதற்குக் கீழே, பிறந்த மேனியாகச் சந்தனக் கழல்கள் பொன்னுக மின்னிக்கொண்டிருந்தன. செம்பஞ்சுக் குழம்பால் பாதங்களைச் சித்திரமாகச் செய்திருந்தாள். ஆ.்.கா! அழகு என்றால் இதுதான் அழகு!—ரகு நாதனே—ரகுநாதனே என்ன, கிழவர் வேங்கிடபதி ராயரே ஓர் இனந்தெரியாச் சபலத்துடன் தம்முள் முனகிக் கொண்டார். இந்த எல்லா ரசனைகளும் அந்த ஒரு கண நேரத்தில் ஏற்பட்டு மறைந்தன. அடுத்த கணத்தில் நூபுர ஓசை கீதமெழுப்ப நடந்துவந்த அபரஞ்சி, சிறைக் கதவங்களின் உட்புறமாக இருந்த வண்ணமே முழங் காலிட்டுத் தலையைப் பூமியில் வைத்து வணக்கம் செலுத்தி நிமிர்ந்தாள். கயற் கண்களில் நீர் கரை தட்டிக் காணப்பட்டது அந்தக் காட்சி இரண்டு மீன்கள், கருவேல மரங்களைக் கரைகளாகக் கொண்ட குளத்தில் மெல்ல நீந்துவன போலத் தெரிந்தது.

அபரஞ்சியின் கண்களில் நீர்த்தேக்கம்! ஏன் அழவேண்டும்? ஒரு வேளை ஆனந்தக் கண்ணீராக இருக்குமோ?

''அபரஞ்சி! காவியமாகக் காட்சி தரும் உன் தோற்றத்தில் கண்கள் மட்டும் கலங்கிக் களங்கமாகத் தெரிவதன் பொருள்?''—ரகுநாதன் வினவினன்.

அந்தக் கணத்திலும் ஒரு புன்னகையை உதிர்த்தாள் அபரஞ்சி. அடடா! அதுவும் ஓர் அழகின் அசைவா?

''வேந்தே! என்னைக் கேட்கச் சொன்ன வரத்தைச் சிறைக்குள்ளிருந்து கேட்பது தங்களை நான் அவமதிப்பதாகும்!''

'சிறைக்குள்ளிருந்து கேட்பது எனக்கு அவமானமா? எதைக் குறிப்பிடுகிருள் இவள்? ஆஃகா! இவள் அழகை அள்ளி யள்ளிப் பருகலாம் என்ற நினைவு ஏன் இப்படி கண்ணும்பொத்தி விளையாடுகிறது! இவளை எப்படியும் ஏற்று, மனைவிகளுள் ஒருத்தியாக்கிக் கொள்ள வேண்டும் என்று, அன்றே தீர்மானித்த முடிவின்படித்தானே செயல்படத்தொடங்கினேன்; அலங்கரித்துக்கொண்டு வரும்படியும் உத்தரவளித்தேன், அதே தோரணையுடன் நான் புறப்பட்டக் காரணத்தால்! இவளை அழகுச் செருக்கி விருந்து சற்றே இறக்கி ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று ஆணவப்பட்ட என் செருக்கை, விதி எப்படி மாற்றியமைத்துவிட்டது! உண்மையாகச் சொல்லப்போனல், அபரஞ்சியின் அழகுக்கு முன்னே, 'பூலோக மன்மதன்' என்ற பெயர் தாங்கிய நான் எம்மாத்திரம்? சாதாரணம்! மிகச்சாதாரணம்! இவளை அடைந்து அநுபவிக்கும் அந்த இன்பம் எப்பிறவிக்கும் போதுமே! பிறகு பெண்களையே வேண்டுமானல் எப்பிறவிக்கும் மறந்து விடலாம் என்றும்

அறுதியிட்டுக் கூறிவிடலாமே! இந்நிலையில் மனம் இளகிவரும்போது இவள் ஏதேனும் தத்துப் பித்து என்று வரம் கேட்டு வைத்து விட்டால்? சிறைக்கு வெளியில் இருந்து கேட்க வேண்டும் என்கிருளே! அப்படிக் கேட்பதுதான் எனக்குக் கௌரவம் தேடித்தருவது என்கிருளே! எதைக்கேட்பாள்? செஞ்சி அரசனும் இவளுடைய தந்தையுமாகிய கிருஷ்ணப்ப நாயக்கனுடைய விடுதலையைக் கேட்பாளா? அதற்குச் சிறைக்கு வெளியில் வந்து கேட்பானேன்? இதனுல் தனக்கென்ன கௌரவம் வந்துவிடப்போகிறது? ஐயகோ! இவளை முதலில் தந்தையைக் காண அனுமதித்ததே பெரிய குற்றம் என்று இப்போதல்லவா புரிகிறது! ஏதேனும் வஞ்சகமாகத் திட்டம் தீட்டி இருப்பார்களா? அதையும்தான் பார்த்துவிடலாமே! ரகுநாத மேருவை அசைக்க இந்தச் சுண்டெலிகளின் திட்டம் என்ன செய்து விடப்போகிறது?'—

விஜய ரகுநாதனுடைய இந்த ஆழ்ந்த நீண்ட சிந்தனை வெங்கிடபதி ராயருக்கே என்னமோ போலிருந்தது. அவரே ஒருவாறு அவனுடைய சிந்தனையைப் புரிந்துகொண்டு, "தஞ்சைபுரிவாசா! அபரஞ்சி வெளியில்தான் வரட்டுமே! அவள் தன்னைக் கைதியாக நினைத்தே அவ்வாறு சொல்லி யிருக்கிருள்!" என்று கூறினுர். ரகுநாதனும் கொஞ்சமும் காலதாமத மின்றி, "உண்மை, ராயரே உண்மை! எனக்கும் கூட இந்தச் சூட்சமும் இதுவரை புரிபடாமல் போய்விட்டது. தாங்களே அவளை வெளியில் வரும்படி உத்திர விடலாம்! அவ்வாறு உத்திரவிட வேண்டியவரும் தாங்கள் தான்!"

வேங்கிடபதிராயர் பொருள் நிறைந்த சிரிப்புடன் அபரஞ்சியின் மேல் பார்வையைச் செலுத்தினார். அபரஞ்சியும் உடலை நாணிக் கோணிப் புன்னகை புரிந்த வண்ணம் கண்களைச் செருகலாக்கி ஒரு பெருமூச்செறிந்தாள். அந்தக் காட்சியில் ரகுநாதன் தன்னையே மறந்தான்.

"அபரஞ்சி! சிறையறைக்கு விடுதலை தந்து வெளி வாசலுக்கு வாம்மா!"

காவல் தலைவன் கதவங்களைக் திறந்தான், ரகுநாதனுடைய இதயக் கதவங்களையும், அபரஞ்சியின் இதயக் கதவங்களையும் யாரோ திறப்பதுபோல் தெரிந்தது.

'சலங் சலங்'கென்ற ஓசையுடன் அபரஞ்சி வெளி வாசலுக்கு வந்தாள். வந்தவள் கொஞ்சமும் தாமதியாமல் ரகுநாதனுடைய கால்களைத் தொட்டுப் பணிந்தாள். அடுத்து வேங்கிடபதி ராயரையும் வணங்குவாள் என்றுதான் எதிர்பார்த்தான் ரகுநாதன். ஆனால், அது நடக்கவில்லை. அவனுடைய வியப்பு நிறைந்த விழிப்பைக் குறிப்பால் உணர்ந்துகொண்ட அபரஞ்சி, நாசுக்காகச் சொன்னாள்: "பிரபோ; நான் தங்கள் இதயச் சிறையின் கைதி! இந்தக் கைதி அன்புக்குத் தலைவணங்கினாள்!"

வேங்கிடபதிராயர் ஒரு கணத்தில் தன்னைச் சமாளிப்பதற்காகக் கலகல வென்று நகைத்தார். அவருடைய அந்த நகைப்புக்கான காரணத்தை ரகுநாதனோ, அபரஞ்சியோ அப்போது கேட்க விரும்பியதாகக் காணோம். அவர்கள்தாம் ஒருவரை யொருவர் விழுங்கக் காத்துக்கிடந்தனரே!

"பிரபோ! நான் என்னை அலங்கரித்துக்கொண்டு வர உத்தரவு கேட்டதற்கு இருவித காரணங்கள் உண்டு. கேட்கும் வரம் கைதியாக—கேவலத் தோற்றமாகக் கேட்கக் கூடாது என்பது ஒன்று. மற்றொன்று; தாங்கள் வேண்டுமென்றே தங்களை வெகுவாக அலங்கரித்துக் கொண்டு சிறைநாடி வந்திருக்கிறீர்கள். சிறைப் பார்வைக்கு இந்த அலங்காரமா? என்று நினைத்தபோது, என்னுள் முகிழ்த்த முடிவே சரியானது என்று நினைக்கிறேன். ஆகவேதான் நான் என்னை வெகுவாக அலங்கரித்துக்கொணடேன். ஏன்? சந்திர கிரிப் பாவையாகக் காட்சி தர சந்திரன்களையே என் உடலில் சிறைப்பிடித்தேன். ஓர் இனிய மோகினியை மனக்கண்ணுடியில் நிறுத்திப் புறக்கண்ணுடியின் உதவியின் மூலம் என்னை ஒப்பனை செய்துகொண்டேன். என் ஒப்பனை என்னை எப்போதுமே கைவிட்டதில்லை."

கைவிட்டதில்லையா? அப்படியென்ருல்...

ரகுநாதனுடைய நெஞ்சில் சற்றே கனல் மூண்டது.

"அபரஞ்சி! ம்...பேசு...! ஒருமுறை நீ செருக்கோடு நடந்துகொண்ட நிலையை அடக்கும் மூகாந்திரமாகத் தான் நானும் வந்துள்ளேன். தீர்ப்பை உன் கண்ணுடிக்கே விட்டுவிடுகின்றேன். அது சொன்ன பதிலைச் சீக்கிரமாகச் சொல்!"

அபரஞ்சி கண்களை மூடி மெல்லச் சிரித்துக்கொண்டாள். அதுவும் அவள் அழகின் அசைவாகத் தெரிந்தது ரகுநாதனுக்கு! இப்படித் தன்னை மறந்து மெய் மறந்து கவனிக்கும் ரகுநாதன் இன்னுமா அபரஞ்சி

யிடமிருந்து முடிவை எதிர்பார்க்கிறன்?—அவனுக்கே அந்த முடிவு தெரிந்துவிட்டதே!

ஆயினும், அபரஞ்சி என்ன சொல்கிறள் என்று தான் பார்ப்போமே! ஒருவேளை உண்மையை அவள் சொல்ல, அது தன்னைச் சுட்டுவிடுமாளுல் .....

யாகம் வளர்க்கப்போய், உடலைத் தீய்த்துக் கொண்ட கதையாக முடிந்துவிடுமோ என்று விஜய ரகுநாதன் மெல்ல அஞ்சிக் கொண்டிருந்தபோது, அபரஞ்சி கண்களைத் திறந்தாள். அவளுடைய செவ் வாழை அதரங்களும் திறக்க ஆயத்தமாயின!

# நீ மகா புத்திசாலி!

"பிரபோ! என் தீர்ப்பை நான் எப்போதோ சொல்லியாய் விட்டதே! இன்னும் என்னைப் புரிந்து கொள்ளாமல் இருக்கிறீர்களே என்று நினைக்கும்போதுதான் வியப்பு நிறைந்த வேதனையை அடைகிறேன்."

அழகாக ஒளிபடர்ந்திருந்த அபரஞ்சியின் கண்கள் மீண்டும் கலங்கின. ரகுநாதனுக்கு எதை எப்படி விளங்கிக் கொள்வது என்று உண்மையிலேயே புரியவில்லை. சகலகலா விற்பன்னனும், சிறந்த மதியூகியுமாகிய ரகுநாதன், புரிந்தும் புரியாதவன்போல் நடிக்கிறான் எனறே அபரஞ்சிக்கும்,வேங்கிடபதி ராயருக்கும் பட்டது. சில சமயங்களில், பேரறிஞனுக்கும் பேதமை தலை தூக்குவது இயற்கைச் சூழ்நிலை என்ற தர்க்க ரீதியான தத்துவார்த்தத்தை அவர்கள் இருவரும் புரிந்து கொள்வது கடினம்தான். அவர்களுடைய அந்த விழிப்பை ஊகித்தறிந்த ரகுநாதன், இப்போது தான் தன்னுடைய பேதமையைத் தெரிந்துகொண்டு, புரிந்தவன்போல் நடிக்கத் தலைப்பட்டான். அர்த்த சாஸ்த்திரத்தை எழுதிய உலக மகாப் பேரறிஞரும் சிறந்த ராஜதந்திரியும் பெரும் மதியூகியுமான சாணக்கியருக்கும், ஒரு சாதாரண ஏழைக்கிழவியின் கூழாப்

பத் தத்துவம் புரியாமல் திகைத்துப் பிறகுதான் வெற்றிக்கு வழிவகுத்தார் என்ற சரித்திரம் பலருக்குத் தெரிந்திருக்க முடியாது.

கொஞ்சநேரம் வரை தன்னைத் தேற்றி, இவ்வாறான சிந்தனை நடிப்பில் ஈடுகொடுத்த ரகுநாதன் கேட்டான்; "அபரஞ்சி! நான் புரிந்து கொண்டது கை மண்ணளவாக இருக்கலாம்! ஒருவேளை நீ புரிய வைக்கப்போவது உலகளவாகவும் இருக்கலாம் அல்லவா? எதையும் உன் வாய்மூலம் கேட்டறியவே நான் விரும்புகிறேன்!"

அபரஞ்சி 'கிணுங்'கென்று மெல்லிய யாழ்ச் சிரிப்பொலி உதிர்த்தாள். "சுவாமி! அடியாள், தங்கள் முன் அழகில் என்ன, அனைத்திலுமே மிக, மிகச் சாதாரணம் என்பதைக் காட்ட சிறைகுள்ளிலிருந்து தலை வணங்கினேன். அடுத்துச் சிறைக்கு வெளியே வந்து, வரங் கொடுக்கப் போகும் தெய்வம் என்பதை எடுத்துக் காட்ட, இரண்டாம் முறையாகத் தலை பணிந்தேன். வரத்தை, நான் பரிபூரணமாகப் பெறும் பாக்கியத்தை—பெறுவேனேயானால், வாழ்வளிக்கப் போகும் என் மூலதெய்வம் என்ற இதயநிறைவுடன், தங்கள் பொன்னடிக்கு மூன்றும் முறையாக, என் சிரத்தைப் பீடமாக்குவேன்!"

அபரஞ்சியின் இந்த உருக்கமான உரையாடலைக் கேட்டு, வேங்கிடபதிராயர் தம்மை மறந்து, ஆ.'.காரம், ஊ.'.காரம் எழுப்பிவிட்டார். பிறகுதான் தம்மை மறந்தது எத்துணை மடத்தனம் என்பதை உணர்ந்து, உதடுகளைக் கடித்துக் கொண்டார். ரகுநாதன், அவருடைய அந்த நிலைக்குக் கொஞ்சமும் வருந்தவில்லை. ஏனென்

ருல், தன்னெஞ்சம் இளகிவிட்ட தன்மையை அவனே உணர்ந்துதானிருந்தான்.

"அபரஞ்சி! இவ்வளவு அழகாக எப்போது பேசக் கற்றுக்கொண்டாய்?"—ரகுநாதன் தன்னுடைய பிர யோகத்தைச் சமயமறிந்து சாமர்த்தியமாகப் பயன் படுத்தினன்.

'என்ன அத்தனையும் வெறும் பேச்சா?'—அபரஞ்சி மட்டுமென்ன, ராயரும் வியந்தார்.

அபரஞ்சி சொன்னள்: "என்று தங்களை முதன் முதலில் கண்டேனே—என்று தங்களின் நிழல் என்மீது பட்டதோ—என்று தங்கள் கலைவல்லக் குரலொலி என் செவியில் பாய்ந்து இதயத்தை நிரப்பியதோ, அன்றே கற்றுக்கொண்டேன். பிரபோ! நான் ... நான் ...!"

விம்மி, விசும்பி அழுதேவிட்டாள் அபரஞ்சி.

"சொல் அபரஞ்சி, சொல்!"

"பிரபோ, தாங்கள் என் இதயத்தால் வரித்துக் கொண்ட மணளர்! எத்தனை எத்தனையோ அரச குமா ரர்கள் என்னையடைய தவமிருந்தனர்! நான் அவதரித் தது ஒருவர்க்காகத்தானே! அந்த ஒருவராகிய தங்களை எப்போதோ மணந்து, இதயத்தில் இல்லறம் நடத்து கிறேன். ஏன்? கூசாமல் சொல்லப்போனல், கனவில் தங்களை அடைந்து கொண்டிருக்கிறேன்!"—அபரஞ்சி இப்படி வெளிப்படையாகக் கூறியபோது, ஐந்தடி உடல் ஒரடியாகக் கூனிக் குறுகியதை நான்கு கண் களும் கவனிக்கத்தான் செய்தன. அபரஞ்சியின் கண் களில் வெளிப்பட்டுக் கொண்டிருந்த சோக அருவி, அவளுடைய வெண்ணுடையை நனைத்து, கச்சையுள்

பாய்ந்து மார்பகங்களை ஊடுருவி, இதயத்தைச் சில்லென்று ஆக்கிக் கொண்டிருந்தது.

மீண்டும் அபரஞ்சியே பேசினாள்: "சுவாமி! நான் சிறைப்பட்டிருக்கிறேன் என்ற கவலைகூட என்னுள் துளியும் எழவில்லை. தங்களை நிஜமாக அடையாமல் போலியாக வாழும் வாழ்வைவிட, இந்தச் சிறை வாழ்க்கை எவ்வளவோ மேலானது. ஆனாலும், தாங்கள் சந்திரகிரியை அடைந்து இருக்கிறீர்கள் என்று கேள்விப்பட்ட தினத்திலிருந்து, ஒருமுறை பார்க்கும் பாக்கியம் கூட பெறுமல் இருக்கிறேனே என்று நினைத்தபோதுதான், இதயம் வெடித்துவிடும் போலிருந்தது. ஆகவேதான், இசையுருவாகிய தங்களை இசையால் ஈர்க்க, இரவு துன்பியல் கீதம் பாடினேன். என் இசையாராதனை வீண்போகவில்லை. அலங்கார மன்மதனை, என் உயிருக்குயிரானவரை எதிரே கொண்டுவந்து நிறுத்தியதுமல்லாமல், வரம் கேட்கவும் தூண்டியிருக்கிறது. அந்த வரத்தைப் பெறுவேனே, பெறமாட்டேனே, நானறியேன், எனினும் நான் பாக்கியசாலியே!"

கலங்காத ரகுநாதனுடைய கண்களும் கலங்கிவிட்டன. "அபரஞ்சி! இப்படி இருக்க, முன்பு ஒருமுறை உன்னையடைய நான் விரும்பியபோது, நீ ஏன் என்னை அவமதித்துப் பேசியனுப்பினாய்? அப்போது நீ காட்டிய அந்தச் செருக்காராதனையின் பயன்தானே நீ உகுக்கும் துன்பக் கண்ணீர்?"

"ஒரு விதத்தில் உண்மையும் அதுதான் பிரபோ! நான் அன்று தங்களை அவ்வாறு பேசியனுப்பி இராவிடில், இந்நேரம் கலாவதி தங்கள் பட்டத்தரசியாகி

இருக்கமாட்டாள். என் அன்புத் தோழி என்னைவிட எதிலும் சிறந்தவள்! ஏன்? தாங்கள் 'மயங்கிய' என் அழகு, கலாவதியின் அழகுக்கு எத்தனையோ மடங்கு தாழ்ந்தது. அவளை மணம் செய்துகொள்வதன்மூலம், தங்களுக்குப் பலப்பல நன்மைகள் வந்தடைய காத்துக் கொண்டிருந்தன. விஜய நரப் பேரரசின் உதவிகள், தஞ்சையின் அமைதி, இவற்றுக்கு மேலான குருசுவாமி கோவிந்த தீட்சதர் அவர்களின் பேராசிகள், என்னை மணப்பதால் சத்தியமாகக் கிடைத்திருக்க முடியா! எனவேதான், நான் அவ்வாறு நடந்து கொள்ள நேர்ந்தது.'

ரகுநாதன் பெரிதாக மலைத்துப்போனன். அவனுடைய வாய் தன்னை மறந்து, "அபரஞ்சி" என்று அழைத்தது. இத்துடன் ஒரு ஞானேதயமும் அவனுக்கு உதயமாகததான் செய்தது. அது: பேச்சுக்கிடையே அபரஞ்சிக் குறிப்பிட்ட 'மயங்கிய என்னழகு' என்ற சொற்கள்! இவள் அழகில் மயங்கினேன் என்ருல், இவளுடைய அழகுதானே வென்றது என்று பொருள்? இதை விட்டுத் தன்னை மிகச் சாதாரணம் என்று கூறிக்கொண்டாள் என்ருல், அவளாகவே பார்த்துத் தோல்வியை வரவழைத்து ஒப்புக்கொண்டாள் என்பதாகத்தானே தெரிகிறது! உண்மையில் அபரஞ்சியின் அழகே அழகு' என்று உள் மனம் உரக்கப் பாராட்டுகிறதே!

அபரஞ்சியை ரகுநாதன் நன்ருகவே புரிந்து கொண்டான்.

"அபரஞ்சி! நீ கேட்கவெண்டிய வரத்தை மனம் திறந்து தெளிந்த வார்த்தைகளால் கேட்கலாம்!"

"இன்னுமா நான் கேட்க வேண்டும்?"

"நான் சொல்வது தெளிந்த வார்த்தைகளால்!"

அபரஞ்சி மெல்லச் சிரித்த வண்ணம் கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள்.

"சுவாமி! உங்களைத் தவிர இந்த உலகில் நான் அடைய வேண்டிய பொருள் ஏதேனும் உண்டா?"

"ஏன இல்லை?"

"நிச்சயமாக இல்லை!"

"உன் தந்தையில்லையா? செஞ்சி இல்லையா?"

"எனக்கில்லை!"

"இப்போது நீ கலாவதிக்குப் போட்டியாக வரவில்லையா?"

"இல்லை; துணையாக வருகிறேன். அரசரின் அந்தப்புரத்து அதிகாரமில்லாப் பதுமைகளுள் ஒன்ருக விளங்க வருகிறேன். அந்தப் பாக்கியம் எனக்குக் கிடைத்தால் அதுவே போதும் சுவாமி!"

"ஆனுலும், நீ ஒரு கைதியாகிச் சிறைக்கு வந்தவளாக இருக்கிருயே?"

"குற்றமென்ன செய்தேன்?"

"...... ......"

"கிருஷ்ண நாயக்கர் தான் குற்றவாளி, அவருடைய மகளுமா?"

"................."

"என்ருலும், நான் சிறைப் பிடிக்கப் பட்டது வேற்றுக்கரங்களால் அல்ல; நான் பூஜிக்கும் கரங்களால்தான்!"

"அபரஞ்சி!......அபரஞ்சி!"

"ஏன், சுவாமி?"

"நீ மகா புத்திசாலி!',

"உங்களை அடைய தவமிருப்பவள் பின் எப்படி இருப்பாள் பிரபோ?"

ரகுநாதன் மேற்கொண்டு எதையும் பேச விரும்பாதவனாய் வேங்கிடபதி ராயரை நோக்கி, "சந்திரகிரி பூபதி—சிறையில் அடைப்பட்டிருக்கும் செஞ்சி கிருஷ்ணப்ப நாயக்கரையும், அவருடைய குடும்பத்தையும் விடுதலை செய்து விடுங்கள்!" என்று சிம்மம்போல் கர்ஜித்து, நடக்கத்தொடங்கினான். ஒன்றும் புரியாமல் விழித்த அபரஞ்சியும்கூட அவனுடைய சிம்மக் குரலையும் கம்பீரக் கட்டளையையும் கேட்டு நடுங்கிவிட்டாள். அந்தக் கொடி உடலின் நடுக்கம், நிலையடைய பல நாழிகைகள் பிடித்தன!

8



# காந்தாரம் ஒலித்தது

பொன் கிடைத்தாலும் புதன் கிடைக்காது. ரகுநாத நாயக்கனுக்குப் பொன்னுக்கும், புதனுக்கும் மீறிய பெணணே கிடைத்துவிட்டாள். அன்று நல்ல முகூர்த்த நாள். ஆகவே, திருமண ஏற்பாடுகள் நடைபெற்ற வண்ணமிருந்தன.

இந்தப் பதினைந்து தினங்களில் எத்தனையோ செயல்கள் நடைபெற்றன. தஞ்சை நகரின் பேரமைச்சரும், குருநாதருமான கோவிந்த தீட்சதரிடமிருந்து உத்தரவும் வந்துவிட்டது. அருமை மனைவியும், பட்டத்தரசியுமான கலாவதி தேவியிட மிருந்து சம்மதம் வந்துவிட்டது. இனி தயங்க என்ன இருக்கிறது? அபரஞ்சி கேட்ட வரம் பரிபூரணமாக அளிக்கப்பட்டது.

மணமுடித்த ரகுநாத போஜன் பல தானங்களைச் செய்தான். அந்தத் தானங்களிளெல்லாம் மிகச் சிறந்த தானம், கிருஷ்ணப்ப நாயக்கன் யாசிக்காமலே பெற்ற செஞ்சி நகரத் தானம்தான்! செஞ்சியைப் பெற்றதில் கிருஷ்ணப்ப நாயக்கனுக்குத் தான்எத்துணைக்குப் பெரு மகிழ்ச்சி!

இன்னும் இரு தினங்களில் புறப்பாட்டுக்கான ஏற்பாடுகளைக் கவனிக்கும்படி ரகுநாத நாயக்கன் உத்

தரவு பணித்தான். முதலிரவுக்கான ஏற்பாடுகளை அரச ரீதியாக அரண்மனைத் தோழியர்கள் கவனித்துக் கொண்டிருந்தனர். அபரஞ்சியின் அதிர்ஷ்டத்தை நினைத்து வியக்காதவர்களே இல்லை. 'சிறையில் அடை பட்டப் பிறகு இப்படி ஒரு யோகமா?' 'நீச்ச பங்கம் ராஜயோகம்' என்கிருர்களே, அது இதுதானு?' என்று பல அரண்மனை அலுவலாளர்களும் முணகிக் கொள்ளத்தான் செய்தனர். பெண்ணுகப் பிறந்தா லும் அபரஞ்சியாகப் பிறக்கவேண்டும்'—என்ற வழக்கு மொழி ஆந்திர தேசத்தில் மட்டுமல்லாமல், தமிழ் நாட்டிலும் அந்நாளையில் வழங்குமளவுகு அபரஞ்சி யின் அதிர்ஷ்டப் புகழ் பரவச்செய்தது.

அந்தி மறைந்ததும், சிந்து பாட வந்து நின்றது சிங்காரத் தேன் நிலவு. வாலிப உள்ளங்களுக்கே இரவு சொர்க்க போதையை உண்டுபண்ண வல்லது. முத லிரவுக்காரர்களுக்கு அது வாழ்வின் மறக்க முடியாத போதாயிற்றே! அபரஞ்சியைப் பொறுத்தமட்டில் இது நூற்றுக்கு நூறு உண்மை.

கொஞ்சுமொழி கேட்கப்போகும் மஞ்சம் கோலா கலமாகக் காட்சி தந்தது. மல்லிகையும். முல்லையும், இருள்வாசியும், ரோஜாவும், சம்பங்கியும், மருக் கொழுந்தும், மனோரஞ்சிதமும் கலந்த மாலைகளும், உதிரிகளுமாக மஞ்சம் விளங்கியது. மூலைச் சுவரோர மாக வைக்கப் பெற்ற தூபப் பேழையில் அகிலும், சந்தனமும் தூவியதால் மெல்லிதான புகை கிளம்பிக் கொண்டு இருந்தது. திரைச்சீலைகளிலிருந்து வாசனைத் திரவியங்களின் நெடி கம்மென்று வீசியது. படுக்கைக் குப் பக்கத்தே பண்டு பலகாரங்களும், பாற் குவளை

யும், தண்டு மாலைகளும் வைக்கப்பெற்றிருந்தன. மிக எளிய உடை தரித்த விஜயரகுநாத போஜன், வீறுர்ந்த நடையுடன் அறையினுள் நுழைந்தான். அவனுக்கு அந்தச் சூழ்நிலை புதியதில்லையாலுலும், மனத்துக்கு ரம்மியமாகவே இருந்தது. சற்றைக் கெல்லாம் அபரஞ்சி உள்ளே அடி பெயர்த்து வைத்தாள். 'சலங்... சலங்... சலங்...'

வாழுளில் காணுத ஒரு புதிய சூழ்நிலையை—புதிய சொர்க்கத்தைக் காணப் போகும் அபரஞ்சிக்கு புளகச் சிலிர்ப்புக் கண்டது. மலர் மணமும், திரவிய நெடியும், பண்டுபலகாரங்களின் வாசனையும் அவளைப் படாதபாடு படுத்திவிட்டன. தினமும் கண்ட கனவு இப்படி நனவாகும் என்று அவள் கனவிலும் கண்டாளில்லையே! தெய்வங்களுக்கு முதலாவதாக அவள் பல கோடி அஞ்சலி செய்தாள். பிறகு சாமர இமைகள் படபடக்கக் கரிய பெரிய விழிகளைத் திரட்டி கணவன் ரகுநாதனை நோக்கினுள். இளமையின் உண்மையான வார்ப்படச் சிலைபோலப் பஞ்சணையில் சயனித்திருந்த ரகுநாதனுடைய கோலம், புதுப் புதுப் போதைகளைத் தூண்டியது.

மெல்ல மெல்ல அருகே சென்று, ஒசிந்து ஒயிலாக நின்றுள். பிறகு, அருகே இருந்த மலர் மாலையை எடுத்து அணிவித்துப் பாதங்களில் பணிந்தாள். அது மூன்றும் முறையாகப் பணிந்து வரவேற்கும் காதையாகும்!

"எழுந்திரு அபரஞ்சி!"

எழுந்தாள். நாணித் தலைகவிழ்த்து ஓரக்கண்ணுல் கவனித்தாள்.

"அபரஞ்சி! இப்படி அருகே வந்து அமர்ந்து கொள்!"

எந்தவிதமான தங்குத் தடங்களின்றி, சொன்ன வண்ணம் செய்து முடித்தாள். அவளுடைய பூங் கரத்தை மெல்லப் பற்றினன் விஜயரகுநாத நாயக்கன். மலருக்கும் வெப்பமுண்டு என்ற புதிரான உண் மையை அவன் இப்போதுதான் கண்டான். இதுவரை காணுத அனுபவமாகவே அது இருந்தது.

"அபரஞ்சி! பூவிலும் வெப்பம் உண்டா?"

"உம்......!"

"அது எப்படி?"

"வண்டுபடாத மகரந்தத் தேக்கத்திலிருக்கும் புது மலர், வசந்த தென்றலின் முதல் வருகையின் போது, சில அபூர்வ மலர்கள் வெப்பத்தைத் தாங்குவ துண்டு!"

ரகுநாதன் கலகலவென்று நகைத்தான்.

"ஏன் நகைக்கிறீர்கள்?"

"நீ மகா புத்திசாலி!"

"இரண்டாம் முறையாக என்னைப் புகழ்கிறீர்கள்!"

"இரண்டாயிரம் முறை வேண்டுமானுலும் புகழ் வேன்!"

"நான் பேறு பெற்றவள்!"

"இன்னும் ஓராண்டு கழியட்டும்; முழுப் பேறு பெற்றவளாய்விடுவாய்!"

அபரஞ்சி பூவாகச் சிரித்தாள்.

"அழகின் திருவிளக்கே! உன்னை ஒன்று தனியாகக் கேட்கவேண்டும் என்று நினைத்தேன். இப்போது அதை கேட்க விரும்புகிறேன். ஆமாம்; நீ என்னை வரம் கேட்டபோது உன் திருமணச் சுயநலத்தைத்தான் விரும்பினாயே யொழிய, உன்னுடைய தந்தை சிறைப்பட்டு, குறைப்பட்டுக் கிடப்பதைக் கொஞ்சமும் சிந்திக்கவில்லையே! ஏன்?"

"இதற்குப்பெயர் சுயநலமா?"

"பின் என்ன?"

"பிரபோ! என் கணவரைப் பற்றி எனக்குத் தெரியும். சகல கலாவல்லவர் என்பது மட்டுமல்ல; சிறந்த மதியூகி—ராஜ தந்திரி! அப்பேர்ப்பட்டவர், சிறைப்பட்டுக் கிடக்கும் ஒரு குற்றவாளியின் மகளைத் திருமணம் செய்துகொள்ள மாட்டார் என்பதையும்—நாடற்ற ஒரு மருமகளை அரண்மனைக்கு அழைத்துச் செல்லமாட்டார் என்பதையும் நானறிவேன்! ஒரு விதத்தில், காதலின் காரணமாக நாடற்ற நங்கையை நாயகியாக ஆக்கிக் கொள்ளும் அரசர்களும் உண்டு. ஆனால், என் விஷயம் அதுவல்ல. ஆகவே, முதலில் தந்தைக்கு விடுதலை தந்து—நாட்டைத் திருப்பித் தந்த பிறகு தான், என்னுடைய கரம் பற்றுவீர்கள் என்று எதிர்பார்த்தேன். நான் பாக்கியசாலியே!"

விஜய ரகுநாத போஜன் எதை நினைத்துச் செய்தானோ, அதை முன்கூட்டியே தீர்க்க தரிசனமாகக் கண்ட அபரஞ்சியைக் கண்டு சொல்லொணா வியப்பை அடைந்தான். அபரஞ்சி உண்மையில் மகா புத்திசாலியே!

"ஏன் சுவாமி, என்னை இப்படிப் பார்க்கிறீர்கள்."

"அபரஞ்சி! நீ ஒரு நாட்டின் பேரரசியாகத் திகழ வேண்டியவள்!"

"இப்போது மட்டுமென்ன?"

"அந்த ஸ்தானத்தைக் கலாவதி பெற்று விட்டாள்!"

"இல்லை; நானும்தான் பெற்றிருக்கிறேன். வலக் கரத்தால்தான் பயனுண்டு என்று சொல்லிவிட முடி முடியாது; இடக்கரத்துக்கும் அதே பயனுண்டு. உங்க ளுக்கு மட்டும் நான் துணைவியல்ல, அக்காள் கலாவதி தேவியாருக்கும் நான் துணைவிதான்! பொருள்தான் வேறு!..."

தஞ்சை வேந்தன் விஜய ரகுநாதநாயக்கன் மெய்ம் மறந்து அபரஞ்சியை அணைத்து உச்சி மோந்தான் பிறகு ஒளிவிளக்கைச் சற்றே குறைத்தான். அறை யினுள் இருள் படரப படர, அவர்களுடைய இருவர் உள்ளங்களிலும் ஒளி வீசத் தொடங்கியது. மெல்ல மெல்லப் புதுமலரின் மடல்களை அவிழ்த்தான். மணம் நாசியை முத்தமிட்டது. அவள் "பிரபோ!" என்றாள் ஆதாரசுருதியில். ரகுநாதன் பஞ்சம சுருதியில் ஒன்றி, "கண்மணி" என்றழைத்தான். மேல் சட்ச மத்தில் சுருதி சுத்தமாக—இருவருடைய இதயக் குரல் கள் ஒன்றி இழைந்தன. அவற்றிலே அந்தர காந் தாரம் பரிபூரணமாக ஒலித்தது.

9



## காக்கலி நிஷாதம்

வைகறை பூபாள ராகத்துடன் வருகை தந்தது. பூபாளத்துக்கே உரிய ஜீவசுரமான காந்தார தைவதங்களைப்போலச் சேவலும், காகமும் புலரிக்குக் கட்டியம் கூறின. குணதிசைக் கதிரவன் பொன்மேனி காட்டி, மின்னகையூட்டிக் கண்ணைப் பறிக்கும் கலையழகுடன் பள்ளியெழுந்தான். எங்கும் இளங்காலைப்போது புததம் புதிய சூழலுடன் குதூகல நடம் புரிந்தது.

சாந்தியறையில் சாந்தி கண்டு, பிறகு நித்திரை பூண்ட புதுத் தம்பதிகள் விடிந்தும் எழுந்தார்களில்லை. ஒருவேளை, விழித்தும் எழுந்திருக்க மனமில்லாமல் இருக்கிறார்களோ?

வெளி வாசலில் இசைத்தோழி ஒருத்தி யாழ் மீட்டிக் கொண்டிருந்தாள். எத்தனை நேரம்தான் இப்படி வாசித்துக் கொண்டிருப்பாள்? விடிந்து ஒரு நாழிகைக்கு மேலாய்விட்டதே! யாழின் நரம்புகளை ஓங்கியும், அழுத்தியும் விரைவு கொண்டும் மீட்டினாள். நிஷாதமற்ற பூபாளம் நிஷாதப் பிரயோகம் கொண்டு ஓர் இனிய கலவையைக் கண்டது. தஞ்சை

நாயக்கன் கண் விழித்தான். அவனை யாழின் புதிய போக்கு கவர்ந்திருக்க வேண்டும்!

பக்கலில் மன்மதனுடைய மலரம்புபோல் படுத்திருந்த அபரஞ்சியைக் கண்டான். அவளுக்கு இன்னும் போதைத் தெளியவில்லை போலும்! மேலாடை சரிய, குழற் கற்றைத் தவழ, சேலாடும் கண்கள் நீராடி மகிழ, பாலூறும் அதரங்கள் பதமாக அசைய, சங்குக் கழுத்திலே சரசமுத்திரை நகக்கீற்றோடு நகைக்க, பங்கமிலா மார்பகங்கள் பார்த்தறியா காட்சியினால் வியர்த்து வெலவெலத்து விதம் மாறித் தெரிய, நூலிடைத்துவள, கோபுர மார்மீது ஒரு கரமும், கொஞ்சிய பஞ்சணைமேல் மறுகரமும் வளைய, நூபுரக் கால்கள் ஒசிந்து ஒருக்களிக்க, அவற்றில் ஒன்றின் மேல் அன்னத்துகில் நீங்கியதால் அற்புதக் களையோடு அதுகாண—அழகுச் சிலையொன்று அயர்ந்து துயில்வதுபோல் தெரிந்தாள் அபரஞ், ரகுநாதநாயக்கனுடைய காவியக்கண்களுக்கு!

"அபரஞ்சி!"

"சுவாமி! யாழில் மிதக்கும் பூபாளத்தில் நிஷாதப் பிரயோகத்தைக் கவனித்தீர்களா?"

என்ன! அபரஞ்சி விழித்துக் கொண்டுதானிருக்கிறாளா? மெல்லச் சிரித்து அவளுடைய மாம்பழக் கன்னத்தில் தேனிதழ் பொறுத்திச் சொனனான் ரகுநாதன்: "அது பௌளி ராகம் கண்ணே!"

அபரஞ்சி எழுந்து தன்னைச் சரிபார்த்துக்கொண்டு பின்பு ரகுநாதனுடைய கால்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். "சுவாமி! பூபாளத்தை விட இந்த ராகம் நன்றாகவே இருக்கிறது!"

"ஏன் இராது? அபரஞ்சி! பூபாளம் உன்னைப் போல் மாசறு இளம்பெண்! அதோடு என்னைப்போன்ற வீர காகலி நிஷாதம் இணையும்போது அந்த இனிமை யில் இன்பமில்லாமல் வேறு என்ன இருக்கமுடியும்?"

வாசற்படியில் யாழின் ஒலி துரித காலத்தில் பேசிக்கொண்டிருந்தது. "சுவாமி! அந்தத் தோழிப் பெண்ணும் எத்தனை நாழிகைக்குத்தான் யாழ்மீட்டி நம்மை எழுப்புவாள்? எழுந்திருங்கள்; நீராடப் போக லாம்!"

தஞ்சைபுரி வாசன் எழுவதிலும் ஓர் ஒயிலைக் காட்டி எழுந்தான். அபரஞ்சி அதையும் அழகோடு ரசித்தவளாய் முன்னே நடந்தாள். அவள் நடையில் அவன மறந்து பின்னே நடந்தான.

இப்படியாக மூன்று தினங்கள்வரை சந்திரகிரி அரண்மனையில் அவர்களுடைய இனப வாழ்க்கைக் கழிந்தது.

நான்காம் நாள். பயணத்துக்கான ஏற்பாடுகள் நடைபெறலாயின.

குருவாரம். ரகுநாதனுக்கு மிகவும் உயர்ந்த நாள். ஆகவே, அன்று விடிந்து பத்து நாழிகைக்குமேல் அவனும், அவனுடைய புதிய மனைவி அபரஞ்சியும், உடன் பரிவாரங்களும் புறப்பட ஆயத்தமாயினர். இதுவரை தன்னுடைய மருமகனும், தஞ்சை வேந்தனு மான ரகுநாத நாயக்கனுடன் நேருக்குநேர் நின்று பேச முகமில்லாமல் கிடந்த செஞ்சி அரசன் கிருஷ் ணப்ப நாயக்கன், அப்போது குழைந்து வளைந்து எதிரே வந்து நின்றான்.

"செஞ்சி அரசர் ஏதேனும் என்னிடம் சொல்ல இருக்கிறதா?"—ரகுநாதன் அரசியல் தோரணையுடன் கேட்டான். அவன் கிருஷ்ணப்ப நாயக்கனை மாமனாராக வரவேற்கவோ, மதிக்கவோ தயாராக இல்லை. இது வேங்கிடபதிராயர்க்கும், மற்றவர்க்கும் வியப்பாகவே இருந்தது. என்றாலும், அபரஞ்சிக்கு இது வியப்பை உண்டுபண்ணவில்லை. அவளுக்குத் தன்னுடைய தகப்பனைப் பற்றித்தான் நன்றாகத் தெரியுமே!

"ரகுநாதா..."—கிருஷ்ணப்ப நாயக்கன் வாய் திறந்தானோ என்னமோ, உடனே இடைமறித்த ரகுநாத நாயக்கன், "செஞ்சியாரே! நான் அபரஞ்சிக்குத் தான் கணவன். உங்களுக்கு மன்னன்! நினைவிருக்கட்டும்!"—என்று கூறியது கிருஷ்ணப்ப நாயக்கனுக்கு அவமானமாகப் போய்விட்டது. எனினும் மனத்துள் கருவிக்கொண்டே சொன்னான்: "மன்னியுங்கள் மகாராஜா! என்னோடு செஞ்சிக்கு வந்து சில நாள் தங்கி மருவேற்றுத் தஞ்சைக்குப் பயணமாகக் கேட்டுக் கொள்ளுகிறேன்."

"ஓஃகோ! இது தேவையில்லாதது என்றாலும், தஞ்சைக்குச் சென்று என் பிரதானி தீட்சிதர் அவர்களைக் கலந்தாலோசித்துப் பிறகு செய்தி அறிவித்துச் செஞ்சிக்கு வருவேனுக! நீங்கள் நல்லபடியாக நாடு சென்று, நல்லமுறையில் அரசாண்டு, நாணயமாகக் கப்பம்கட்டி வாழவேண்டுகிறேன். இப்போதைக்கு என்னுல் இதைத்தான் சொல்லமுடியும். நேரமாகிறது. உங்கள் பெண்ணிடம் ஏதேனும் சொல்ல விரும்பினுல் இப்போதே சொல்லி முடித்து விடுங்கள்!"

செஞ்சி* அரசன் கிருஷ்ணப்ப நாயக்கன் மென்று விழுங்கித் தன்னைத் தேற்றிக் கொண்டான். என்ன இருந்தாலும், மீண்டும் நாடாளும் வாழ்வு தந்தவன் ரகுநாதன். அத்துடன் தன் மகளை மணந்து பெருமை தந்தவன். ஆகவே, மனத்துள் பொறுத்துக் கொண்டான். மெல்ல மகளை நோக்கினான். "அபரஞ்சி! உனக்கு நான் என்ன சொல்ல இருக்கிறது? அதிகமாக எதுவும் சொல்லத் தேவையில்லை. நீ மகா புத்திசாலி! உன்னால் எனக்குக் கௌரவம் பெருகட்டும்!"

செஞ்சி அரசன் கிருஷ்ணப்ப நாயக்கன் வணங்கி விடை கொடுத்தான்.

விஜயராயர் வேங்கிடபதி ராயரும், மற்றும் அரசாங்கப் பிரதானிகளும் தஞ்சை வேந்தனை வழி கூட்டி அனுப்பிவைத்தனர். அனைவரிடமும் விடை பெற்ற ரகுநாத நாயக்கனும், அபரஞ்சியும் புரவிகள் பூட்டிய தேரில் ஏறியமர்ந்தனர். அப்போது வேங்கிட பதிராயர் அபரஞ்சியை நோக்கி, "அம்மா அபரஞ்சி! உன் தந்தை சொன்னது போலவே நானும் சொல்லு கிறேன். நீ மகாபுத்திசாலி! உன்னால் உன் தந்தைக்கு மட்டுமல்ல, நாயக்கர் வம்சத்துக்கே நல்ல பெயர் கிடைக்கவேண்டும்! தெரிகிறதா?" என்று கூறி முடித்தார். தந்தை சொன்ன பாங்குக்கும், இவர் சொல்லிய பாங்குக்கும் எத்தனை வேறுபாடுகள்! இதை அபரஞ்சி அறியாதவளா என்ன?

தஞ்சைப் படைவீரர்கள் வெற்றிக் குரலெழுப்பப் பயணம் தொடங்கப் பெற்றது. பிரிவாற்றுமை தாளாத வேங்கிடபதி ராயர்க்குக் கண்களில் நீர் துளிர்த்தது. அடுத்து கிருஷ்ணப்ப நாயக்கனுடைய

குடும்பம் செஞ்சி நோக்கிப் பயணமானது. மகளின் பிரிவாற்றுமை கிருஷ்ணப்பனுடைய கண்களையும் கலங்கச் செயததில் வியப்பில்லை.

இத்தனை நாட்களாக இருந்து வந்த கலகலப்பை இழந்த சந்திரகிரி, மீண்டும் தன்னிலையடைய எத்தனையோ நாட்கள் பிடித்தன.

## 10



# அவள் ஓர் அபசுரம்!

காவிரிக் கரைவாழும் காகமும் கவிபாடும் என்பார்கள். அந்தப் புனித காவிரியாள் இனிதாக அணைத்துச் செல்லும் புகழ் மிக்க தஞ்சை மாநகரம் பூரணப் பொலிவோடு அன்று விளங்கியது. தலைவன் விஜயரகுநாத நாயக்கன் வெற்றி முரசம் கொட்டி, வீர வருகை தருகிறான் என்ற மட்டிலா மகிழ்ச்சியுடன் மக்கள் திரள் திரளாகக் கூடி வரவேற்க முனைந்தனர். பிரதானி கோவிந்த தீட்சிதர் அரண்மனை வரவேற்புக்கான ஏற்பாடுகளை அமர்க்கள மாகச் செய்ய முன்னின்று கவனித்துக் கொண் டிருந்தார்.

தொலைவில் வெற்றி முரசத்தின் முழக்க ஒலி கேட்டது. அதைத் தொடர்ந்து துந்துபி, எக்காளத்தின் ஓசை தஞ்சையை உணர்ச்சி மயமாக்கின. மக்கள் குழாம் மன்னனை வரவேற்கவும், புதியதாக வரும் அரசி அபரஞ்சியைக் காணவும் துடிப்புடன் கூடிய விழிப்புணர்வோடு ஆயத்தமானது.

பூரண கும்பத்துடன் எதிர்கொண்டு வரவேற்று ஆசீர்வதித்து அணைத்து ஆனந்தத்தைத் தெரிவித்துக் கொண்டார் பிரதானி கோவிந்த தீட்சிதர். மக்கள்

ரோஜாப் பூக்களை அள்ளித் தூவி ஆனந்தக் குரல் எழுப்பி வாழ்த்தி மகிழ்ந்தனர். அத்துடன் அழகு தேவதைபோல் காணப்பட்ட அபரஞ்சியைக் கண்டு தங்களுக்குள் நல்ல விதமாக விமர்சித்துக் கொண்டனர்.

பிரதானி கோவிந்த தீட்சதருக்கு அபரஞ்சி புதிய வளல்லள். ஆனாலும், அவளுடைய செழுமையான பருவ வளர்ச்சியும், அதன் பேரில் ரகுநாதன் பொறித்த இன்ப முத்திரையின் கவர்ச்சியும் எவ்வாறிருக்கின்றன வென்பதை யறிய சற்றே கவனித்தார். மங்கல ஆரத்திக்குப் பிறகு அனை வருமாக அரண்மனையுள் நுழைந்தனர். வேதியர்கள் வேதகோஷமெழுப்பினர். இசைஞர்கள் இன்பகீதம் பாடினர்.

பட்டத்தரசி கலாவதிதேவி அகமும் முகமும் மலர ஆனந்தப் பெருமிதத்துடன், அபரஞ்சியை அன்புடன் அணைத்து வரவேற்று மகிழ்ச்சியைத் தெரிவித்தாள்.

"அபரஞ்சி! தஞ்சைப் பிரதானப் பிரதானியாரும், என்னுடைய ஆசானுமான இவரை நீ அறிந்துகொள்ள வேண்டும்!" அதுவரை கோவிந்த தீட்சிதர்க்கு அபரஞ்சி வணக்கம் தெரிவிக்காதது குறையாகக் கண்ட ரகுநாதன், மெதுவாக இன்முகத்துடன் அறிமுகம் செய்து வைத்தான். அபரஞ்சிக்கு உண்மை யில் அவர்தான் பிரதானி கோவிந்த தீட்சிதர் என்பது தெரியாது. எப்போதோ பல்லாண்டுகளுக்கு முனனம் விஜயநகரத்தில் பார்த்தது. அவளுக்கு நினைவில்லை. இதனை அவள் உளம் திறந்து கூறி உண்மையை ஒப்புக் கொண்டு, பிறகு முழங்காலிட்டுப் பிரதானி

கோவிந்த தீட்சிதரை வணங்கி எழுந்தாள். கோவிந்த தீட்சிதரும் "சர்வமங்கள முண்டாகட்டும்!" என்று வாழ்த்தினார். பிறகு சொன்னார்; "அபரஞ்சி! உன்னை நான் அறிவேன்! அரசமாதேவி கலாவதி அனைத்தை யும் சொன்னாள். நீயும் ஒருவிதமான தியாகிதான்! ஆயினும் உன் தியாகத் தவம் பலித்துவிட்டது! மிக்க மகிழ்ச்சி! எந்த நெறியோடு ரகுநாதனைக் கைப்பிடித்தாயோ அந்த நெறியோடு வாழ்ந்து நலம் பல பெறுவாயாக!"

"தங்கள் அறிவுரை கிடைக்கும் பாக்கியம் பெற்ற நான் பெருமைக் குரியவள் சுவாமி!" அபரஞ்சி பணிவுடன் கூறினாள்.

"கலாவதி! உன் தோழியை உன்னிடமே கொண்டு வந்து சேர்த்துவிட்டேன்!"—ரகுநாதன் சொல்லிவிட்டு இளங் கீற்ருகச் சிரித்தான்.

கலாவதியும பெருமையுடன் சொன்னாள்: "தோழியாகச் சேர்க்கவில்லை. தங்கையாகச் சேர்த்து இருக்கிறீர்கள் சுவாமி!"

"என்றாலும் பட்டத்தரசிக்கு நான் தோழியாகவே நின்று பணி விடை செய்வேன்!"—அபரஞ்சி அடக்கம் ஆயிரம் வராகன் என்பதைக் காட்டினாள். ரகுநாதன் சிரித்துவிட்டான்.

"ஏன் சிரிக்கிறீர்கள்?"

"எனக்குத் தேவியாக வந்தவர்கள் யாரும் அறிவில் சளைத்தவர்களில்லை என்பதை நினைத்தேன்; சிரிப்பு வந்துவிட்டது!"

இவர்களுடைய பேச்சை மேலும் தொடரவிட மனமில்லாத கோவிந்த தீட்சிதர், "ரகுநாதா! விருந்

துக்கு நேரமாகிறது. போய்ச் சிரமப பரிகாரம் "செய்துகொண்டு திரும்புங்கள்" என்று கூறிமுடித் தார். அதன் பிறகு கலாவதி அங்கு நிற்பது சரியில்லை என்றுணர்ந்து, அபரஞ்சியை அழைத்துக்கொண்டு அந்தப்புரம் நோக்கிச் சென்றாள். ரகுநாதனும் மெல் லத் தலையசைத்துக்கொண்டு பிரதானியாரைப பின் தொடர்ந்தான். அப்படி அவர்கள் தனித்துச் செல் லும்போது, நடந்த விஷயங்கள் பலவற்றைப் பற்றிப் பேசத் தொடங்கினர். இனி நடக்கப் போகும் சில விஷயங்களைப் பற்றியும் பேசினர். கடைசியாக 'செஞ்சி அரசன் கிருஷ்ணப்ப நாயக்கனை விடுதலை செய்தது தனக்குச் சரியாகப் படவில்லை என்பதைக் கோடிட்டுக் காட்டினார் பிரதானி கோவிந்த தீட்சிதர்.

"சுவாமி! நான் கிருஷ்ணப்பனை விடுதலை செய்த ஒரே காரணம், ஒரு கைதியின் மகளை மணந்த அவச் சொல் எனக்கு வரக்கூடாது என்பதற்காகத்தான். புத்திசாலித்தனமாக நாட்டைப்பெற்று நடந்து கொள் ளும் விதத்தில் நடந்துகொண்டால் பிழைத்துப் போகிறான். இல்லையென்றால் மீண்டும் அந்தக் குருவிக் குஞ்சைக் கூட்டில் அடைக்க எத்தனை நேரம் பிடிக்கும்?"

கோவிந்த தீட்சிதர் பலமாகச் சிரித்தார். அந்தச் சிரிப்பில் பலமான பொருளிருந்தது.

அடுத்து கிருஷ்ணப்ப நாயக்கன் செஞ்சிக்கு அழைத்த செய்திபற்றியும், ஒப்புக்கொள்ள மறுத்த உரையாடல் பற்றியும் விளக்கமாகச் சொன்னான் ரகு நாதன். ஆனால், கோவிந்த தீட்சிதர் இந்தக் கட்டத் தில் சற்றே யோசித்து அழுத்தமாகச் சொன்னார்:

"ரகுநாதா! நீ செஞ்சிக்குச் சென்றே திரும்பி இருக்கலாம். இதற்கு ஏன் உத்தரவை நீ எதிர்பார்த்திருக்கத் தேவையில்லை. ஏனென்றால், செஞ்சி மக்கள் எப்படி அவனை வரவேற்கின்றனர்; அதுவும் உன்னெதிரில் என்பதை நீ புரிந்துகொள்ள ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்குமல்லவா? போகட்டும். அடுத்து நீ அபரஞ்சியுடன் செஞ்சிக்கு சென்று திரும்புவதுதான் நல்லது. அதுவும் எப்படி?எந்தவிதமான முன்னறிவிப்புமின்றி. இதுபற்றி பிறகு சொல்கிறேன்! நீ போய் சற்று ஓய்வு எடுத்துக்கொள்!"

இசைவேள் ரகுநாத போஜனின் மனமஞ்சத்தில் ஆயிரம் எண்ணங்கள் அணி அணியாகப் புரண்டன. கிருஷ்ணப்ப நாயககன் வகையில் தான் நடந்து கொண்டது அவ்வளவாகச் சரியில்லையோ? இல்லையென்றால் .....குருநாதா கோவிந்த தீட்சதரின் ஞானக கதிர் படர்ந்த திருவதனத்தில் சிந்தனை இழைகள் இப்படிப் பின்னுவானேன்...? 'செஞ்சிக்குச் சென்றே திரும்பியிருக்கலாம்' என்ற அவரின் விவேகம் நிறைந்த முடிவுக்குள்தான் எத்தனை அரிய பொருள்கள் அடங்கிக கிடக்கின்றன!

பெரிதும் வியந்த நோக்குடன் பிரதானியாரையே நோக்கிக்கொண்டிருந்த ரகுநாதனுக்கு மேலும் ஓர் அதிர்ச்சித் தரக்கூடிய—வியப்புக்குரிய நிகழ்ச்சி அப்போது ஏற்பட்டுவிட்டது. அவர்கள் பேசிக் கொண்டிருந்த அறைச் சாளரத்து வழியாக அம்பொன்று வேகமாகப் பாய்ந்து வந்து விழுந்தது. அதிலே ஓர் ஓலைச் சுருள் இணைக்கப்பட்டிருந்ததைக் கண்ட பிரதானி கோவிந்த தீட்சிதர், விரைவாகச் சென்று

எடுத்துப் பிரித்துப் படிக்கத் தொடங்கினுர்:

''ரகுநாதா!

அபரஞ்சி ஓர் அபசுரம்! அதில் ஏற்கெனவே சோழனு டைய ராகம் பேசப்பட்டு விட்டது. உன்னை கிருஷ்ணப்ப நாயக்கன் நன்ருகவே வஞ்சித்துவிட்டான்—'

மிகப்பயங்கரமான இந்தச் செய்தி அறிந்த பிரதானி கோவிந்த தீட்சதர் செய்வதென்னவென்று புரியாமல் அப்படியே திகைத்து மலைத்து நின்று விட்டார்.

## 11



# வாழ்வுக்கு வந்த ஓலை

தீட்சிதரின் திகைப்பும், வியப்பும் ரகுநாத போஜனுக்கு ஐயத்தைக் கிளறின. 'அப்படி என்ன அபாயகரமான இரகசியம் அந்த ஓலையில் புதைந்து கிடக்கமுடியும்? யார் அனுப்பிய ஓலையாக அது இருக்க முடியும்? இப்படி அநாமதேயமாக ஓலை பாய்ந்து வரும் நிலை, ரகுநாதனுடைய ஆட்சியிலும் தலை நீட்டுகிறதே! மக்களின் இதயமே மணிமுடியாகக் கொண்ட என்னுடைய ஆட்சியில் இப்படிச் சதியாளர்கள் பெருகும் நிலையேற்படுகிறதா? அதற்கு வித்தாக-கட்டியமாக அல்லவோ இந்த ஓலை நாகாஸ்த்திரமாகப் பாய்ந்து வந்திருக்கிறது?'—

மன்னன் விஜயரகுநாத நாயக்கனுடைய சிந்தனை வேகத்தைக் குறிப்பால் உணர்ந்து கொண்ட மகா மந்திரியும், ஆசானுமான கோவிந்த தீட்சிதர் ஒரு நொடியில் புரிந்துகொண்டு, தன்னிலையை முதலில் தேற்றிக் கொண்டார். தான் திகைத்ததும், வியந்ததும் தவறுதலானவை என்பதை முதலாவதாக உணர்ந்தார். எனவே, மெல்ல ஒரு போலிச் சிரிப்பை வரவழைத்துக் கொண்டவராய் ரகுநாதனை நெருங்கினார்.

"ரகுநாத போஜா! ஏன் அப்படி மருள மருள நோக்குகிறாய்? ஓலையில் வந்த செய்தி எதுவாக இருக்குமோ என்றுதானே?" தீட்சிதர் தீர்க்கமான குரலுடன் தேற்றும் பாவனையில் பேசினார். ரகுநாத நாயக்கனும் பதில் ஏதும் சொல்லாமல் வெறுமனே தலையசைத்தான். அந்த அசைவில், ரகுநாதனுடைய அரசியல் ஞானம் ஆழத்துடன் தென்பட்டதாக உணர்ந்தார் மகாப்பிரதானி தீட்சிதர்.

"ரகுநாதா! அஞ்சுவதற்கு அஞ்சவேண்டியதுதான்; நீ அஞ்சியதிலும் ஆச்சரியமுமில்லை; குற்றமும் இல்லை. ஆனாலும் அஞ்சற்க! இது ஒன்றும் அப்படி அஞ்சத்தக்க செய்தியல்ல. உன்னுடைய வாழ்வு நலனை—ஆட்சிநலனைக் கோரி, அதற்கான ஓர் அனுதாபம்—ஒரு நிலைமையை விளக்க வந்த ஓலைதான். கிடக்கட்டும். நாம் பேசவந்த காரியத்தைப் பற்றிப் பேசிமுடிப்போம்."

மகாமேதையான கோவிந்த தீட்சிதர் பதினேழாம் நூற்றாண்டின் சாணக்கிய பெருமானாயிற்றே! ஏன்? சாணக்கியருக்கும் சில பல அடிகள் மீறியவர் என்றும் சொல்லலாம். சாணக்கியருக்குக் கலை ஞானம் போதாது; தீட்சிதருக்கு அது நிரம்ப இருந்தது. கலாவிற்பனனரும்கூட! அவருடைய குமாரர் வேங்கிடமகியை இசை உலகம் மறக்க முடியாதே! தமிழுக்கு ஒரு தொல்காப்பியன், சமஸ்கிருதத்துக்கு ஒரு பாணினி என்றால், சங்கீதத்துக்கு ஒரு வேங்கிடமகி என்று அடித்துக் கூறலாமே! எழுபத்திரண்டு மேளகர்த்தாக்களை உண்டாக்கி அதற்கும் ஒரு சங்கேதச் சக்கரத்தைச் சிருஷ்டித்த பெருமைக்குரியவர் என்றால்,

அவரைப் பெற்ற தந்தையான—குருவான கோவிந்த தீட்சிதர் எத்தன்மை வாய்ந்தவராக இருக்க முடியும்? தஞ்சைபுரி மாமன்னன் விஜயரகுநாத போஜ நாயக்க னும் தீட்சிதருடைய ஒரு படைப்புதானே?

மகாப் பிரதானியருடைய சாதுரியமான பேச்சைக் கேட்டுச் சிந்தனையைச் சல்லடையாக்கினான்; சலித்தும் பார்த்தான். நிறைய திப்பிகள் தென்படத்தான் செய் தன. ஏதோ வரக்கூடாத செய்தியொன்று வந்திருக் கிறது. சொல்லக்கூடாத அதனைச் சொல்ல மறுக்கிறார் என்பது மன்னனுக்குத் தெள்ளத் தெளிவாகத் தெரிந்தது. எனினும், தெரிந்துகொள்ள முடியாதவன் போன்றே பாவனை செய்தான் ரகுநாதன்.

எங்கே ஓலையைக் கேட்டுவிடுவானோ, அதன் வாச கத்தை அறியத் துடிப்பானோ என்ற ஐயம் மகாப் பிரதானி தீட்சிதர்க்கு இருக்கத்தான் செய்தது. அதற் குரிய நல்ல சமாதானத்தை உருவாக்குவதில் அவர் மனம் முனைந்துகொண்டிருந்தது. என்ன சமாதானம் சொல்வது? ஓலையைக் காட்டவோ, அதிலிருக்கும் வாசகத்தைக் கூறவோ முடியாத காரியம். கூறு வதும் குற்றமானது. எப்படிக் கூறமுடியும்?

இப்போதுதான் புத்தம்புதிதாக வந்த மனைவியாக அபரஞ்சி விளங்குகிறாள்! அவளுடைய அழகில் ரகுநாதன் மயங்கித் தேன் குடித்த நரியாகத் திரிந்த காலம் ஒன்றுண்டு. மணந்தால் அவளையே மணப் பேன் என்று ஒன்றைக்கால் தவம் செய்த காலம் ஒன்றுண்டு. அப்பேர்ப்பட்டவள் பட்டகதரசியாக, முதல் மனைவியாக வரக்கூடாது என்று தீட்சிதர்

முனைந்த முனைப்புகள் கொஞ்சமா, நஞ்சமா? ஒரு நய வஞ்சகனுக்கு மகளாகப் பிறந்த தீப்பயனைத் தவிர, அபரஞ்சி வேறெதையும் கண்டறியாள். எச்சத்தால் அறியப்படும் என்ற தத்துவத்துக்கிணங்க கிருஷ்ணப்ப நாயக்கனுக்குப் பிறந்தகாரணத்தால், அபரஞ்சியும் வஞ்சகியாக இருப்பாளோ என்று தீட்சிதர் ஐயப்பட்ட காலமும் ஒன்றுண்டு. ஆனல், நாட்கள் செல்லச் செல்ல அபரஞ்சியின் குணநலன்களை மகாப் பிரதானியால் புரிந்துகொள்ள முடிந்தது. காலம் கடந்த முடிவுக்கு என்ன செய்ய முடியும்? 'மணந்தால் ரகுநாதன், இல்லையேல் கன்னி வாழ்க்கை' என்று தந்தையிடம் அபரஞ்சி கொண்ட சபதத்தை தீட்சிதரும் கேள்விப் பட்டுத்தானிருந்தார். செஞ்சி வேந்தன் கிருஷ்ணப்ப நாயக்கன்தான் அபரஞ்சியை எத்தனைக்கு நச்சாக்க முனைந்தான்! தீவுககோட்டை வேந்தன்-முதலைப் படை வேந்தன் சோழகனுக்கு மனைவியாக்க அவன்தான் எத்துணைகு முயன்றன். கிருஷ்ணப்பனுடைய முயற்சிகள் எல்லாம் படுதோல்வி கண்டன. போதாக் குறைக்கு அண்மையில் மூண்ட போரில், முகமதியர்கள் பால் சேர்ந்து விஜயநகரத்தை—சொந்த இனத்தை அழிக்கப் பாடுபட்டான். அந்தத் தோல்வியால் கண்ட பயனையும், சிறைவாசத்தையும்தான் நேயர்கள் ஆரம்பத்தில் கண்டார்களே! ஆனல், அச்சமயம் ரகுநாதன் அபரஞ்சியைச் சந்திப்பானென்றே, விதியின் கரங்கள் அவர்களைப் பிணைத்து வைக்கும் என்றே மகாப்பிரதானி கோவிந்த தீட்சிதர் எதிர்பார்த்தாரில்லை. இனியும் குறுக்கே நிற்பது அறிவுடைமையன்று என்ற முடிவின் கீழ்தான், அவர்களுடைய திருமணத்துக்கு அவர் கொண்டதே! மறுத்திருந்தால், ரகுநாத

னுடைய சரித்திரமே உண்மையில் மாற்றம் கண்டிருக்கும். பெரிய அரசியல் ஞானியான தீட்சிதர்க்கு இது புரியாமலில்லை. ஆகவே, அபரஞ்சியை அவர் முழு மனத்துடன் ஆதரித்தார்; மணக்கச்செய்தார்; வரவேற்பும் தந்தார். ஆனால், இப்போது கிடைத்திருக்கும் ஓலை பகரும் செய்தி?

'அபரஞ்சி ஓர் அபசுரம்!'—

ஐயோ! எத்தனை பயங்கரமான வாசகம்! நாகாஸ்த்திரத்தின் நஞ்சுகூட எளிமையானமாயிற்றே! அது ஆளைத்தானே கொல்லும்? இந்த அபசுரக்கீதம் செவியில் பட்டமாத்திரத்தில், சிறுகச்சிறுக வாழ்வையே கொன்று குடித்துவிடுமே! சந்தேகமே ஒரு பொல்லாத வியாதி! அதிலும் கணவனுக்கு மனைவியின் பேரில் ஏற்படும் சந்தேகம் விஷத்திலும் கொடியதாயிற்றே! 'கொண்ட மனைவி சோரம் போனவள்' என்ற கொடிய நிலையைவிட, கொடியது இந்த உலகத்திலே இருக்க முடியாதே!

'ஏன் இருக்கமுடியாது? மனைவிதான் ஒரு முக்கியமா? அவள் போனால் இன்னொருத்தி' என்று விதண்டாவாதம் பேசும் மானமற்ற சீழுடல்கள் இந்த உலகில் இருக்கத்தான் செய்கின்றன. அந்த ஜடங்களுக்கும்கூட மனத்தளவில் இது ஒரு மாசு—துடைக்க முடியாத அரிப்பாயிற்றே!

மகாப்பிரதானி கோவிந்த தீட்சதர் திட்டமான ஒரு முடிவுக்கு வந்தவராய் ஓலைச் சுருளை எடுத்து இடுப்பில் செருகிக்கொண்டார்.

"சுவாமி! அந்த ஓலையை நான் பார்வையிடக் கூடாதா?"

ரகுநாதன் அடக்க ஒடுக்கமாகவே கேட்டான். முன்பு ரகுநாதன் தலையசைத்தது போலவே இப்போது தீட்சிதர் தலையசைத்தார். அது, 'முடியாது' என்ற முடிவை ஆழமாக எடுத்துக் காட்டியது.

"ஏன் சுவாமி? நான் தெரிந்துகொள்ளக் கூடாத ரகசியமா அது?"

"நீ தெரிந்து கொள்ளக்கூடியதுதான். ஆனால் இப் போதைக்கு நீ தெரிந்து கொள்ளக்கூடாத ஒன்று. ரகுநாதா! என்பேரில் உனக்கு நம்பிக்கை யிருக்கிறது அல்லவா?"

"நன்றாகக் கேட்டுவிட்டீர்கள் சுவாமி! அது பரி பூரணமாக இருக்கிறது!"

"அப்படியென்றால் ஓலையை மறந்துவிடு! உன் நலத்தில் அல்லும் பகலும், அறுபது நாழிகைகளும் பங்குகொண்ட என்னிடமே அதை விட்டுவிடு! எதை எதை எப்படிச் செய்ய வேண்டுமோ, அதை அதை அப் படிச் செய்ய எனக்குத் தெரியும். காலம் வரும்போது நீயாகவே இதனை அறிந்து கொள்வாய்; அப்படி ஒரு சந்தர்ப்பம் நிச்சயமாக வந்தே தீரும்; வா! உப்ப கைக்குச் சென்று சற்று காற்றோட்டமாக அமர்ந்து பேசுவோம். ஒன்றைமட்டும் தெரிந்துகொள்! ஓலை உன் நலத்தை—உன் நாட்டின் நலத்தைக் கொண் தாகும். போதுமா, மகனே?"

"சுவாமி! என் வாளுக்கு மற்றவர் மீள முடியா என்பது எப்படி உண்மையோ, அப்படியே உங்க ... நான் மீறுதவன் என்பது பரிபூரண உண்மை

யாயிற்றே! ஓலையைவிட உங்களைத்தான் நான் அதிக மாக நம்புகிறேன்! வாருங்கள், உப்பரிகைக்கே செல் வோம்.''

தன்னுடைய மாணவனும், தஞ்சையின் மன்னவ னும், சகல கலா விற்பன்னனுமான ரகுநாத நாயக் கனைக் கூர்ந்து கவனித்து, மெல்லச் சிரித்துச் சிம்மம் போல் நடந்தார் மதியூகி கோவிந்த தீட்சிதர்.

12



# அமைதி மகளே, அமைதி!

ஒரு வாரம் கழியும் வரை அந்த ஓலைப் பற்றிய செய்தியிலேயே மூழ்கிக் கிடந்தார், மகாப்பிரதானி கோவிந்த தீட்சதர். மனத்தள விலேயே பூட்டப்பெற்றிருந்த அந்தச் செய்திக்கான விமோசனத்தையும்,விமரிசனத்தையும் எந்தவிதத்தில் காண்பது என்பதே அவருடைய குழம்பிய சிந்தனை யின் மூலகாரணம். இதுவரை அவர் ஓலையை எத்தனை முறை படித்துப் பார்த்திருப்பாரோ, மனத்தைப் பிசைந்துகொண் டிருப்பாரோ? ரகுநாதனுக்கு ஒன்று என்றால், அது தன்னுடையது என்று எண்ணுபவ ராயிற்றே அவர்!

'திடும்'மென்று அவருடைய சிந்தனையில் ஒரு பொறி தெறித்தது. ஆமாம்; அதுதான் சரியான ராஜ தந்திரம். ஓலையை வைத்துக்கொண்டு சிந்தித்தோ, சோதித்தோ முடிவுகாணவேண்டும் என்பது சிரமமான காரியம். இதற்காகத் தன்னையோ, தன்னுடைய ஆட் களையோ ஏவி நாட்களை விழுங்கவைப்பதும் மதியீனம். இதனால் அரசியற் காரியங்களைக் கவனிக்க முடியாம லும்போய்விடலாம். அதுமட்டுமல்ல; ஏவும் ஆட்களுக் கும் ஓரளவு-ஓரளவு என்ன பேரளவு செய்தியும் தெரிய

நேரிடலாம். பிறகு, புள்ளி மானைப் பிடிக்கப் போய் கொள்ளிச் சிறுத்தையாக முடிந்துவிட்டால் ..?

விஷத்தை விஷம் கொண்டே முறிக்கும் தந்திரத் தைத்தான் இதற்குப் பயன்படுத்த வேண்டும். ஆம்; அபரஞ்சியிடமே இந்த ஓலையைக் காட்டிவிட வேண் டும். அவள் மூலமே செய்திக்கான பதிலையும் எதிர் பார்க்க வேண்டும்.

ஆணித்தரமான முடிவுடன் எழுந்த தீட்சதர், எதை நினைத்தாரோ, என்ன நினைத்தாரோ மீண்டும் ஆசனத்தில் அமர்ந்தார். அங்கிருந்தே அறிவிப்பு ஓசையை எழுப்பினார். ஓசையடங்கு முன்னம் காவலன் ஓடிவந்து நின்றான். "அபரஞ்சி தேவியை நான் அழைத்துவரச் சொன்னதாகக் கூறி அழைத்துவா! தனிமையில் பேசவேண்டும் எனபதாகவும் சொல்லு." என்று கூறி இடக்கரத்து விரல்களில் அணிந்திருந்த ஐந்து மோதிரங்களுள், சுண்டுவிரல் மோதிரத்தை—இலச்சினையைக் கழற்றிக் கொடுத்தார். அது சின்னஞ் சிறிய செயல்களுக்கான உத்திரவு மோதிரம் பெற்றுக் கொணட காவலாளி தலை வணங்கி விடைபெற்றான்.

சற்றைக்கெல்லாம் அபரஞ்சி பணிவான நடை நடந்துவந்து நின்றாள். உடன் வந்த காவலாளன், மோதிர இலச்சினையை மகாப் பிரதானியாரிடம் கொடுத்துவிட்டுத் தலை பணிந்து விடைபெற்றான்.

"அபரஞ்சி! உன்னை ஒரு முக்கிய காரணத்துக் காக வரவழைததேன். இப்படி உட்காரம்மா!"

"தங்கள் அழைப்புக்கு, என்றும் இந்த அடியவள் காத்திருக்கிறாள் சுவாமி!" என்று முகமும், அகமும்

மலர, எதிரே இருந்த ஆசனத்தில் அமர்ந்தாள் அபரஞ்சி.

கொஞ்ச நேரம் வரை கோவிந்த தீட்சிதர் வாய் மூடி இருந்தார். அதுவரை அபரஞ்சியும் தலை குனிந்தே காணப்பட்டாள். மரியாதையால் மட்டும் அல்ல; பயத்தாலும் கூட! மகாப்பிரதானி கோவிந்த தீட்சிதர் அந்த அரண்மனைக்கே சிம்ம சொப்பனம் போன்றவராயிற்றே! பெயரைக் கூட காதும் காதும் வைத்தாற் போலத்தான் உச்சரிக்க வேண்டும். ஏன்? நாட்டு மக்களுக்கும் கோவிந்த தீட்சிதர் வைத்தது தான் சட்டம் என்பது, நன்கு புரிந்தசெய்தியாயிற்றே!

மகாப்பிரதானி மெல்லக் கனைத்துக் கொண்டார். அபரஞ்சி தலை நிமிர்ந்தாள்.

அபரஞ்சி! நான் ஏதேனும் கேட்கத் தகாததைக் கேட்டால் கோபித்துக்கொள்ள மாட்டாயே?"

"கேட்கத் தகாததா? தீட்சிதரா இப்படிக் கேட்கிறார்? என்ன கேட்கப் போகிறார்? நடுங்கினாள் அபரஞ்சி. ஆயினும் பதில் சொன்னாள்: "சுவாமி! தெய்வம் போன்றவர் தாங்கள். தாங்கள் எதுவேண்டுமானாலும் கேட்கலாம்!"

தமக்குள் ஒருவாறு நகைத்துக்கொண்டார் மகாப் பிரதானி. "அபரஞ்சி! நான் எதைக்கேட்டாலும் அது உன்னுடைய நலத்தை உத்தேசித்துத் தானிருக்கும். அபரஞ்சி, கேவலம் கிருஷ்ணப்ப நாயக்கனுடைய மகளல்ல; இப்போது அவள் பெருமைபொருந்திய தஞ்சை நாயக்கனுடைய தரும பத்தினி! நினைவிருக்கிறதா?"

"இருக்கிறது சுவாமி!" என்று பணிவுடன் கூறி, பக்தி செலுத்தும் பயந்தபாவனையுடன் காணப்

அவளிடம் எந்தவிதமான எதிர்நடிப்பும் தென்படவில்லை. 'கேவலம் கிருஷ்ணப்ப நாயக்கன்' என்று அழுத்தமாகக் கூறியும், அதைப்பற்றிக் கவலைப்பட்டவளாகத் தெரியவில்லை. தீட்சிதர்க்கு வியப்பாகவே இருந்தது.

"அபரஞ்சி! முதலில் உன்னுடைய சத்தியம் தேவை!"

'சத்தியமா?"

"ஆமாம்; மகளே! நான் கேட்கப்போகும் கேள்விகள் உன்னோடு மறைந்துவிட வேண்டியவை. அவை மற்றவர்க் காதுகளுக்கு எட்டக்கூடாதவை. அதற்கு ஒரு சத்தியம் தேவை. அடுத்து இங்கு நடந்த எதுவும் எவர்க்கும் தெரியக் கூடாது. அதற்கும் ஒரு சத்தியம் தேவை!"

அப்போது சற்றே மருளத்தான் செய்தாள் அபரஞ்சி. அவள் கேட்டாள்:

"நான் தங்களைக் காண வந்த செய்தியும் கூடவா சுவாமி?"

"இது சாதாரணம். நான் அழைத்தேன்; நீ வந்தாய். ஏன் வந்தாய்? நீ பாடி, நான் கேட்டு ரசிக்க விரும்பினேன். போதுமா?"

"போதும் சுவாமி! போதும்! மற்றபடி எந்த விஷயத்தையும், தாங்கள் கேட்கப்போவதையோ, இங்கு நடக்கப்போவதையோ எதையும் எவடமும் சத்தியமாக—என் கணவர் மீது ஆணையாகச் சொல்ல மாட்டேன். போதுமா சுவாமி?"

"போதும் மகளே, போதும்!" என்று நிறைவாகக் [illegible] 'கணவர்மீது ஆணை' என்றுஅபரஞ்சி

கூறிய சொற்களின்மீது கவனத்தைச் செலுத்தினார். ஆஃகா! என்ன பதிபக்தி! தெய்வங்களைவிட கணவன் மேரியவனாக வல்லவோ இவளுக்குத் தெரிகிறது! எடுத்துக்கொண்ட செயலின் தொடக்கப் பகுதியே தீட்சிதர்க்கு நிறைவை அளித்தது. அவர் முதல் கேள்வியாகக் கேட்டார்: "அபரஞ்சி! ரகுநாதனைத் தவிர வேறு எவனையேனும் விரும்பி, நட்புகொண்டு, உன்னை நீ விற்றதுண்டா?"

திறமார்ந்த துணிவுடன், அமைதி நிரம்பிய சொற்களால் தீட்சிதர் கேட்டு முடித்த மறுகணம், "சுவாமி!" என்றலறினாள் அபரஞ்சி, தன்னை மறந்தவளாய்! அப்போது அவளுடைய விழிமணிகள் அக்கினிப் பிழம்புகளாக மாறிக்கொண்டு வந்தன. முகம் குங்குமமாகச் சிவந்தது. உடல் குபீரென்று வியர்த்துக் கொட்டியது. நடுங்கிய உதடுகளிலிருந்து "சுவாமி! என் பெயர் அபரஞ்சி!' என்ற உறுதியான சொற்கள் வெளிவந்தன. அவளைக் கண்டு கோவிந்த தீட்சிதரே அரண்டு மருண்டு போய்விட்டார். அவரையும் அறியாமல் அவருடைய வாய் "அமைதி மகளே' அமைதி!" என்று அமைதியாகக் கூறியது.

13

# வணக்கம் பாடின வளைகள்

அபரஞ்சியை அழகியாகப் பார்த்திருக்கிறார்கள்; அடக்கமானவள் என்று கேள்விப்பட்டிருக்கிறார்கள்; இசைவாணி என்பதை ரகுநாதனுடையசெவிகள் நிரூபித்து இருக்கின்றன;சிறப்புடை மதிப்புக்குத்தகுதியானவள் என்று பலர் சொல்லியிருக்கிறார்கள். ஆனால், கோபக்காரி என்று எவரும் கூற வில்லையே! இதோ, தீட்சிதர் கண்கூடாகவே கண்டு விட்டார். கோப மிருக்குமிடத்தில் தூய்மையும், இதயமும், நேர்மையும் இருககும் என்பது மனித தத்துவம். சுடக்கூடிய நெருப்பில் பரிசுத்தமும், அடவியழிக்கும் யானையிடம் இதயமும்,விஷம் கக்கும் நாகத்திடம் நேர்மையும் இருககத்தானே செய்கின்றன? அபரஞ்சியைப பொருத்தமாட்டில் கோபம் ஒரு குற்றமாகாது. அவள் கோபப்பட வேண்டிய தற்கே கோபப்பட்டாள். அது அறமும் கூட!

கோவிந்த தீட்சிதர் தம்முள் ஒரு சமாதானம் செய்துகொண்டவராய் வெகுநேரம் வரை அமைதியை நீடிக்கவிட்டார். அபரஞ்சிக்கும் ஒருவாறு கோபம் தணிந்தது. அவள் மெல்லத் தலையைத் தூக்கினாள். பெரும் சாம்ராஜ்யமே தலை வணங்கக்கூடிய மகா மேதையைக் கோபத்தால் வாய்மூடச் செய்து

விட்டோமே என்ற நினைவும் அவளுக்கு ஏற்பட்டது. அவளுடைய கண்களில் செம்மை மெல்ல மெல்ல மறைந்து, நீலம் இலோசாகக் குடிபுகத் தொடங்கியது. அதரங்கள் முணு முணுத்தன: "சுவாமி! என்னை மன்னித்துவிடுங்கள்!"

தீட்சிதர் அலட்சியம் நிறைந்த போக்கில் மெது வாகத் தமக்குள் சிரித்துக்கொள்பவர் போலச் சிரித்துக் கொண்டார். "அபரஞ்சி, என் மகளே! இதில் மன்னிக்க என்ன இருக்கிறது? நீ கோபப்பட வேண்டியதற்குத் தானே கோபப்பட்டாய்? நான் கேட்ட கேள்வி சாமான்யமானதல்லவே? இன்னொருத்தியாக இருந்தால் என்னை அடித்தே இருப்பாள்!"

"அபச்சாரம். அபச்சாரம் சுவாமி, அபச்சாரம்!"

"அதுவே சாரமும் கூட! ஏன் அதுவே விசாரமும் கூட! அபரஞ்சி! கற்பெனும் வாசற் கதவங்களுக் குள்ளே இருக்கும் ரகசியத்தை அறியவேண்டுமானல் மெல்லத் திறந்து பார்க்க முயலலாம். ஆனல், கதவை உடைத்துக்கொண்டு பார்க்க முயலக்கூடாது. அப்படிப் பார்க்க முனைந்தது என் தவறுதான்!"

"தங்களுக்குள்ள உரிமையைத்தான் தாங்கள் செய்தீர்கள்; இதில் தவறில்லை, சுவாமி! தவறு செய்தவள் நான். ஏனென்றல், தங்கள் உரிமையை நான் புரிந்துகொள்ளவில்லை யல்லவா?"

"புரிந்துகொண்டிருக்கிருய். ஆனல் மறந்து விட்டிருக்கிருய்!"—கிடைத்த சந்தர்ப்பத்தை நன்கு [illegible] கொண்டார் தீட்சிதர். மேதாவி

அபரஞ்சி தலை குனிந்தாள். அதை மேலும் பயன் படுத்திக்கொண்டு சோதனையை வேற்றுத் திக்கில் திருப்ப உத்தேசித்தார் தீட்சிதர். "மகளே, பரவா யில்லை! உன் நிலையில் யாரும் மறக்கத்தான் செய்வார்கள்! நான் யார் பொருட்டு இவ்வாறு கேட்டேன்? உன் பொருட்டு! உன் பொருட்டென்றால், ரகுநாதனின் நலத்தையும் உத்தேசித்துத்தான்! குருவாக விளங்கும் கோவிந்த தீட்சிதன் கேட்கிறான் என்றால், அது அசட்டுத்தனமாக, நிச்சயமாக இருக்க முடியாது என்பதை நீயறிவாய்! உன்னை இங்குக் கொண்டுவர உத்தரவிட்டவனே நான் தான்! என் ஆசிக்குப் பிறகுதான் ரகுநாதன் மாலையிட்டிருக் கிறான். ரகுநாதன் கேட்கவேண்டிய கேள்விதான் இது என்பது உனக்குத் தெரியாது. நல்ல வேளையாக நானாகக் கேட்க நேர்ந்தது. இதற்காகச் மகிழ்ச்சிக் கொள் தெரிகிறதா, மகளே!"

"சுவாமி"—தீட்சிதரின் சொல்லம்புகளின் வேகத்தால் தன்னை உணர்ந்த அபரஞ்சி, வியப்பால் வாய் பிளந்தாள்.

"வியக்காதே மகளே! உன்னால் பதில் சொல்ல முடிந்தால் சொல்!"

"சுவாமி! மனத்தால் ஒரு முறை தவறி யிருக்கிறேன்; வாக்கால் இருமுறை தவறியிருக் கிறேன்; காயத்தால் மும்முறை தவறியிருக்கிறேன்!"

"என்ன ...!"

"ஆமாம், சுவாமி! தஞ்சைநாயக்க மா மன்னர் ரகுநாத போஜர்பால் முதல் முறையாகத் மனத்தளவில் தவறியிருக்கிறேன். அந்தப் பருவத்தில் வாக்கால்

இருமுறை அவரை மணந்து கொள்ளக் கெஞ்சிய துண்டு. அதன் பிறகு கனவில் கூட தவறியது கிடையாது. எந்தக் காலத்திலுமே தவருத காய திருமணத்துக்குப் பிறகு மும்முறை தவறிது. மனம், வாக்கை எவரிடமே தவறவிட்டேனே, அவரிடமே தான்!''

அபரஞ்சியின் திறமையான, அதே நேரத்தில் தீர்க்கமான பேச்சைக் கேட்டு தீட்சிதர் வியப்பும், திகைப்பும் கொண்ட நிலையில் 'கட கட' வென்று சிரித்தார்.

''ஏன் சுவாமி சிரிக்கிறீர்கள்?''

''அபரஞ்சியை நான் அறிவேன்! 'என் பெயர் அபரஞ்சி' என்று முன்னம் கூறினயே! அதன் அர்த் தத்தை நான் உணர்வேன்! நீ புடம் போட்டத் தங்கம் தான்! ஆனலும், இப்படி ஓர் ஓலை வந்திருக்கிறதே! இதறகு நீ என்ன மறுமொழி கூறப்போகிருய், அபரஞ்சி?'' என்று கூறியவராய் அதுவரை இடுப்பில் செருகப் பெற்றிருந்த ஓலையை எடுத்து நீட்டினர்.

புரியாத மருட்சியுடன் ஓலையைப் பெற்ற அபரஞ்சி, விரைவாகப் பிரித்துப் படிக்கலானுள். அப்போது கோவிந்த தீட்சிதர் வெகு உன்னிப்பாக அபரஞ்சியின் முகத்தைக் கூர்ந்து கவனித்தார். அந்த முகத்தில் எந்த விதமான சலனமும் அவர் எதிர் பார்த்ததுபோல் காணப்பட வில்லை.

அபரஞ்சி இப்போது அலட்சியமாகச் சிரித்தாள். அது முன்னம் கோவிந்த தீட்சிதர் சிரித்த சிரிப்பைப் போலவே இருந்தது.

''ஏனம்மா சிரிக்கிருய்?''

"சுவாமி! இந்த அனுமதேய ஓலைக்காகவா என்னை இத்தனை பெரிய சோதனைக்கு அழைத்துவிட்டீர்கள்?"

"இந்த ஓலை உனக்கு அவ்வளவு அநாவசியமாகத் தெரிகிறதாம்மா?"

"சுவாமி! ஏமாற்றம்தான் மனிதனைப் பைத்தியக்காரனாக்குகிறது! ஏன், கொலைகாரனாகவும் மாற்றிவிடுகிறது! இந்த ஓலையும் அத்தகைய ஒன்றுதான்!"

"இதை யார் எழுதியிருப்பார்கள் என்று நீ நினைக்கிறாயம்மா?"

"தீவுக்கோட்டைச் சோழன் செய்த வேலைதான் இது!"

"அப்படியா! நானும் நினைத்தேன். திட்டமாகச் சொல்ல முடியுமா?"

"அது முடியாது சுவாமி. ஏன்? என் தந்தையே இதைச் செய்திருக்கக்கூடாதா?"

மலையிடிந்து விழுந்தாலும் மலைக்காத தீட்சிதரே இந்தக் கட்டத்தில் மலைத்துவிட்டார். என்ன போடு போட்டுவிட்டாள் இவள்!

"நீ அப்படிச் சந்தேகிக்கிறாயா, அம்மா?"

"ஏன் இருக்கக்கூடாது என்பதுதான் என் ஊகம்!"

"அப்படியென்றால் ஒன்றைச் செய்வாயா?"

"காத்திருக்கிறேன், சுவாமி!"

"இன்னும் இரண்டு தினங்களில் நீ உன் கணவனுடன் செஞ்சிக்குப் பயணமாகிறாய்!"

"சுவாமி...!"

"கேள், மகளே! உன் கணவனுடைய நன்மையை உத்தேசித்தே இந்த ஏற்பாட்டை நான் செய்திருக்கிறேன். அப்படி நீ செஞ்சிக்குப் போனதும், உன் தந்தையைத் தனிமையில் அழைத்து ஒன்றையும் பேசிக்கொள்ளாமல் இந்த ஓலையைக் கொடு! அப்படிக் கொடுத்துவிட்டுப் படிக்கும்போது முகப் பாவனையைக் கவனி! பிறகு நீ அவர் மனத்தை அறிய முயற்சி செய்! நீ புத்திசாலி! இதற்குமேல் நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. மேற்கொண்டு நான் கவனித்துக் கொள்கிறேன்!"

"சுவாமி! இந்த ஓலை பற்றியவிஷயம் மன்னர்க்குத் தெரியுமா?"

"தெரியாது. இதேபோல், நீயும் ரகசியமாகவே செயலாற்றித் திரும்பவேண்டும்! ரகுநாதன் கரத்தில் ஓலை சிக்குவது ரண களத்தில் கொண்டுபோய் முடிக்கும்!"

"தங்களின் கட்டளைப்படிச் செய்வேன், சுவாமி!"

"நீ போகலாம், அபரஞ்சி!"

அபரஞ்சி புறப்பட எழுந்தாள். அவளுடைய கரங்கள் கூப்பின. வளைகள் வணக்கம் பாடின. அப்போது, அந்தக் கூடத்து கீழண்டைச் சுவர்ப் பக்கமாக ஏதோ ஒரு நிழல் கணநேரத்தில் படர்ந்து மறைந்ததை ஒருவரும் கவனிவில்லை. கவனித்து இருக்கக் காரணமும் இல்லை.

14



# செஞ்சிச் செலவு

'கீழ்த்திசைத் திராய் நகரம்' என்று மேல் திசை வரலாற்று நிபுணர்களால் புகழப்பெற்ற செஞ்சிநகரைக் காண்கின்றோம். பரந்த தொண்டை மண்டலத்தின் தனிப்பெரும் தலைநகராய் அன்றைய நிலையில்விளங்கியதுதான் செஞ்சி. அந்தச் செஞ்சியை அப்போதைக்கு ஆண்டுவந்த கிருஷ்ணப்ப நாயக்கன், தன்னுடைய மகளையும், மன்னர்மருமகனையும் இனிதாகவே வரவேற்றான். ஆனால், கோலாகலமாக வரவேற்கமுடியாமல் போய்விட்டது. காரணம் எந்தவித முன்னறிவிப்புமின்றி திடும்மென்று ரகுநாதன் விஜயம் செய்ததே! தீட்சிதரின் திட்டமும் அதுதானே?

தஞ்சை மாமன்னர் ரகுநாத நாயக்கர் செஞ்சிக்கு விஜயம் செய்திருக்கிறார் என்ற செய்தி அதற்குள் காட்டுத் தீ போல பரவிவிட்டது. மக்கள் திரள் திரளாகக் கூடிவிட்டனர். இளமையும், அழகும், கலைஞானமும் கொண்ட வாலிப மன்னரைப் பார்க்க யார் மனம்தான் துடிக்காது? அதுவும் தங்கள் அரசரின் மகளை மணந்துகொண்ட பற்றுதல் வேறு ஊடே இதழ் விரித்திருந்தது.

எல்லாருக்குமாகக் காட்சி தந்த ரகுநாதன், ஓய்வு வேண்டி அரண்மனையுள் சென்றான். அவனுக்கான

எல்லா வசதிகளையும் ஒரு நொடியில் கவனிக்கத் தொடங்கினர் செஞ்சி அரண்மனையின் முக்கிய அலுவலாளர்கள். கிருஷ்ணப்ப நாயக்கனுக்கு மட்டும் உள்ளூர வேதனையும், பயமும் இருந்தது. எதற்காக இப்படி முன்னறிவிப்பின்றி திடும்மென்று வந்து குதிக்கவேண்டும்?

எப்படியோ, தான் வேண்டிக்கொண்டது போல் மன்னர், மருமகனை வந்துவிட்டார். இனி சீர் வரிசை களுடன் கௌரவமாக அனுப்பிவைக்க முனைய வேண்டும்!

விருந்துக்கான ஏற்பாடுகள் தீவிரமாக நடை பெற்றன. ரகுநாதன் ஆந்திரனானாலும் புலால் மறுத் தவன். சைவ உணவை உண்ணுபவனாக இருந்தான். ஆகவே, அவனுக்கு வாழ்க்கைப்பட்ட அபரஞ்சியும் அந்த உணவையே தன்னுடைய உணவாகக் கொண்டு விட்டாள். கணவன் எவ்வழியோ, மனைவியும் அவ்வழி என்றிருத்தல்தான் இல்லறத் தருமம்; பொருத்தமும் கூட! இது கிருஷ்ணப்ப நாயக்கனுக்கே வியப்பாக இருந்தது. அபரஞ்சியா இவ்வாறு மாறிவிட்டாள்? நம்ப முடியவில்லையே!

கோவிந்த தீட்சிதரைக் குருவாகக் கொண்டதால் ரகுநாதன் சாகப் பட்சிணியாக மாறிவிட்டான். மாமிசப் பட்சிணியாக இருந்த இவனுக்கேன் இந்தத் திடீர் மாற்றம்? கலாவதிகூட இப்படிமாறி இருப் பாளோ என்பது ஐயத்துக்குரிய விஷயமாயிற்றே! இந்த அபரஞ்சிக்கு என்ன கேடு வந்துவிட்டது,இப்படி உடம்பைக் கெடுததுக்கொள்ள?—

கிருஷ்ணப்பன் மேலும் மேலும் வியந்து கொண்டான். ஆகவே, அனைவருக்குமாகச் சைவ உணவே தயாரானது. அப்படி இல்லையென்றால் இந்நேரம் எத்தனை நூறு கோழிகள் பலியாகி இருக்குமோ? ஆடுகள் அவதிப்பட்டிருக்குமோ? ரகுநாதனை அவை வாழ்த்திக் கொண்டன.

விருந்தோம்பல் இனிதாக முடிவுற்றது. நாளை மறுதினமே புறப்பட்டாகவேண்டும் என்ற முடிவையும் அப்போதே ரகுநாதன் சொல்லிவிட்டான். அன்றிரவு ஓர் அருமையான நடன கலா நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்திருந்தான் செஞ்சி வேந்தன் கிருஷ்ணப்ப நாய்க்கன். அந்த ஏற்பாட்டில் எந்தவிதமான விஷமமோ, சூட்சமமோ, இருக்கக் கூடாதே!

உண்மையிலும், அவ்விதமான எதையும் கிருஷ்ணப்ப நாயக்கன் அப்போதைக்குச் செய்யத் தயாராக இல்லை. உள்ளுக்குள் என்னமோ வஞ்சம் தலைவிரித் தாடததான் செய்தது. பழிவாங்கும் மனோபாவம் அவனிடம் பரிபூரணமாக இல்லாவிட்டாலும், சரிபாதி யாகவேனும் இருக்கத்தான் செய்தது. 'நாயகர் வம்சத்தில் இந்தச் சிறுவன் தோன்றி விஜயமரபைக் கட்டியாள்வதா? எப்பேர்ப்பட்ட வீரசாதனை புரிந்தவர் கள் நாயக்கர்கள்! அந்த மரபில் வந்தவர்களுள் மூத்த வனாக நான் இருக்க, இந்தக கடைக்குட்டிச் சிறுவன் ஒருகுடை நிழலுக்குக் கொண்டுவந்திருக்கிறானே!'— என்ற பொச்சரிப்பு கிருஷ்ணப்பனுடைய செல்லரித்த இதயத்தில் எழுவதும் அடங்குவதுமாக இருந்தது. எப்படியோ இன்று அவன் மருமகனாகி விட்டான்.

இனியும் பழைய பகையுடன் நடப்பது முறையல்ல, என்றுதான் அவன் நினைவு கொள்ளத் தயாரானுன்.

ஆனுல், அவனுடைய அந்த நினைவின் ஆயத் தத்தை வளர விட்டால்தானே? அப்படி வளர விடாமல் செய்துவந்த திருப்பணி ஸ்ரீ. ஸ்ரீ. அப்பய்ய சாஸ்திரிகளைச் சாரும். அவரும் ஒரு மேதாவி. தஞ்சை டகாப்பிரதானி கோவிந்த தீட்சிதர்க்கு ஒப்பானவராக அவரைக்கூற முடியாவிட்டாலும், சாஸதிரிகளை மீறக் வல்லுநர், அந்நாளில் தீட்சிதரைத் தவிர்த்து வேறு ஒருவரும் இல்லையென்று அறுதியிட்டுக் கூறலாம்.

ஆமாம்; யார் இந்த அப்பயய சாஸ்திரிகள்? பின்னுல் இவரைப் பற்றிக் கவனிப்போம். ஆனுலும் முன்னுல் ஒன்றைக் கூறிவிடலாம். கரிவேப்பிலைக் கொத்துபோல் கடைசியாக மிஞ்சி இருந்த தீவுக் கோட்டைச் சோழனை அநியாயமாக வீழ்ச்சியடையச் செய்தவர் இந்த அப்பய்ய சாஸ்திரிகள்தாம்! இது அவர் பேரிலும் குற்றமாகாது. அவருடைய புலமை யின் குற்றம்; அதனுல் ஏற்பட்ட செருக்கின் குற்றம்.

பொழுது புலர்ந்தால் அரசவை கூட்டவேண்டும். ரகுநாதன் என்ன கட்டளைப் பணிப்பானே? என்று கிருஷ்ணப்ப நாயக்கன் எண்ணி எதிர்பார்த்துக் கொண்டிருந்தபோது, தஞ்சைப் பிரதிநிதி அங்குவந்து சேர்ந்தார். அவர் சொல்லிவிட்டுச் சென்ற சொற்கள் இவைதாம்: "அரசே! நாளைய அவையில் தஞ்சை மன்னர் கப்பப் பொருளை எதிர்பார்க்கிருர். அவருக் குத் தாங்கள் செய்யவிருக்கும் எந்த விதமான சீர் வரிசைகளும் தேவையில்லையாம்; இது உத்திரவு!" கிருஷ்ணப்பன் மலைத்துவிட்டான். மேலும் மலைத்துக்

குலை நடுங்கச் செய்ய அடுத்து அப்பய்ய சாஸ்திரிகள் வாயெல்லாம் பற்களாக உள்ளே நுழைந்தார். கிருஷ் ணப்பனும் அந்த நிலையிலும் மரியாதையுடன் வர வேற்றான் சாஸ்திரிகள் மெல்லக் காதோடு காது வைத்தாற்போல் சொன்னார்; "கிருஷ்ணப்பா, உன் தோழனும் தீவுகோட்டை அரசனுமான சோழகன வந்திருக்கிறான்!"

அவ்வளவுதான். கிருஷ்ணப்பனுக்குக் கீழ்த்திசைத் திராய் நகரமே வெடியுண்டு சிதறுவதாகத் தெரிந்தது. தன்னை மறந்தவனாய் மீண்டும் "என்ன சொன்னீர்கள் சுவாமி! மீண்டும் ஒருமுறை சொல்லுங்கள்!" என்று கூறிக் கண்களை அகல விரித்தான், பித்தம் பிடித்த வனைப்போன்று!

# 15



# அப்பய்ய சாஸ்திரிகள்

மனிதன் எப்பேர்ப்பட்டவனாக இருந்தாலும் அவன் பலவீனமானவனே! அஷ்டமாசித்திகள் கை வரப்பெற்றவர்களிடமும் ஒரு பலவீனம் தெரிந்தோ தெரியாமலோ இருக்கத்தான் செய்கிறது. இது, தெய்வம் இயல்பாக—மனித முத்திரையாக அளித்த ஒன்று. மீறவும் முடியாது; மாறவும் முடியாது. சகலகலா விற்பன்னரான ஸ்ரீ அப்பய்ய சாஸ்திரிகளிடமும் அந்தப் பலவீனம் இருந்ததில் வியப்பில்லை. ஆனால், அவரிடம் அது மறை பொருளாக—தெரியாத நிலையில் இல்லை. வெளிப்படையாக—தெரிந்தே அது தலை விரித்துப் பேயாட்டம் போட்டது. அவர் அதனைப் பரிபூரணமாக உணர்ந்திருந்தார். உணர்ந்து செய்யும் குற்றத்துக்கு எப்போதுமே வலிமை அதிகம். சாஸ்திரிகளிடம் தலைவிரித்தாடிய அந்தப் பலவீனம் பொருமையாகவும், செருக்காகவும், அடுத்துக் கெடுக்கும் கெடுமதியாகவும், இன்னும் பிற வழிகளிலும் கிளை பிரிந்து தலை விரித்தது. எல்லாவற்றுக்கும் ஒரே காரணம்—மூலகாரணம் கோவிந்த தீட்சிதர்தான். 'என்னிலும் அவன் என்ன உயர்வு?'—'அவனுக்கு நான் என்ன மட்டமா?' என்ற பயங்கரக் கேள்விகள்தாம் தேள்கொடுக்காக இதயத்தில் வளைந்து, நாளுக்குநாள் கொட்டி நஞ்சைக் கக்கிக் கொண்டிருந்தன.

"மன்னன் ரகுநாதனுடைய ஆதரவு மட்டும் அந்தத் தீட்சிதனுக்கு இல்லையென்றால் எனக்கு முன் அவன் சாதாரணம், மிகச் சாதாரணம்!" என்று பல முறை பலரிடம் பகன்றிருக்கிறார். இப்போதுமட்டும் என்ன வந்துவிட்டது? செஞ்சி கிருஷ்ணப்ப நாயக்கனை உயர்த்திவிட்டு, அந்தக் கௌரவப் பீடத்தைத் தன்னாலும் அடையமுடியும் என்று திடமாக நம்பினார்; செயலிலும ஈடுபட்டார். அதன் பயனாகத்தான் முதலாவதாக கிருஷ்ணப்ப நாயக்கனைத் தூண்டி, முகமதியர்பால் துணை சேரக்கமுனைந்தார். ஆனால், கிடைத்தது சிறைவாசம். எப்படியோ அபரஞ்சி முயன்றாளோ சிறைவாசம் மீண்டதோ! இப்போது ரகுநாதன் செஞ்சியின் மாப்பிள்ளை. வலையைச் சற்று அதிகமாகவே விரிக்க முயன்றார் அப்பய்ய சாஸ்திரிகள். முதல்முறையாக மூக்கறுபட்ட செஞ்சிகிருஷ்ணப்பநாயக்கனுக்குப் புத்திவரவேண்டுமே! அவன் பேரரசுப் பேராசையால் மதியிழந்து அப்பய்ய சாஸ்திரிகள் வலையில் நன்றாக வீழ்ந்து கிடந்தான். மேலும், அப்பய்ய சாஸ்திரிகள் குருபீடத்தில் அமர்ந்திருந்தார். அடுத்து என்ன நடக்க வேண்டும்; அதை எப்படி நடத்தவேண்டும் என்பது பற்றித் தீவிரமாக ஆலோசனையில் மூழ்கினார். அச்சமயம் செஞ்சியரசன் கிருஷ்ணப்ப நாயக்கன் குருதேவரைக் காண்பதற்காக அங்குவந்து சேர்ந்தான்.

"வா, கிருஷ்ணப்பா!" சாஸ்திரிகள் அவருக்கே உரிய 'இன்'முகத்தோடு வரவேற்றார். அந்த 'முக'த்துக்குப் பெயர்தான் இன்முகம் என்பதும், வஞ்சத்தை நெஞ்சத்தில் வாழவைப்பவர்களுடைய முகம் என்றைக்கும் இனிமை பயப்பதாக இராதே! ஏதோ ஒரு விகாரத் தோற்றத்தைத்தான் அவர்கள் 'இனிமை'

என்ற நினைவுடன் சிரித்து வரவேற்பது; பேசுவது; குலாவுவது!

"குருதேவர் ஏதோ ஆழ்ந்த சிந்தனையிலிருக்கிறார் என்று நினைக்கிறேன்! வரக்கூடாத சமயத்தில் வந்து விட்டேனா?" பெட்டிப் பாம்பாய் அடங்கிக் கேட்டான் கிருஷ்ணப்ப நாயக்கன். அவனுடைய உடல் அவ்வள விற்கு வளைந்து நெளிந்தது.

அப்பய்ய சாஸ்திரிகள் அலட்சியம் நிறைந்த மெய்ப்பாட்டுடன் அகங்கார ஒலிகளைக் கலகல வென்று உகுத்தார். "கிருஷ்ணப்ப, கிருஷ்ணப்பா...! எனக்கென்று ஒரு சிந்தனை—அதுவும் ஆழ்ந்த சிந்தனை இருக்கிறதா? பைத்தியக்காரனே! அல்லும் பகலும், அறுபது நாழிகைகளும் உன்னைப்பற்றிய சிந்தனை தான்—அந்த ஒரே சிந்தனைதான்—அதுவே என் ஜீவச் சிந்தனையும்கூட! உன்னை எப்படிப் பேரரசன் ஆக்கு வது என்பதுதானே என ஜீவலட்சியம்! போகட்டும்; கிருஷ்ணப்பா! உன் திடீர் வருகைக்குக் காரணம்?"

"சுவாமி! என்னவென்று நான் சொல்வேன்? ரகு நாதன் இப்படித் திடீரென்று புறப்பட்டுவிடுவான் என்று நான் எதிர்பார்க்கவில்லை. வந்ததும் வராதது மாக அவன் தன் ஆணவத்தைக் காட்டத் தொடங்கி விட்டான். என்னடா, மாமனார் வீடாயிற்றே என்ற மரியாதை கூடவா இராது?"

"இங்குத்தான் நீ தவறு செய்கிறாய்! இது மாமனார் வீடு என்று அவன் மதித்தால்தானே? முறைப்படிப் பெண்பார்த்து, நிச்சயம் செய்தா மணம் செய்து கொண்டான்? அபரஞ்சி அவனை வேண்டி வரித்துக் கொண்டாள். இன்னும் சொல்லப் போனால், உன்னை

விடுதலைச் செய்ய அவன் உத்தேசித்தான்; அபரஞ்சி யைக் காணிக்கையாகப் பெற்ருன்''

''தங்கள் ஆலோசனையே அதுதானே சுவாமி?''

''ஆமாம்; அது வேற்றுருவில் நிறைவேறியது; மகிழ்ச்சியே! இப்போதும் என்ன வந்துவிட்டது? சீர் வரிசை செய்து அனுப்பிவைக்க வேண்டியதுதானே?''

''அதுதானில்லை. அதற்காகத்தானே நான் தங்களை நாடிவந்தான். சீர்வரிசை எதுவும் வேண்டாமாம். நாளைய அவையில் அதற்குப் பதிலாகக் கப்பம் செலுத்த வேண்டும் என்று கட்டளைப் பிறப்பித் திருககிருன்!''

''என்ன ஆணவம் அவனுக்கு!''

''ஆம்; தலைக்கு மீறிவிட்டது!''

''அதற்காக உன் தலையில், பலர் முனனுல், மாமனுர் என்பதை மறந்து காலை வைக்கப்பார்க் கிருனு?''

சாஸ்திரிகள் தலையைத் தடவி விட்டுக்கொண்டு, நடுவே கொத்துமல்லி வேர்போல் அழகாக நீண்டிருந்த சிறுகுடுமிக் கேசத்தை நீவி விட்டுக்கொண்டார். போட்ட தூபம் கிருஷ்ணப்ப நாயக்கன் மூக்கைத் துளைத்து மூளையைக் குழப்பியது.

''சுவாமி! தாங்கள் கூறும் கட்டளை எதுவோ?''

''கிருஷ்ணப்பா! இப்போதைக்கு ரகுநாதன் போக் கில் விட்டுப் பிடிப்பதுதான் நலம் பயக்கும். தவறி ஏதேனும் சிறு குழப்பம் கண்டாலும், ரகுநாதன் விழித் துக்கொள்வான். அவனுடைய சிந்தனைக்கு மயக்கம்

தேவை. விழிப்பு கூடாது. குருடாக்க வேண்டிய கண்கள் கோவிந்த தீட்சதருடையவை! பிறகு, ரகுநாதன் கண்ணிருந்தும் நித்தியக் குருடனாய் விடுவான். எனவே, அவன் சொற்படியே கப்பம் செலுத்து! பிறகு நான் பார்த்துக் கொள்கிறேன்!''

''இன்னுமொன்று சுவாமி! இந்தச் சமயம் பார்த்து தீவுக்கோட்டை சோழகன் இங்கு வருவானேன்?''

''ஏன்? நான்தான் வரவழைத்திருக்கிறேன். ரகுநாதனை ஒருமுறை அவன் பார்த்துக்கொள்வது நல்லது என்ற காரணத்தின்பேரில் அவனை வரவழைக்திருக்கிறேன்!''

''அப்படியென்றால், ரகுநாதன் வரும் செய்தி முன கூட்டியே தங்களுக்குத் தெரியுமா சுவாமி?''

சாஸ்திரிகள் சிரித்தார் ''தெரியும்!''

''சொல்லவில்லையே!''

''தேவையில்லையே! கிருஷ்ணப்ப நாயக்கனைப் பயமுறுத்திக் கோழையாக்க நான் விரும்பவில்லையே கிருஷ்ணப்பா! ரகுநாதன் செல்லும்வரை நீ சோழகனைச் சந்திக்கக்கூடாது. அதுவரை இந்தச் செய்தி யாருக்கும் தெரியவும் கூடாது. நினைவிருக்கிறதா?''

''அப்படியே ஆகட்டும், குருதேவா!''

''கிருஷ்ணப்பா! இன்னுமொன்றையும் கூற விருந்தேன். நம்முடைய முயற்சிக்கு உன்னுடைய மகள் அபரஞ்சியின் உதவி முழுக்க முழுக்கத் தேவை. அவளை எப்படியாவது உன் வசப்படுத்திக்கொள்! அபரஞ்சி இலேசில் அசையமாட்டாள். அவளை அசைய வைப்பது உன் பொறுப்பு. இந்தச் சிறு காரியம்கூட உன்னால் முடியவில்லையென்றால், அசுவம் நீ பெற்ற

மகளிடம் முடியவில்லை யென்றால் பிறகு ஒரு பேரர சைக் கட்டியாளும் தகுதி உனக்குக் கொஞ்சமும் கிடை யாது என்பதாக்த்தான் பொருள், புரிகிறதா?"

"நானும் அதைத்தான் எண்ணி வருகிறேன் குருசுவாமி!"

"போய் வா!"

கிருஷ்ணப்பன் பணிந்து விடைபெற்றான். கொஞ்ச நேரம் வரை அமைதியாகச் சிந்தனையில் ஆழ்ந்த அப்பய்ய சாஸ்திரிகள், "சந்திரகுப்தன் கிடைப்பான் என்று எதிர்பாத்தேன்! ஆனால், சப்பைக் குப்தன் கிடைத்துவிட்டான்! இந்த விஷயத்தில் கோவிந்த தீட்சிதன் அதிர்ஷ்டசாலிதான்! கிடக்கட்டும்! சோழ கனை வைத்துப்பார்த்துக்கொள்கிறேன்!" என்று அவல மும், ஆத்திரமுமாக முனகிக்கொண்டார்.

# 16



# கொள்ளுக் கொடி

இரவு வந்தது. ஏற்பாடு செய்திருந்த நாட்டிய விருந்தும் இனிதாக முடிந்தது. நாட்டியம் ஆடிய அந்த மங்கையை ஒரு ரூபவதி என்றே சொல்லலாம். அவ்வளவு அழகும், இளமையும் பொருந்திய அந்த நாட்டியக்காரியை வேண்டுமென்றே ஏற்பாடு செய்திருந்தான செஞ்சி அரசன் கிருஷ்ணப்ப நாயக்கன். அதுவும், அரை நிர்வாணக் கோலத்தில் அந்த நாட்டியம் நடைபெற்றது. ஆந்திரத்தின் புகழ் பெற்ற 'மகுடி நடனம்' அது. நாட்டியக்காரி பாம்பாக வளைந்து வளைந்து அங்கங்களைக்காட்டியும் ரகுநாதன் மயங்க வேண்டுமே! இந்த ஏற்பாட்டிலும் கிருஷ்ணப்ப நாய்க்கனுக்குத் தோல்விதான். அவளுக்கு ரகுநாதன் ஒரு குந்திமணிப் பொன்னைக் கூடப் பரிசாகத் தரவில்லை. மாறாக, அபரஞ்சி ஒரு கணையாழியைப் பரிசாகத் தந்தாள். அப்படிக் கொடுக்கும்போது அருமையான ஒரு வசனத்தையும் சொன்னாள்: "நாட்டியத்தில் சுசுரமில்லை; ஓர் அபசுரம் இருந்தது!"

அப்பய்ய சாஸ்திரிகளுக்குத் தூக்கிவாரிப் போட்டு விட்டது. எத்தனை பொருள்படக் கூறி விட்டாள் இந்த அபரஞ்சி! இது கிருஷ்ணப்ப நாயக்கனுக்கு வேதனையாவும் இருந்தது.

அனைவரும் கலைந்து தத்தம் இருப்பிடத்தை நாடினர். அப்படிக் கலையும்போது கிருஷ்ணப்ப நாயக்கன் மெல்ல மகளை நாடி, "அபரஞ்சி! உன்னைத் தனிமையில் சந்திக்க வேண்டும்!" என்று மெல்லக் கூறிவிட்டுச் சென்றான்.

தனக்கென அமைக்கப்பெற்றிருந்த தனி மாடத்திற்கு ரகுநாதன் சென்றான். அபரஞ்சியும் பின் தொடர்ந்தாள். தந்தை கிருஷ்ணப்ப நாயக்கன் 'தனிமையில் சந்திக்க வேண்டும்' என்று கூறிய அந்தச் சொற்களும் அவளுடைய செவிகளோடு தொடர்ந்து கொண்டிருந்தன. ஏன் இவர் தனிமையில் சந்திக்க வேண்டும் என்று கூறினார்? என்ன ரகசியம் இருக்க முடியும்? தந்தை மகளைத் தனிமையில் சந்திக்க விரும்புவது ஓர் இரகசியமா?

கணவனிடம் எந்தச் சாக்குப் போக்குக் கூறி விடைபெறுவது? அபரஞ்சியின் சிந்தனை குழம்பிக் கொண்டிருந்தது. ரகுநாதனும் புரிந்தோ, புரியாமலோ சொன்னான்: "அபரஞ்சி! இது உன் பிறந்த இடம்! உனக்கென்று எத்தனையோ பெயர்கள் தனிமையில் அளவளாவக் காத்துக்கிடக்கலாம். எல்லாருக்கும் மீறிய உன் தாயின தனிமை அவா கடல் போன்றது. பெற்றவர்களின் அருமை, பெற்றோரில்லா எனக்குத் தான் தெரியும். போய் அவர்களைச் சந்தித்து விட்டுத் திரும்பு. எனக்கும் சற்றுத் தனிமை தேவைப்படுகிறது!"

அபரஞ்சிக்கு ஆச்சரியமாக இருந்தது. தன்னுடைய மனக் குழப்பத்தைப் புரிந்து சொல்பவர் போலல்லவோ இவர் சொல்லுகிறார்! ஒரு வேளை

தந்தை இரகசியமாகக் கூறியதை இவர் கேட்டுவிட்டாரா? அப்படி இருக்கக் காரணமில்லையே! ஏதோ நல்ல மனத்துடன்தான் இவ்வாறு கூறியிருக்கவேண்டும் என்று கருதி விடைபெற்ருள்.

அரண்மனைத் தனியாலோசனைக் கூடத்தில் தனியாக அமர்ந்திருந்தான் செஞ்சியரசன் கிருஷ்ணப்ப நாயக்கன். நூபுரங்களும, வளைகளும் குலுங்கி எழுப்பும் ஓசை அபரஞ்சி வருகிருள் என்பதை அறிவித்தது. கிருஷ்ணப்ப நாயக்கனும் திரும்பிப்பாராமல் "வா மகளே, வா! இப்படிவந்து உட்காரலாம்" என்று கனத்த குரலுடன் அழைப்பு விடுத்தான்.

அபரஞ்சியும் பதவிசாக வந்தமர்ந்தாள். மகளைக் கூர்ந்து ஆசையுடன் நோக்கினன் கிருஷ்ணப்ப நாயக்கன்.

"அம்மா! நீ மகாபுத்திசாலி!"

"இல்லையப்பா! நான் மகா பாக்கியசாலி!"

"புத்திசாலிகள்தாம் பாக்கியசாலிகளாக இருக்க முடியும், அபரஞ்சி!"

"பாக்கியசாலிகள் அனைவருமே புத்திசாலிகளாக இருக்க முடியாது, அப்பா! எல்லாப் பெண்களுக்கும் தஞ்சை மாமன்னர் கிடைத்துவிட முடியுமா? நான் புத்திசாலியானதும் அவரால்தான்; இப்போது பாக்கிய சாலி யானதும் அவரால்தான்!"

கிருஷ்ணப்ப நாயக்கன் அதிர்ச்சிகண்டுவிட்டான். அபரஞ்சியின் புத்திசாலித்தனம் தன்னையே சோதிக்கத் தொடங்கிவிட்டது என்று உள்ளுக்குள் கருவிக்

கொண்டான்? ஆயினும், வெளியில் காட்டிக்கொள்ள வில்லை. பழம் புழுப்பதற்குப் பதிலாக அழுகிவிடக் கூடாதல்லவா?

''அது போகட்டும், அம்மா! ரகுநாதன் உன்னைக் கௌரவமாக நடத்துகிருனு?''

''அப்பா! அவர் இப்போதைய தட்சிண மன்னர்! நான் என்னதான் உங்கள் மகளாக இருந்தாலும், அவரும் என்னதான் உங்கள் மருமகனுக இருந்தாலும் நா காக்க! தமிழகத்தில் போய் நான் கற்றுக்கொண்ட பண்புகளில் இதுவும் ஒன்று! அவரை என் முன்னுல்-ஏன்?எவர் முன்னுலும் மரியாதைக் குறைவாகப் பேசி உங்களை நீங்களே அவமானப் படுத்திக்கொள்ள வேண்டாம்?''

மெல்ல மெல்ல கிருஷ்ணப்பனுக்கும் எலும்பில் காய்ச்சலடிக்கத் தொடங்கி விட்டது. எனினும் சாமர்த்தியமாக நடித்தான்: ''அதற்கில்லை அபரஞ்சி! சிறியவன்தானே என்று பேசினேன். அபரஞ்சி! உனக்குள்ள கணவன் பற்றை நான் மெச்சுகிறேன்! ஆனுல், ரகுநாதனைப் பொறுத்தமட்டில் உன்னை இழிவாகவே நடத்திவருவதாகக் கேள்விப்பட்டேன்?''

''சொன்னவன் நாவைக் கிழியுங்கள்! கேட்ட உங்கள் செவிகளைச் சீவுங்கள்! அக்காள் கலாவதி தேவியார்க்கு எந்த ஸ்தானம் உண்டோ? அதே ஸ்தானம்தான் எனக்கும்!''

''ஆனுல், உன் வயிற்றில் பிறக்கும் மகன் பட்டம் ஏறமுடியாதே! கொள்ளுக் கொடி எப்படியம்மா பந்தலேறும்?''

"பந்தலேறிய உங்தளால்தான் என்ன சாதிக்க முடிந்தது?"

"ஒரு பேரரசையே சாதித்து உன் மகனுக்குக் கொடுக்கப் போகிறேன்!"

"பேரன் பிறக்கவேண்டும் என்ற ஆசை உங்களுக்கு இருந்தால்தானே?"

"ஏனம்மா அப்படிச் சொல்லிவிட்டாய்?"

"நீங்கள்தான் என்னை வாழ விடாமல் செய்ய முயற்சிக்கிறீர்களே!"

"அபரஞ்சி......!"

"ஏன் விழிக்கவேண்டும்? உங்கள் மகள் சோரம் போனவள் என்று மன்னர்க்கும், அவரைச் சார்ந்தவர்களுக்கும் பறைசாற்ற முயன்றால் அது யாருக்கு அவமானம்?"

"அபரஞ்சி......!"

"நான் உண்மையில் கள்ளங்கபடட்டவள்தானா?"

"அபரஞ்சி......!"

"என் இந்தத் தயக்கம், மருட்சி, கோபம்? கொஞ்சம் பொறுங்கள்! நீங்கள் எறிந்த அநாமதேய ஓலையைக் கொண்டுவருகிறேன்; அதன் பிறகு இந்த அபரஞ்சியை எந்த வாயால், எத்தனை முறை அழைக்கிறீர்கள் என்று பார்க்கிறேன்! நல்ல வேளையாக அந்த ஓலை மனனர் கையில் கிடைக்கவில்லை!"

"அபரஞ்சி! உன்பாட்டில் அடுக்கிக் கொண்டு போகாதே! முதலில் கொண்டுவா, அந்த ஓலையை!" கிருஷ்ணப்பன் அலறினான்.

அபரஞ்சி வேகமாக எழுந்து அந்தப்புரம் நோக்கி நடந்தாள். அவளுடைய இதயத்தில் சினக்கொந் தளிப்பு அடங்காத வேகத்துடன் சுழித்துக் கொண் டிருந்தது.

அந்தப்புரத்தை அடைந்த அபரஞ்சி, தனக் கென்று கொண்டுவந்த பொன் முலாம் பூசப்பட்ட தனிப் பெட்டியைத் திறந்தாள். அடியில் கையை விட்டுத் துழவி ஓலையைத் தேடினாள். அங்கே ஓலை காணப்படவில்லை. துணிமணிகளைத் தூக்கி எறிந்து துப்புரவுப்படுத்தித் தேடிப் பார்த்தாள், ஓலை இருந் தால்தானே கிடைப்பதற்கு? அது மாயமாய் மறைந்து அறுபது நாழிகைகள் பறந்துவிட்டனவே!

17



# கரும்பும் மூங்கிலும்

எத்தனையோ பத்திரமுடன் கொண்டு வந்த அந்த ஓலை எப்படி இத்தனை விரைவில் மாயமாய் மறைந்திருக்கும்? அந்த ஓலை பற்றி மகாப்பிரதானி தீட்சிதரை நீக்கி வேறு ஒருவர்க்கும் தெரியாதே! இவ்வளவு துணிவாக, எவரால் இந்தச் செயலைச் செய்து முடித்திருக்க முடியும்? நம்பமுடிய வில்லையே!

அபரஞ்சி இவ்வாறெல்லாம் மனத்தைப் போட்டுக் குழப்பிக் கொண்டவளாய், மீண்டும் மீண்டும் தேடினுள். ஓலை இருந்தால்தானே கிடைப்பதற்கு?

இதயம் இடிவிழுந்தாற்போல அதிர்ச்சிக் கண்டது. கண்களில் அவள் என்றுமே காணுத மருட்சி குடி புகுந்தது. சிருஷ்டிக்கர்த்தன் கற்பனை லயத்தில் மூழ்கிக் கிடந்தபோது படைத்த உருவமல்லவா அபரஞ்சி! அந்த எழிலார்ந்த திருவுருவம் நிலை பெயர்ந்து, குலைநடுக்கம் கண்டு வியர்த்தது. ‘ஓலை எங்கே?’ ‘ஓலை எங்கே?’—பூஞ்சை மனம் புலம்பலுடன் கேட்டுக் கொண்டது. எறிந்த துணிமணிகளைப் பெட்டியில் போட்டுக் கோணல் மாணலாக நிரப்பி மூடிவிட்டு, வந்தவழி பார்த்து, நொந்த மனம் சோர்ந்து, மந்த நடை பயின்ருள்.

ஆலோசனைக் கூடத்துள் நுழையும்போது, அவளுடைய தலை தன்னால் தாழ்ந்துகொண்டது. மூர்க்கப் பிடிவாதம் நிறைந்த தந்தைக்கு அவள் என்ன பதில் சொல்வாள்? தகாத முறையில் அல்லவா செய்தியறிவித்துவிட்டு, அதனை நிரூபிக்கப் புறப்பட்டோம்! இப்போது எப்படி நிரூபிப்பது? என்ன விதமான பொய்க் காரணத்தை எப்படிப் புனைந்துரைப்பது?

"அந்த ஓலைக்காக நான் வெட்கப்படுகிறேன் மகளே! ஏன்? வேதனையும் படுகிறேன்!"—கிருஷ்ணப்ப நாயக்கனுடைய குரலில் கரகரப்பும், மெலிவும், சோகமும் நிறைந்து காணப்பட்டன.

எந்த ஓலைக்காக இவர் வெட்கப்படுகிறார்? வேதனைப்படுகிறார்? இது என்ன புதிரானப் பேச்சு?—அபரஞ்சி ஒன்றும் புரியாத சிந்தையுடன் தலை தூக்கி வெறித்துப் பார்த்தாள். என்ன வியப்பு இது? அதே ஓலை! அது எப்படித் தந்தையிடம் கிடைத்திருக்கிறது? யார் கொண்டுவந்து கொடுத்திருப்பார்கள்? தந்தையே நாமில்லாத சமயம் பார்த்துக் களவாடி, இப்படி ஒரு நாடகம் ஆடுகிறாரோ? சே! இருககாதே! இருக்கக் காரணமே இல்லையே!

இதயமே இரண்டாகப் பிளந்து, குருதிவெள்ளம் வாய் வழியே வந்து விடுமோ என்று ஐயப்படத்தக்க அளவுக்குப் பயந்து போனாள் அபரஞ்சி. எனினும், தன்னுடைய இந்தப் பேதைமையான பயத்தை வெளியே காட்டிக்கொண்டால் அறிய வேண்டிய உண்மை அநியாயமாகக கெட்டுவிடும்; பிறகு மகாப் பிரதானி கோவிந்த தீட்சிதர் அவர்களுக்குச் சரியான மறுமொழி கூற முடியாமல் போய்விடும். இதனால் அவருடைய

அநியாயமானச் சந்தேகத்துக்கு ஆளாகவும் நேரிடும் அல்லவா?

மகள் அபரஞ்சியின் இந்த விழிப்பு நிலை கண்டு, கிருஷ்ணப்ப நாயக்கனுக்கு ஒன்றுமே புரியவில்லை. ஏன் இவள் விழிக்கவேண்டும்? ஓ.ஃகோ! 'மகளை வாழ விடாமல் செய்யும் தந்தையும் உண்டுபோலும்!'-என்று விழிக்கிருளா?

"அம்மா, அபரஞ்சி! நீ என்னை நம்பித்தான் தீர வேண்டும்! இந்த ஓலையை நான் சத்தியமாக எழுத வில்லை. யாரோ வேண்டுமென்றே உன்னை, ரகுநாத னிடமிருந்து பிரிக்கச் செய்த சதியேற்பாடு! என்னை நம்பம்மா!"

"நம்புகிறேனப்பா! நம்புகிறேன்! இப்போது நான் நம்பித்தானே ஆகவேண்டும்!"

இருபொருள் படக் கூறிய அவளுடைய பேச்சைப் புரிந்து கொள்ள கிருஷ்ணப்ப நாயக்கனால் எப்படி முடியும்? ஓலையைக் கையில் கொடுத்துப் படிக்கச் சொன்ன பிறகு, கிருஷ்ணப்ப நாயக்கனுடைய முகப் பாவனைகள் எவ்வாறு மாறுகின்றன வென்பதை யறியும்படியல்லவோ கூறியனுப்பினுர் கோவிந்த தீட்சிதர். ஆனுல், இப்போது அதனைப் பார்க்க முடி யாமல் போய்விட்டதல்லவா? அவள் நம்பித்தானே ஆகவேண்டும்? மேலும், பெட்டியிலிருந்த ஓலை எவ் வாறு மறைந்தது? அது இப்போது எப்படி தந்தை யிடம் வந்து சேர்ந்தது? ஒரே மாய வித்தை யாக இருக்கிறதே! அவள் நம்பித்தானே ஆக வேண்டும்?

"மகளே! கையெழுத்தைப் பார்க்கும்போது யாரோ புதிய மனிதருடையதாக இருக்கிறது. இது என்

னிடமே இருக்கட்டும். நாளை இது பற்றித் தனிமையில் ஆராய்ந்து முடிவு கூறுகிறேன்!''

"இல்லையப்பா! ஓலை என்னிடமே இருக்க வேண்டும்!''

"இது பற்றி உன் கணவர்க்குத் தெரியுமா?''

"தெரியாது; ஆனால், மகாப் பிரதானியார்க்குத் தெரியும்!''

''போதுமே! அதைவிட வேறு ஆபத்தே நமக்குத் தேவையில்லை!''

"அப்பா! உங்கள் மூளையே அலாதியானது. கரும்புக்கும் மூங்கிலுக்கும் வித்தியாசம் தெரியாதவர் நீங்கள்! மகாப் பிரதானியாரிடம் ஒருமுறைதான் பழகினேன்! அதுவே ஓராயிரம் முறை பழகியதற்கு மேலாகி விட்டது! அவர் பெரியவர்! மாமனிதர்! அறிஞர்க்கெல்லாம் அறிஞர்!''

''மெதுவாகப் பேசம்மா!''

"ஏன்?''

"அப்பய்ய சாஸ்திரிகளின் காதுகளில் விழுந்து விடப் போகிறது!''

அப்பய்ய சாஸ்திரிகள்! அபபய்ய சாஸ்திரிகள்!!— பளீரென்று ஓர் எண்ணம் அபரஞ்சியின் சிந்தனையில் உதயமானது.

"அப்பா! இந்த ஓலையை அப்பய்ய சாஸ்திரிகள் ஏன் எழுதியிருக்கக்கூடாது?''

''என் மகளைக் கெடுப்பதில் அவருக்கென்னம்மா ஆனந்தம்?''

"நிறைய இருக்கிறது! முதலாவது: சோழகனுக்கு என்னை மணமுடிக்க அவர் செய்த ஏற்பாடு

தோல்வி கண்டது. இரண்டாவது :" அவருக்குப் பிடிக்காத மகாப் பிரதானியாரை மட்டந்தட்ட என்னைக் களங்கப்படுத்தியிருக்கிறார். மூன்றாவது: என் மூலமாகத் தஞ்சை மாமன்னர்க்குக் கசப்பு உண்டாக்கிப் பிறகு, என்னை வாழவிடாமல் செய்து அதன்மூலம் கலகம் விளைவிக்க முயல்வது! போதுமா அப்பா இந்த மூன்று காரணங்கள்?"

"சரியான காரணங்கள்தாம்!"

மகளைக் கூர்ந்து பெருமையுடன் நோக்கினான் கிருஷ்ணப்ப நாயக்கன். "அம்மா, அபரஞ்சி! நீ ஒரு சாம்ராஜ்யத்தையே கட்டியாளக்கூடிய தகுதி படைத்தவளம்மா! இந்த விதத்தில் நீ ரகுநாதனுக்குப் பொருத்தமானவளே!"

"எந்த விதத்திலும் நான் அவருக்குப் பொருத்தமானவள் தானப்பா!"

"சரி! சரி! பேசிக்கொண்டிருக்க இது நேரமில்லை. நான் இந்த ஓலையின் காரணத்தை அறியவேண்டும். அதுவரை உன் அன்னையைக் கண்டுவிட்டு வா! சரியாக மூன்றரை நாழிகைகள் கழித்து இதே இடத்திற்கு வா! உன் ஓலையை நான் உன்னிடமே தந்து விடுகிறேன்!"

அபரஞ்சி அதற்குமேலும் அங்கு அமர்ந்திருக்க விரும்பவில்லை. அன்னையைப் பார்க்கவேண்டும் என்ற அவா வேறு அவளை உந்தித் தள்ளியது. ஆயினும், ஓலை எப்படிக் கிடைத்தது என்பதைப்பற்றி அறிந்துகொள்ள முடியவில்லையே! அடுத்தச் சந்திப்பின்போது இதுபற்றிக் கவனிக்கலாம் என்ற முடிவுடன் அந்தப்புரம் நோக்கி நடந்தாள் அபரஞ்சி.

# 18



# அபரஞ்சி ஓர் ஆயுதம்!

ஆளை அனுப்பி அழைத்து வரக்கூடியவரா அப்பய்ய சாஸ்திரிகள்? சாஸ்திரிகளின் உத்தரவுக்குச் சரணாகதியடைபவனாயிற்றே, செஞ்சி அரசன் கிருஷ்ணப்ப நாயக்கன்!

இரவு வேளையில் முன்னறிவிப்பின்றி திடீர் வருகை தருவது அப்பய்ய சாஸ்திரிகள் விரும்பாத ஒன்று. எனினும், அவசர காலத்தை முன்னிட்டு இவ்வாறு செஞ்சி அரசன் வருவதுண்டு. இப்போதும் அப்படியே வந்தான். அரசனுடைய அந்த வருகையைக் கண்டு இரு உள்ளங்கள் வியந்து நோக்கின! இரு உள்ளங்களா? ஆமாம்; சாஸ்திரிகளுடன், தீவுக் கோட்டை அரசன் சோழகனும் அப்போது அங்கு அமர்ந்து ஏதோ இரகசியமாக உரையாடிக் கொண்டிருந்தான். சோழகன் அங்கு இருக்கக் கண்ட கிருஷ்ணப்ப நாயக்கனுக்கு என்னமோ போலிருந்தது. குருதேவரைக்கண்டு தனித்துப் பேசவே அவன் அங்கு வந்தான். அந்தத் தனிமைக்குப் பங்கம் வந்து விட்டது.

“வா, கிருஷ்ணப்பா! இது என்ன திடீர் வருகை?” —சாஸ்திரிகள் வெகு சாதாரணமாகவே கேட்டார்.

"அவசரமாகத் தங்களைச் சந்திக்க வேண்டும் என்று நினைத்தேன். ஆகவேதான் சுவாமி, நான் வர நேரிட்டது! என் வருகையால், சோழகரோடு பேசும் பேச்சுக்கு ஏதேனும் பங்கம் வந்து விட்டதா?"

செஞ்சி அரசன் மனத்தில் ஒன்றும், உதடுகளில் ஒன்றுமாக இவ்வாறு கேட்டான். சொற்களின் உட்பொருளைப் புரிந்துகொள்ள சாஸ்திரிகளுக்கு வெகு நேரம் பிடிக்கவில்லை.

"செஞ்சி அரசனே! எங்களுடைய பேச்சே உன்னைப்பற்றியதுதானே? உன்னை எப்படித் தஞ்சை அரசப் பீடத்தில் அமர்த்துவது என்பது பற்றித்தான் ஆராய்கிறோம்!"

"அறிவேன், சுவாமி அறிவேன்! நான் குறுக்கிட்டதால், ஏதேனும் தடையேற்படக் கூடாதல்லவா? அதனுல்தான் கேட்டேன்!"

"புரிகிறது, கிருஷ்ணப்பா! புரிகிறது. வந்த விஷயம்?"

"பரவாயில்லை. சோழகன் வேறு; நான் வேறு; நீ வேறு!"

"சுவாமி! இந்த ஓலையைப் பாருங்கள்!"

கிருஷ்ணப்ப நாயக்கன் நீட்டிய ஓலையைப் பிரித்துப் பார்வையைச் செலுத்திய சாஸ்திரிகளுக்கு மருட்சி கண்டது. இதனைக் குறிப்பால் உணர்ந்து கொண்ட கிருஷ்ணப்பன் ஒன்றும் வாய் திறக்காமல் கவனித்தான். சாஸ்திரிகளும் பிறகு அலட்சிய மனோ பாவத்துடன் நோக்கத் தொடங்கினுர்; மறுமொழியும் பகன்றுர்: "கிருஷ்ணப்பா! உன் நன்மையை உத்தேசித்து நான் செய்த காரியம்தான் இது!"

செஞ்சியரசன் பேயறைந்தவன் போலக் காணப் பட்டான்! ஆ..கா! அபரஞ்சியின் ஊகமே ஊகம்!

"சுவாமி! என் கண்களைக் குருடாக்கி ஒரு நன்மை தேடுவதா?"

"உன் கண்களைக் குருடாக்க வில்லையே! இமை களில் உள்ள ரோமங்களைத்தான் கத்தரித்தேன்! கிருஷ்ணப்பா! முந்திய சந்திப்பின் போதே சொன் னேன்! நம் திட்டம் நிறைவேற அபரஞ்சிதான் ஓர் அற்புதமான ஆயுதம்! அந்த ஆயுதத்தை எப்படி வேண்டுமானாலும் சமயத்தில் பயன்படுத்தித்தான் தீரவேண்டும். அவளுடைய நிலைமையையும், எண் ணப் போக்கையும் கவனித்தால், நிச்சயம் நமக்கு அவள் மனம் விரும்பி உடந்தையாக மாட்டாள். அவளை வேற்றுவிதமாகத் திருப்பி, வெறுப்பை வளர்த்தால்தான் நாம் போட்ட திட்டம் மாசு மரு வின்றி நிறைவேறும்! ஆட்சிப் பீடத்துக்கு உறவு முறைப் பாசம் ஒத்து வராது. இது சரித்திரம் காட் டும் பாடம்! அது சரி! உனக்கு இந்த ஓலை எப்படிக் கிடைத்தது?"

கிருஷ்ணப்ப நாயக்கன் விரிவாகச் சொன்னான்.

"நான் போட்டத் திட்டத்தை அந்த அரக்கன் தீட் சிதன் கெடுத்துவிட்டான். பரவாயில்லை; செஞ்சி அரசனே! மகளை என்ன, மனைவியைக்கூட பலி ஆக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டால், நாட்டுக்காக நீ தியாகம் செய்தே தீரவேண்டும். இது சாணக்கியம். அரசியல் என்பதே மோசம்; அதற்கு ஏது பாசம்? போய்வா! ஒன்றை நினைவில் வைத்துக்கொள். இப் போது உனக்கெதிரி ரகுநாதனல்ல; உன் மகள் அபரஞ்சிதான்!"

செஞ்சி அரசன் கிருஷ்ணப்ப நாயக்கன், குருதேவ ரின் உபதேசத்தைச் சிரமேல் தாங்கிப் புறப்பட்டான். அப்படிப் புறப்படும்போது ஓலையைப் பெற்றுச்செல்ல வும் அவன் தவறவில்லை. சாஸ்திரிகள் சொல்வதும் நியாயம்தான்! இல்லையென்றால், இந்த அபரஞ்சி பகைவனைக் காதலித்து மணக்கவும் முயன் றிருப்பாளா?

ஆலோசனைக் கூடத்துள் செஞ்சி அரசன் கிருஷ்ணப்ப நாயக்கன் நுழைவதற்கும், அபரஞ்சி வருவதற்கும் நேரம் சரியாக இருந்தது. கூடத்தில் செந்நிறத்தை உமிழ்ந்துகொண்டிருந்த குண்டலச் சிமிழ்விளக்குகளெல்லாம் சதிகாரர்களின் கண்களாகக் காட்சி தந்தன.

"அப்பா! சாஸ்திரிகள் என்ன சொன்னார்?"

என்ன! சாஸ்திரிகளிடம் சென்றது இவளுக்கு எப் படித் தெரியும்?

"ஏனப்பா விழிக்கிறீர்கள்? எனக்கு எப்படித் தெரியும் என்றுதானே? என் கருத்துக்குப் பிறகு நீங் கள் அங்குத்தான் சென்றிருக்கவேண்டும் என்பது என் னுடைய ஊகம். சரிதானே?"

"மகளே, மெச்சுகிறேன்! ஆனால், நீ முன்பு கூறிய ஊகம் சரியானதல்ல. சாஸ்திரிகள் மிகவும் வருத்தப் பட்டார். யாரோ பொறாமைக்காரர்கள் இவ்வாறு செய்திருக்கிறார்கள்!"

"பொறாமைக்காரர்களென்றால்? சோழகனாக இருக் கலாமா?"

"அவன் ஓர் அப்பாவியம்மா!"

"கன்றுக்குட்டியும்கூட சில சமயம் முட்டத்தான் செய்கிறதப்பா!"

"நீ நினைப்பது தவறு! தஞ்சையில் வாழும் யாரோ சிலர் இவ்வாறு செய்திருக்கிறார்கள் அம்மா! நான் தீட்சிதரையே சந்தேகிக்கிறேன்!"

"நல்லவேளையாக என்னையே சந்தேகிப்பதாகச் சொல்லாமல் போய்விட்டீர்களே! சரி, சரி! அந்த ஓலையை இப்படிக் கொடுங்கள்! நேரமாகிறது!"

"ஏன்? ஓலையை நீ நேரில் கொண்டுவர விரும்பாமல் ஆள் வசம் கொடுத்தனுப்பினாயே......இப்போது மட்டும் நேரில் பெற்றுச்செல்ல என்ன வந்துவிட்டதாம்? நீ தஞ்சை அரசி என்று காட்டிக்கொண்டது போல், நான் செஞ்சியரசன் என்று காட்டிக்கொள்ளக் கூடாதா?"

அபரஞ்சிக்கு ஒரு கணத்தில் யாவும் விளங்கி விட்டன. யார் கொண்டுவந்து கொடுத்தார்கள்? அவளுக்கு மயக்கமே வந்துவிடும் போல இருந்தது. என்றாலும், இப்படி மூளையைக் குழப்பிக்கொள்ள இது நேரமில்லை என்று உணர்ந்து, ஓலையைப்பெற சாமர்த்தியமாகப் பேசினாள்

"அப்பா! நீங்கள் மகாப் புத்திசாலி! ஆனால் இதைப் புரிந்துகொள்ள முடியவில்லையே! நான் ஆள் வசம் கொடுத்தனுப்பலாம். இதனால் எந்தத் தீங்கும் நேரக் காரணமில்லை. ஆனால், தாங்கள் கொடுத்தனுப்புவது தீமையே பயக்கும். நான் என் கணவருடன் இருக்கும்போது ஓலையைப் பெற நேர்ந்தால் என்னாகும் என்று யோசித்துப் பாருங்கள்!"

"உண்மைதான். ஓலையைப் பெற்றுச்செல் அபரஞ்சி! ஆனால் இதைக்கேள்! உன்னுடைய அரச தந்திரம் நிறைந்த இயற்கையான சிந்தை எனக்குப் பயன்படாமல் போய்விட்டது. ரகுநாதன் அதிர்ஷ்ட சாலி! இப்போதும் ஒன்றும் குடி முழ்கிப்போய்விட வில்லை. நீ மட்டும் கொஞ்சம் மனம் வைத்தால், உன் அப்பன் அடிமையற்ற செஞ்சியரசனாவான்! நாளைக்கு உன் முன்னாலேயே நான் கப்பம் செலுத்தப் போவதை நீ பார்க்கத்தானே போகிறாய்?"

உருக்கமான இந்தப் பேச்சு அபரஞ்சியைக் கலங்க வைத்துவிடும் என்றுதான் கிருஷ்ணப்ப நாயக்கன் எதிர்பார்த்தான். ஆனால், அவன் மேலும் மேலும் ஏமாறப் போகிறான் என்பதை யாரே அறிவர்?

19

# தீவுக்கோட்டைத் தூதுவன்

கண்ணைக் கவரும் செஞ்சியின் கொலு மண்டபம், வண்ணக்கோலம் பூண்டு எண்ண எண்ண இனித்திடும் எழில் நிறைந்த ஒப்பனை யுடன்காட்சி தந்தது. தஞ்சை மாமன்னன் விஜயரகு நாத பூபதிக்காகப் பலரும் எதிர்பார்த்த வண்ணம் இருந்தனர். அண்டை அயலிலுள்ள சிற்றரசுகளெல் லாம் பரிசுப் பொருள்களுடன் காத்திருந்தன. செஞ்சி அரசன் கிருஷ்ணப்ப நாயக்கனும், அரசகோலம் பூண்டு கப்பப் பொருள்களுடன் காத்திருந்தான். குறிப்பிட்ட நேரத்தில் வாயிற்காப்போன் 'பராக்'கூற, தஞ்சை மாமன்னன் அழகி அபரஞ்சியுடன் கொலு மண்டபத்துள் விஜயம் செய்தான். காத்திருந்த அனை வரும் பூத்திருந்த கண்கள் நிலைக்க நின்றனர்; வணங் கினர். செருக்கே உருவான அப்பய்ய சாஸ்திரிகள் எவ்வாறுதான் எழுந்து நின்று தலை வணங்கினாரோ?

அரியணையில், விஜயரகுநாத போஜன் வீறு கொண்ட தோரணையுடன் அமர்ந்தான். பக்கத்தே அரசதேவி அபரஞ்சியும் பெருமையுடன் அமர்ந்தாள். அவள் எதிர்பாராத ஒன்றல்லவா இது?

அரச கவிஞர்கள், தமிழிலும், தெலுங்கிலும் வாழ்த்துப் பாடினர். அவரவர் தங்களை அறிமுகம்

செய்து கொண்டனர். வைக்கப் பெற்ற கப்பப் பொருள்கள் யார் யாருடையவை என்பது பற்றி வாசிக்கப்பட்டது. செஞ்சியரசன் செலுத்திய காணிக்கை நிறைவாகவே இருந்தன. ரகுநாதன் உள்ளுக்குள் மகிழ்ந்து கொண்டான். ஆயினும், குயுக்தியாக ஒரு கேள்வி கேட்டான். அரசதேவி அபரஞ்சியை நோக்கியவனாய், ''தேவி! உன் தந்தையளித்த கப்பப் பொருளை ஏற்பதா? மறுப்பதா?''

அறத் துன்பமாய்ப் போய்விட்டது அபரஞ்சிக்கு. ஏன் இப்படி அவர் கேட்க வேண்டும்? அவள் மிகத் திறமையாகச் சிந்தனையைப் பயன்படுத்தினாள்.

''பிரபோ! நிறை இருந்தால் ஏற்றுக்கொள்வோம்; குறையிருந்தால் நிச்சயம் மறுத்துவிடுவோம்!''

''நீ என்ன நினைக்கிறாய், தேவி?''

''தாங்கள் நினைப்பதையே நான் நினைக்கிறேன்!''

''உன் தந்தை எந்தவிதமான குறையும் வைக்கவில்லை. உன்னைப் பெற்று எனக்கு அளித்தாரே அது போதாதா?''

அபரஞ்சி தலை குனிந்தாள்.

''தேவி! இப்போது சொல்!''

''கப்பம் செலுத்துவது அவர்கள் கடமை; ஏற்பது நம்முடைய முறைமை!''

மண்டபத்தில் ஒரே ஆரவாரம். அபரஞ்சியின் திறமையான அந்தப் பேச்சு, பிறந்த மண்ணைக் குளிர வைத்துவிட்டது போலும்! ஆனால், சாஸ்திரிகளுக்கும், கிருஷ்ணப்ப நாயக்கனுக்கும் மட்டும் கொதிப்பாக இருந்தது அந்தப்பேச்சு.

"அடுத்து, இன்னுமொரு கப்பத்தை நீ ஏற்க இருக்கிருய்! தேவி!"

அபரஞ்சிக்கு ஒன்றும் புரிபடவில்லை. அவளுக்கு மட்டும்தாஞ? அந்த அவைக்கே புரிபடவில்லை. சாஸ்திரிகளும், செஞ்சி நாயக்கனும் வியப்புவிழுங்கிய விழிப்பால் ஒருவரையொருவர் நோக்கிக்கொண்டனர். அப்போது விளக்கம் தருவது போல ஒரு தூதுவன் உள்ளே நுழைந்தான். வந்தவன் பலருக்கும் வணங்கி தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டான:

"தஞ்சை மாமன்னர்க்கு என் தலை வணங்குகிறது!"

"ஏற்கிறேம்!" என்ருன் ரகுநாதன்.

"மன்னவா! தீவுக்கோட்டை அரசர் அனுப்பிய தூதுவன் நான். தங்கள் திருமுகத்துப் பார்வைக்கு இத் திருமுகத்தை அனுப்பியிருக்கிருர், எங்கள் சோழ அரசர்!"

தஞ்சைப் பிரதிநிதி அந்த ஓலையைப் பெற்று மன்னன் ரகுநாதனிடம் பயபக்தியுடன் கொடுத்தார். அவர் வயதில் சற்று முதியவர்.

திருமுகத்தைப் படித்து முடித்த தஞ்சை மாமன்னன் ரகுநாதபூபதி, எதற்காக இப்படிக் கெக்கலிக் கொட்டிச் சிரிக்க வேண்டும்? அவையே வியந்தது. ஆஞல், மூன்றிணைக் குரூரக் கண்கள் மட்டும் விழித்தன. ஓரிணைக்குக்குச் செஞ்சி அரசன். இரண்டாம் இணைக்கு உரிமை கொண்டாடிக் கொண்டிருந்தவர் அப்பய்ய சாஸ்திரிகள். மூன்ரும் இணை......?

தீவுக்கோட்டைச் சோழியத் தூதுவனுடைய முகத்திலிருந்த இரு கூரிய கண்கள்,

இந்த ஆறு கண்களை அந்த ஒரு கணத்தில் உணர்ந்துகொண்ட விஜயரகுநாத பூபதி, "தீவுக்கோட்டைச் சோழகரே! நீரே இப்படி மாறுவேடத்தில் வந்து ஓலையைக் கொடுத்தமைக்கு மகிழ்கிறேன்! தஞ்சையும் பெருமையடைந்திருக்கும், நீர் மட்டும் சுய உருவத்துடன் வந்து இந்த அழைப்போலையைக் கொடுத்திருந்தால்! பரவாயில்லை. இப்போதும் தஞ்சை பெருமை அடையத்தான் செய்கிறது. இப்படி அமருங்கள். தீவுக்கோட்டைகசு எங்களை அன்பு கூர்ந்து அழைத்தமைக்கு மிக்க மகிழ்ச்சி!"

கொலுமண்டபமே வியப்பால் 'ஆ.'.காரம்-ஊ.'.கார' மிட்டுக் குரல் எழுப்பியது. சாஸ்திரிகளுககும், செஞ்சியரசனுக்கும் தூக்கிவாரிப் போட்டு விட்டது. இவன் தான் சோழகன் என்பதை ரகுநாதன் எவ்வாறு உணர்ந்து கொண்டிருப்பான்? நம்பமுடியவில்லையே! எத்தனை வியப்புநிறைந்த எதிர்பாராத நிகழ்ச்சி இது?

இதே நிலை—இதே வியப்பு—இதே கேள்விகள் அபரஞ்சியின் உள்ளத்திலும் இருக்கத்தான்—எழத்தான் செய்தன. மன்னர்க்கு எப்படிப் புரிந்திருக்கும்? இந்த மாறு வேடத்தைக் கிழித்துப் பார்வையிடத்தக்க வல்ல தீர்க்க தரிசனக் கண்களா மன்னருடையவை? மகாமேதையான கோவிந்த தீட்சிதருடைய மாணவராயிற்றே...!

தஞ்சை மாமன்னன் ரகுநாதன் தொண்டையைப் பலமாக ஒருமுறை கனைத்துக்கொண்டான்."சோழகரே! இப்படியே உம்முடைய அழைப்பை ஏற்று, நேரே

தீவுக்கோட்டைக்கு வர இயலாமைக்கு வருந்த வேண்டாம். நான் உடனடியாகத் தஞ்சைக்குச் செல்ல வேண்டியிருக்கிறது.' ஆகவே... ஆகவே..."

ரகுநாதன் பலமாக—ஆனால் ஒரு நொடியில் சிந்தித்து முடிவு கண்டான். "ஆகவே...... என் தேவி அபரஞ்சியை அரசப் பிரதிநிதியுடன் நாளை தங்களோடு அனுப்பி வைக்க முடிவு செய்துவிட்டேன்!"

அபரஞ்சி அரண்டு, "பிரபோ!" என்றலறினாள்.

"ஏன், தேவி? தனிமையில் செல்ல பயமா? ஒரு சாம்ராஜ்யத்தையே கட்டியாளத் தகுதி படைத்தவள் நீ என்பதை, நான் பூரணமாக அறிவேன். ஆகவே, தஞ்சையாளும் அரசியாகத் தீவுக்கோட்டைக்குச் சென்று, அங்கு வழங்கும் கப்பங்களை ஏற்றுக் கொண்டு தலைநகர் திரும்புவாயாக! மண்டபம் இத்துடன் கலையலாம்!"

வேறு பேச்சுக்கே இடமில்லாமல் போய்விட்டது. சோழகன் சோர்ந்து விட்டான். கிருஷ்ணப்பன் கிறு கிறுத்து விட்டான். சாஸ்திரிகளோ சம்பவத் திருப்பத்தைக் கண்டு சஞ்சலமடைந்தார். ஆயினும், மூவரும், 'இதுவும் நன்மைக்கே' என்ற முடிவின் கீழ் மண்டபத்தை விட்டகன்றனர். எது நன்மைக்கோ? எது தீமைக்கோ? யார் அறிவார்?

# 20



## சீர்வரிசை

அபரஞ்சி என்ற பெயர்ச் சொல்லுக்குப் பொருளை உணர்த்துவது போல்—புடம் போட்டத் தங்கம் போல்—உதயசூரியன் உன்னத ஒளி பரப்பி, கிழக்கு வானை முத்தமிட்டுக் கொண்டிருந்தான். காலைப்போதின் இனிமையான ஆரவாரம், இதமாக எழுந்து ஆதவனுக்குக் கட்டியங் கூறியது.

புறப்படவேண்டிய கட்டம் வந்துவிட்டதே என்று சோழிய அரசன் சோழகன் மனம் குழம்பினான். இவ்வாறு எதிர்பாராமல் இப்படியொரு நிகழ்ச்சியேற்படும் என்று அவன் கிஞ்சித்தும் நினைத்துப் பார்த்தானில்லை. தூதுவனைப்போல் வந்து சாஸ்திரிகளின் திட்டப்படி ஓலையைக் கொடுத்துவிட்டு, ரகுநாதன் தஞ்சை திரும்பியதும் மேற்கொண்டு நடக்க வேண்டியதைப் பற்றி நன்கு ஆலோசித்துப் பிறகே தீவுக்கோட்டை நோக்கிப் பயணமாகலாம் என்று எண்ணியிருந்தான். ஆனால், தங்குவதற்கும் இயலாமல் போய்விட்டதே! இந்தத் தஞ்சைவேந்தன் ரகுநாதன் எதை முன்னிட்டு, இந்தத் திருப்பத்தைக்காண்கின்றான்? அபரஞ்சியைத்தனித்து-அதுவும் தீவுக்கோட்டைக்கு அனுப்பி வைக்கிறான் என்றால், எந்த முடிவின்கீழ் இருக்க முடியும்?—சோழகன் இவ்வாறெல்லாம் சிந்தித்தும், இரவு முழு

வதும் அப்பய்ய சாஸ்திரிகளுடன் கலந்தும் சிந்தனை யைக் கந்தலாக்கிக்கொண்டிருந்தான். அவர்களுக்குள் ஒரு முடிவும் ஏற்படத்தான் செய்தது. பொழுதும் விடிந்து விட்டாதால் புறப்பாட்டுக்கான ஏற்பாடுகள் அமைதியாக நடைபெற்றன.

எப்போதுமே அலங்காரப் பிரியைப் போலக் காட்சி தரும் அபரஞ்சி, அப்போது மிக எளிமை யாகவே தோற்றமளித்தாள். இரவெல்லாம் சிந்தித்து வருந்தியதின் காரணமாகக கண்களில் செம்மைப் படர்ந்திருந்தன. அதுமட்டுமல்லாமல், இரவு முழுவ தும் ரகுநாத போஜன் அவளை விட்டகலவே இல்லை. எந்நேரமும் அவளுடைய அதரங்களில் தாக சாந்தி கண்டுகொண்டிருக்கவே விரும்பினன். அவளுடைய தங்கமயமான மேனியை விதவிதமாகச் சுவைத்தான். அந்தச் சுவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு புது இன் பம் கண்டான்; வருணிக்கவும் செய்தான்; ஒரு தடவை- ஒரே ஒரு தடவை அவளைப் பூரணமாகத் தரிசித்துச் சொர்க்கத்தின் நிர்வாண கோலத்தையும் நிவாரண கோலத்தையும் நிர்மாணக் கோலத்தையும் காணக் கணத்துக்குக் கணம் துடியாய்த் துடித்தான்; ஏன் இந்தத் துடிப்பு? எதற்காக இந்த அலங்கோல அவச ரம்? எப்படி இவற்றுக்கெல்லாம் துணிய முடிந்தது?

அபரஞ்சியின் நினைவலைகள் இதனல் மேலும் நுரை தள்ளி மயங்கத் தொடங்கின. தீவுக் கோட் டைக்கு அனுப்பி வைப்பதோடல்லாமல், இப்படி ஒரு தீர்மானமான இன்பத்தை அவர் காண்கிறர்—காண விரும்பினர் என்றல், அதன் உட்பொருள் எதுவாக இருக்க முடியும்? கடைசியாக ஒன்றைச் சொன்னரே!

"அபரஞ்சி! எது எப்படி நேரிடினும், நீ உன்னை உறுதியாக நம்பவேண்டும்; அதுமட்டுமல்ல; எக்காலத்திலும் ரகுநாதன் அபரஞ்சியை மறக்கமாட்டான்! ஏனென்றால், அபரஞ்சி ஒரு மாசுபடாத தங்க விக்கிரகம்! எனவே, ஒருவேளை ஏதேனும் என்னைப்பற்றிப் பொய்யுரைகள் கேள்விப்பட நேர்ந்தால்...அத்தனையும் வெறும் கட்டுரைகள் என்ற முடிவுக்கு நீ வர வேண்டும்! தெரிகிறதா?"

அபரஞ்சி கேட்டாள்: "ஏன் இந்தத் தடுமாற்றச் சொற்கள்?" ரகுநாதன் புன்னகையுடன் பகன்றான்: "உன் தந்தையை என்னால் நம்பமுடியவில்லை. ஏனென்றால் அப்பய்ய சாஸ்திரி என்ற விஷக் குளத்தில் அவர் நீராடுகிறார்!"

உண்மையும் அதுதானே! இத்தனையும் அறிந்து செஞ்சிக்கு ஏன் வரவேண்டும்? என்னையும் தனித்து தீவுக்கோட்டைக்கு ஏன் அனுப்பவேண்டும்? ஏதோ ஓர் உற்பாதம் நடக்க இருக்கிறது என்பதை மட்டும் திட்டவட்டமாக நம்பி எதிர்பார்க்கவும் செய்தாள் அபரஞ்சி.

எட்டுக் குதிரைகள் பூட்டப்பெற்ற சிவிகை ரதம் தயாரானது. முன்னும் பின்னுமாக இருநூறு வீரர்கள் புரவிகளில் ஆரோகித்தவண்ணம், வேல் தாங்கிக் காத்திருந்தனர். அவர்களுள், நூறு வீரர்கள் தீவுக் கோட்டையைச் சார்ந்த சோழியவீரர்கள். மற்ற நூறு வீரர்கள் செஞ்சியைச் சார்ந்த தமிழ் ஆந்திர வீரர்கள். தஞ்சையிலிருந்து கொண்டுவரப்பட்ட வீரர்களையோ, அல்லது எல்லைக்காவலாக நிறுத்தப்பெற்றிருந்த தஞ்சை வீரர்களையோ உடன் அனுப்பிவைக்க ரகுநாத

போஜன் விரும்பவில்லை. தன்னுடைய தஞ்சைப் பிரதிநிதி சித்தலிங்கத்தை மட்டும் உடன் அனுப்பிவைக்கச் சம்மதித்தான்.

தஞ்சைப் பிரதிநிதி சித்தலிங்க உடையார் மட்டும், அரச ரீதியான உடை தரித்துத் தமக்கென்று ஏற்பாடு செய்திருந்த இரட்டைக் குதிரை பூட்டிய ரதத்தின் அருகே அரசியாரின் வருகைக்காகக் காத்து நின்றிருந்தார். சோழகனுக்கென்று தனியான ரதம் பின்னே அலங்காரத்தோடு காணப்பட்டது.

அபரஞ்சி புறப்பட ஆயத்தமானாள். அப்போது அவளை உடனிருந்து அனுப்பிவைக்க செல்ல அங்கு வந்து சேர்ந்தான் மன்னன் ரகுநாதநாயக்கன் அபரஞ்சியின் இந்த எளிமையான அலங்காரத்தைக் கண்டு வெகுவாக ஆச்சரியப்பட்டுப்போனான். ஆனாலும், ஒன்றையும் கண்டுகொள்ளாதவனாக இருந்துவிட்டான். மனத்தில் துன்பஅலைகள்பேயாக இறைந்தன. 'அபரஞ்சியை மீண்டும் காண ஒரு வாய்ப்பு கிடைக்குமானால் ரகுநாதன் பாக்கியம் செய்தவனே!' என்று மனம் கண்ணீருடன் முனகிக்கொண்டது. விதி நடத்தும் இந்த நாடகத்தின் கதாநாயகியாக அபரஞ்சி அமைந்துவிட்டாள். துன்பியல் முடிவோ, இன்பியல் முடிவோ, அந்த விதியே தீர்மானிக்கவேண்டியதுதான். முள்ளை முள்ளைக்கொண்டு எடுப்பது சாணக்கிய ராஜ தந்திரமானாலும், இங்கு முள்ளை எடுப்பதற்குப் பயன் படுத்தப்படுவது? அது பிரசவித்த மலர்தான்! இது தீட்சதர் தந்திரம்!

"பிரபோ! விடைகொடுங்கள்!" அபரஞ்சியின் கண்கள் கலங்கிவிட்டன. அவளை வெகுவாகத் தேற்றி

ஞன் தஞ்சைநாயக்க வேந்தன். கடைசியாக மிகச் சிரமப்பட்டுக் குரலில் இதத்தை வருவித்துக்கொண்டு, "அபரஞ்சி புறப்படுமுன் ஒன்று. தயவுசெய்து நீ வைத்திருக்கும் ஓலையை என்னிடம் தந்துவிட்டுச் செல்வாயா? ஏனென்ருல், அதனை உன் வாக்குப்படி நமது குருதேவரிடம் சேர்க்கவேண்டுமல்லவா" என்று கேட்டான். அபரஞ்சி இடி விழுந்த நிலையில் கணவனை நோக்கிஞள்.

"அபரஞ்சி! அதிர்ச்சியடையாதே! எனக்கு எல்லாமே தெரியும். தீட்சிதர் பெருமான் சொல்லிவிட்டார் என்று தவருக நினைத்துவிடாதே! அவருடைய சீடன் நான். இராஜதந்திரக் கலை எனக்கு அதிகமாகவே கை வரப்பெற்ற ஓர் அம்சம்! ஆகவே கொடுத்துவிடு கண்மணி!"

அபரஞ்சி ஒன்றும் பேசிக்கொள்ளாமல் பெட்டியைத் திறந்து ஓலையைக் கொண்டுவந்து கொடுத்தாள். அப்படிக் கொடுக்கும்போது எதையோ கூற வாயெடுத்தாள். இடை மறித்த ரகுநாத நாயக்கன்: "கண்ணே! உன சமாதானம் எனக்குத் தேவையில்லாத ஒன்று; நான்தான் இரவே, கூறவேண்டிய அனைத்தையும் கூறி முடித்து விட்டேனே! அகவே, உன்னை நான் பூரண மாக-சத்தியமாக நம்புகிறேன்; போதுமா?"

அபரஞ்சி பணிவன்புடன் கணவனைப் பணிந்து, கால்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டாள். மீண்டும் ரகுநாதனே பேசினன்:

"தேவி! இந்த முறையும் உன்னுடைய இந்த ஓலையைத் திருட எனக்கு அதிக நேரம் பிடித்திராது. அப்படிச் செய்திருந்தால் அது அசல் திருடாகமுடியும்!

இது என்ன 'அசல் திருட்டு' என்று ஆச்சரியப்படு கிருயா? இரவு நான் திருடியது திருட்டல்ல; ராஜதந் திரம். உன்னுடைய உண்மை நிலையை நான் அறியவே இவ்வாறு செய்ய, ஒரு சேவகன் வேடம் தரித்து ஓலை தாங்கிச் சென்று நீ அளித்ததாக உன் தந்தையிடம் கொடுத்தேன்! என்னுடைய இந்தப் பரீட்சையின் மூலம் நீ தேறிவிட்டாய்! குருதேவர்க்கு நான் சொல்ல வேண்டுமல்லவா?"

"அப்படியென்றால், நான் தீவுக் கோட்டைக்குப் பயணமாவேன் என்பதை..."

"எப்போதோ முடிவு கட்டிய விஷயம்! சோழகன் வந்திருக்கும் செய்தி எனக்கு முன்னமே தெரியும் அபரஞ்சி!"

"பிரபோ!...நான்......"

"மனம் கலங்காமல் போய்வா தேவி!"

அபரஞ்சி புறப்பட்டாள்.

ஆரவாரத்துடன் தீவுக்கோட்டை நோக்கி அபரஞ்சி யும், சோழகனும், சிததலிங்க உடையாரும் பயண மானார்கள்.

அடுத்த சில நாழிகைக்குள் தஞ்சை மன்னன் ரகு நாத நாயக்கனும் பயணமாக ஏற்பாடுகளைக்கவனிக்க ஆணையிட்டான். எல்லாருக்குமே பேரதிர்ச்சியாக இருந்தது. மற்றுமோர் மிகப் பயங்கர அதிர்ச்சி காத் திருப்பதை செஞ்சி அரசன் கிருஷ்ணப்ப நாயக்கன் உணர்ந்தானில்லை.

அரசாபரணம் பூண்டு, அரண்மனையை விட்டு வெளியே வந்தான் ரகுநாத நாயக்கன். முத்துக்களால்

வேயப்பெற்ற பதினாறு புரவிகள் பூட்டிய சிவிகை ரதத்தை அடைந்ததும், அனைவரையும் ஒரு முறை கூர்ந்து கவனித்தான். அரசப்பிரதானிகள் முகங்களில் அசடுவழிந்தது. அரசன் கிருஷ்ணப்ப நாயக்கன் முகத்தில் சவக்களையே தாண்டவமாடியது. மகளைச் சோழகனோடு அனுப்பிவைத்ததில் அவனுக்கும் நிறைவில்லை. சோழகன் ஒரு பெண் பித்துப் பிடித்தவன் என்பது தென்னகம் அறிந்த உண்மையாயிற்றே!

மகாமேதையென நினைத்துக் கொண்டிருக்கும் அப்பய்ய சாஸ்திரிகள் பெரு மகிழ்வுடன் காணப்பட்டார். தாம் நினையாத ஒரு திட்டம், அருமையான முறையில் உருவானதில் ஒரு நிறைவுபோலும் அவருக்கு! மற்றபடி செஞ்சி மக்கள் ரகுநாத நாயக்கனை வாயார வாழ்த்திக் கொண்டிருந்தனர்.

திடீரென்று ஏதோ நினைத்துக்கொண்டவன்போல் நடித்து நிமிர்ந்த ரகுநாத நாயக்கன், "அர்ச்சுனா!" என்றலறி அழைத்தான். அந்த அழைப்பு, மழைக் காலத்தில் இடி இடிக்கும்போது மக்கள் அழைக்கும் அழைப்பாக இருந்தது ஒரு சிலர்க்கு. வேறு சிலர்க்கு, பாரதப்போரில் கோழையாகி விட்ட பார்த்திபனை நோக்கி கண்ணன் அழைத்த அழைப்பாக இருந்தது.

தளபதி அர்ச்சுனன், மன்னன் குரல் கேட்டுத் தாவியோடி வந்து எதிரே நின்றான்.

"அர்ச்சுனா! இதோ இந்த ஓலை, மாமனார் வீடான செஞ்சியிலிருந்து தஞ்சைக்கு அனுமதேயமாக வந்தது. செஞ்சி நமக்களித்த சீர் வரிசை இதுவேயாகும். எனவேதான், மாமனார் வீடு அளிக்கவிருந்த சீர் வரி

சையை நான் மறுத்துவிட்டேன். இதைவிட ஓர் சீர் வரிசை நமக்குத் தேவையா? ஆகவே, செஞ்சி மக்கள் செவிகள் குளிர, உரத்த குரலில் படித்து முடித்து, இந்த ஓலையை அன்புடன் எழுதியனுப்பிய செஞ்சியின் மகா ராஜ தந்திரியான அப்பய்ய சாஸ்திரிகளிடம் பணிவன்புடன் ஒப்படைப்பாயாக!”

தஞ்சை மன்னன் உத்தரவைத் தலைமேல் தாங்கி, ஓலையை உரத்த குரலில் படித்து முடித்தான் தளபதி அர்ச்சுனன். 'அபரஞ்சி ஓர் அபசுரம்' என்ற கேவல மான வாசகத்தைக் கேட்டு, செஞ்சி மக்கள் அதிர்ச்சி கொண்டதோடு மட்டுமல்லாமல், தங்கள் இளவரசியை இவ்வாறு பழித்த அரசனையும், அய்யனையும் நினைத்து ஆத்திரமும் அடைந்தனர். அரசன் கிருஷ் ணப்பனுக்கு இதயமே வெடித்துவிடும் போலிருந்தது. அப்பய்ய சாஸ்திரிகள் அரண்டு மருண்டு, தளபதி அர்ச்சுனன் கொடுத்த ஓலையைத் திரும்பப் பெற்றார். அப்போது ரகுநாதன் சொன்னான்: “சாஸ்திரிகளே! நான் சொல்லுகிறேன், கேளுங்கள்! அபரஞ்சி ஒரு புடம் போட்ட தங்கம்! நினைவிருக்கட்டும்!”

அதற்குமேல் கொஞ்சமும் தாமதிக்க விரும்பாத தஞ்சை மன்னன் ரகுநாத நாயக்கன், புறப்பட உத்தர விட்டான். செஞ்சி மக்கள் வாழ்த்தவும் முடியாமல், வசையவும் முடியாமல் 'திரு திரு' வென்று திருடர் களைப்போல் விழிக்கலாயினர்.

21



# முதலைகள் முற்றுகை

செஞ்சி எல்லையைக் கடந்தது முதல் அபரஞ்சியின் இளம்மனம் பலவாறு சஞ்சலப்பட்டு அஞ்சியது; நினைவு துஞ்சியது; துணிவு மிஞ்சியது.

பயணத்தின்போது அவளுக்குரிய அரிய, பெரிய மரியாதைகள் அளிக்கப்பட்டன. அவள் இப்போது ஒரு சாதாரண செஞ்சியரசன் மகளல்லவே? பேரரசன் தஞ்சை நாயக்கன் ரகுநாத பூபதியின் மனையாளாயிற்றே! ஆகவே, அவளை நடத்திய விதமும் அலாதியாகவே இருந்தது. இத்தனையையும் தீவுகோட்டைச் சோழச் சிற்றரசன் சோழகன்தான் ஏற்பாடு செய்திருந்தான. எனினும், அவனுடைய உள்ளம் கருவிக் கொண்டே இருந்தது. அபரஞ்சியின் அழகு மயக்கிக் கொண்டே இருந்தது. அவளுடைய இளமை போதை தந்துகொண்டே இருந்தது. அவள் முன்புதந்த ஏமாற்றம் சோழகனைப் பலவாறு திக்குமுககலாடச் செய்து கொண்டிருந்தது. ஒரு காலத்தில்தான் அவளைப் பற்றி அவன் எவ்வாறெல்லாம் கனவு கண்டு கொண்டிருந்தான்! இருக்கும் அரண்மனைப் பதுமைகள் போதாவென்று, அபரஞ்சியைக் கொண்டுவந்து 'அது' களுக்குத் தலைவியாக்க—ஏன்? பட்டத்தரசியாக ஆக்க

வும் முயன்று வந்தானே! அவனுடைய முயற்சி பல
வாறு தடை கண்டாலும், செஞ்சியரசன் கிருஷ்ணப்ப
நாயக்கன் வலுக்கொண்டு அவளைப் பலியிடச் சித்த
மாயிருந்தானே! அந்தத் தெம்பில்தானே அவன்,
கிடைத்த காதல் தோல்விகளைப் பற்றிக்கூடக் கவலைப்
படாமல் இருந்தான்! ஆனால், எதிர்பாராது முகமதி
யர்கள் தொடுத்த விஜயப் போர் மூளவேண்டுமா? வஞ்ச
நெஞ்சன் கிருஷ்ணப்ப நாயக்கன் முகமதியர்பால்
துணை செல்ல வேண்டுமா? விஜயப் போரில் இராயர்க்
குத் துணை நின்ற ரகுநாத நாயக்கன் வெற்றி அடைய
வேண்டுமா? செஞ்சிக் குடும்பம் சிறைபபட வேண்
டுமா? எல்லாம் காலத்தின் சதியாட்டமாக முடிந்து
விட்டது சோழகனுக்கு. இன்னும் அச் சதியாட்டத்
திற்கே கால் கோள் விழா நடத்திக்கொண்டிருந்தான்.
இல்லையென்றால், எதிர்பாராதவிதமாக, சோழகன்
எதிர்பார்த்த அபரஞ்சியை ரகுநாதன் மணக்க
நேரிடுமா? அபரஞ்சியும் ஆதிமுதல் ரகுநாதனையே
எதிர்பார்த்தாள்; எதிர்பார்த்தது போலவே மணந்தும்
கொணடாள் என்ற முழு உண்மையையும் சோழகன்
அறிவான். எனவேதான் அவன் பயணத்தின் போது
கருவிக்கொண்டு சென்றது! எபபடியும் அபரஞ்சியின்
இளமை நிறைந்த மதுவைத் தன்னுடைய ஆசை
யென்னும் கிணணத்தில் நிரப்பிவிடவேண்டும் என்றே
அவன் நப்பாசை கொண்டான். தமிழக்குடியில் பிறந்த
இப்படிப்பட்ட ஒரு தத்தாரியை வரலாறு முன்னம்
கண்டதில்லை; இடையில் கண்டதில்லை; ஆனால் கடைசி
யில் கண்டது! பாண்டியர்க்குடிக்கு எப்படி *சந்திர
சேகரப் பாண்டியனும், வீரபாண்டியனும் துரோகி

* மாலிக்கபூரை நுழையவிட்டவர்கள்.

களாக இருந்தனரோ, சேரர்க்குடியில் எப்படிச் சில 'நம்பூதிரிகள்* தமிழையும், தமிழ் மரபையும் மாற்ற முயன்றார்களோ, அப்படியே சோழர்க்குடியில் ஒரு சோழகன் பண்புகெட்டவனாக—பாவியாக—பச்சை அயோக்கியனாக அவதரித்திருந்தான். ஆனால், பல்லவர்களை இப்படிச் சொல்வதற்கில்லை. அவர்கள் தமிழ் மரபுக்கு மாறுபட்டவர்களேயானாலும், கடைசிக் காலத்தில் தமிழையும் தமிழ்க் கலைகளையும் ஆதரித்து வளர்த்தார்கள்; தமிழர் வீரத்தை நிலை நாட்டினார்கள்; தமிழுக்காக உயிரையும் நீத்தார்கள்! நந்தி, கலம் பகத்தால் மாண்ட கதை நாடறியுமே!

தீவுக் கோட்டை என்பது ஓர் அழகான சிற்றரசு. திருப்பாதிரிப் புலியூர் (கூடலூர்) அருகே கடலுடன் கொள்ளிட நதி சங்கமமாகிறது. அப்படிச் சங்கமமாகும் இடம், இயற்கையாகவே கொள்ளிட நதி இரண்டாகப் பிரிந்து இருகரம் நீட்டிக் கடற் காதலனை அரவணைக்கும் காட்சிபோல் தென்படும். அந்தத் தீவின் நடுவில் பலமான கோட்டையமைத்து வாழ்ந்தவன்தான் சோழகன். இதனை 'ஜலக் கோட்டை' யென்றும் சொல்லுவர். ஒருவரும் எளிதில் படை கொண்டு தீவுக் கோட்டையுள் நுழைந்துவிட முடியாது. கொள்ளிட நதியையே அகழியாகக் கொண்டு விட்ட பிறகு, எவரால் அசைக்க முடியும்? இந்தச் செருக்கு சோழகனுக்குச் சற்று அளவுக்கு மீறியே இருந்தது. மேலும், கொள்ளிட அகழியில் ஆயிரக் கணக்கான பயங்கர முதலைகளை வாசம் செய்ய விட்டிருந்தான் சோழகன். அத்தனை முதலைகளும் அவனால் பழக்கப்பட்டவை. அவன் 'வா'வென்றால் வரும்;

---

*பத்தாம் நூற்றாண்டுக்குப் பிறகு வாழ்ந்தவர்கள்

'போ' வென்றால் போகும். சில சமயங்களில் அவனாகவே வந்து அந்த முதலைகளுக்கு இறைச்சியளிப்பான். ஏன்? அவன் நிலாக் காலங்களில் முதலைகளைப் படகாக அமைத்து நதியுலா வந்ததையும், அக்காலத்து வெளிநாட்டு யாத்திரிகர்கள் கண்டதாகக் குறிப்பெழுதி யிருக்கின்றனர்.

அப்பேர்ப்பட்ட அற்புதம் வாய்ந்த தீவுக் கோட்டையை அடைந்தனர் அனைவரும். முதலைகளையே பாலமாக அமைத்து, அபரஞ்சியைக் கோட்டைக்குள் அழைத்துச் சென்றான் சோழகன். அபரஞ்சிக்குச் சர்வ நாடிகளும் அதிர்ச்சிகண்டு விட்டன. இவன் மனிதன் தானா? இல்லை, ராட்சஸனா? இந்த முதலைகள்தாம் இவன விடுத்த குரல் கேட்டு எவ்வாறெல்லாம் வளைந்து நெளிந்து ஓடோடி வருகின்றன! அப்பப்பா! ஒன்று, இரண்டா? ஆயிரக்கணக்கில் இருக்கின்றனவே! ஒவ்வொன்றும் இரண்டு மூன்று ஆட்களை விழுங்க வல்லதாக இருக்கிறதே!—என்று பலவாறு வியந்தாள், பயந்தாள், அபரஞ்சி!

அனைவரும் அந்த நீண்ட முதலைப் படகின் மீது தான் கோட்டைக்குள் நுழைந்தனர். ஒருவர்க்காவது அவை தொல்லை தரவேண்டுமே! ஆயினும் நதியைக் கடக்க, மரப்பாலங்கள் துண்டு துண்டாகக் கோட்டை மதில்மேல் சாய்த்து வைக்கப்பட்டுத் தானிருந்தன. அபரஞ்சி வியக்க வேண்டும், தன்னுடைய பெருமைகளை அறிய வேண்டும் என்ற ஒரே காரணத்துக்காக நதியகழிக் கரையிலேயே நின்று முதலைகளுக்கு ஆணைப் பிறப்பித்துக் கொண்டிருந்தான் சோழகன். முடிவில், அத்தனையையும் நோக்கிப் புதிய முறையில் கூச்சலிட்டான். ஒவ்வொன்றாக விலகி, நெளிந்து

செல்லத் தொடங்கின. எத்தனை வியப்பு நிறைந்த காட்சி இது; 'முதலைப் படையரசன் சோழகன்' என்று கூறுகிறார்களே! அது முழுக்க முழுக்க உண்மைதான்! இவனை எதிர்த்தவர்கள் முதலைக்குத்தான் பலியானார் கள் என்று கூறுவதும் முழு உண்மை! சிலர் இவனை வெல்லமுடியாது என்பதையும் நம்பத்தான் வேண்டும்

அடடா! முதலைவாயுள் நுழைவதுபோல இந்தத் தீவுக்கோட்டையுள் நுழைகிறோமே! நம் கதி ஒரு வேளை எதிர்பாராத விதமாக நடந்துவிட்டால்?

நடந்துவிட்டால்? தீவுக் கோட்டைக்குச் சாபம் பிறந்துவிட்டதாகத்தான் பொருள்! இலங்கை பட்ட பாட்டை இதுவும் படவேண்டியதுதான்!

அபரஞ்சியை இன்முகம் காட்டியே வரவேற்றான் சோழகன். அரண்மனையுள் காலடி வைத்தாள், நெஞ்சு தளர்ந்த அபரஞ்சி. அப்போது அவளுடைய வலக் கால் இடறியது. "பார்த்து வாருங்கள், நாயக்கர் தேவி!" என்றான் சோழகன். அவனுடைய குரலில் பரி காசம் தொனித்ததை முதன் முறையாக உணர்ந்தாள் அபரஞ்சி. இப்போது அவள் முதலைகள் முற்று கைக்கு இடையே அகப்பட்டுக்கொண்ட மோகினி!

## 22



# குருவுக்கு மிஞ்சிய சீடன்

மனத்தில் பல் வேறுபட்ட உணர்வுகள் முட்டிமோதி அலைப்பட்ட நிலையுடன் தஞ்சையை அடைந்தான் விஜய ரகுநாத போஜன். அபரஞ்சியின் பிரிவு அவனை அவ்வளவுக்கு வாட்டி வதைத்தது. தான் செய்தது அறமா வென்றும் பன் முறை தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். அரசியல் சூதாட்டத்துக்கு அவள்தானு கிடைத்தாள்? அவள்தானு பலியாகவேண்டும்?

மாமனூர் நாடு சென்று திரும்பும் தங்கள் மாமன்னரைத் தஞ்சை இனிதாக வரவேற்றது. ஆனுல், எங்கே அபரஞ்சியைக் காணோம்? பிறந்த வீட்டில் சிலகாலம் தங்கி வரட்டும் என்று விட்டு வைத்து விட்டுத் திரும்பி விட்டாரா மாமன்னர்?

மக்களுடைய இதய எதிரொலிக்கு இதே பதிலைப் பகர ஆணையிட்டான் ரகுநாதனும்! இருக்காதா? அன்னை வீடென்ருலே பெண்களுக்கு அமுதகலச மாயிற்றே!

மக்களை ஏமாற்றிவிடலாம்; ஆனுல் அரண்மனையுள்ளிருக்கும் ஜாம்பவானை ஏமாற்றிவிட முடியுமா?

முதலில் ஒன்றையும் பேசிக்கொள்ளாமலே ரகுநாதனை வரவேற்ருர் அமைச்சர் மேதையான ஸ்ரீ

கோவிந்த தீட்சிதர். பட்டத்தரசி கலாவதிக்கும் இது வியப்பாகவே இருந்தது.

ஆற அமர அனைத்தையும் பேசிக்கொள்வோம் என்றே அவர்கள் மௌனமாக இருந்துவிட்டனர்.

அந்திச் சூரியனும் மேலைக்கடலில் வீழ்ந்தான். அரண்மனை முழுவதும் தீப அலங்காரம் செய்தார்கள் பணியாளர்கள். கோவிந்த தீட்சிதர் மட்டும் தம்முடைய சித்திரக் கூடத்தில் அமர்ந்து சிந்தித்த வண்ணமாக இருந்தார். இந்த ரகுநாதன் ஏன் இப்படிச் செய்யவேண்டும் என்பது அவருக்குப் புரிய வந்தாலும், எதற்காக அவசரப்பட்டிருக்க வேண்டும் என்பதே அவருக்குப் புரியாமல் இருந்தது.

தீவுக்கோட்டைக்குள் நுழைவது நரகத்துக்குள் நுழைவதற்கு ஒப்பானதாயிற்றே! பெண்கள் நுழைவது மிகமிக ஆபத்தானதாயிற்றே! அதுவும் அழகிய பெண்கள் நுழையலாமா? மேலும், எதிர்பார்த்த அபரஞ்சியை அங்கு அனுப்பிவைக்கலாமா? காம வெறியனான சோழகன் ஒரு பாவி ஆயிற்றே! தினமும் அகழிக்கப்பால் உள்ள சிற்றூர்களில் புகுந்து இளம் பெண்களைத் தூக்கிச் சென்று கற்பழித்து, பிறகு முதலைகளுக்கு இரையாக்குபவனாயிற்றே! ஐயகோ! அபரஞ்சிக்கு இப்படி ஏதேனும் நடந்துவிடக் கூடாதே!

கோவிந்த தீட்சிதர் இவ்வாறெல்லாம் மன வருத்தபட்டுக் கொண்டிருந்தபோது, ரகுநாதன் அறையினுள் நுழைந்து வணங்கி, இருக்கையில் அமர்ந்தான்.

"சுவாமி! ஏதோ தனித்துப் பேசவேண்டும் என்று அழைத்தீர்களாம்; நானும் தங்களிடம் தனித்துப்

பேசத்தானிருந்தேன். அபரஞ்சி விஷயமாகப் பேசத் தானே அழைத்தீர்கள்?"

"அதுவும் ஒரு காரணம்தான். என்றாலும், நீ செஞ்சிக்குச் சென்றது முதல், நடந்ததுவரை ஒன்றை விடாமல் கூற நான் கேட்கவேண்டும்!"

"ஆஃகா! அதுதானே என்னுடைய முதல் கடமை" என்று கூறிய ரகுநாதன், ஓலை விஷயம் நீக்கி ஏனைய எல்லா விஷயங்களையும் விளக்கினான். முடிவில், அபரஞ்சியைத் தன்பொருட்டு தீவுக்கோட்டைக்கு அனுப்பியதையும் கூறினான். தீட்சிதர்க்குப் பெருமூச்சு பறிந்தது.

"ரகுநாதா! எல்லா விஷயங்களும் நிறைவாகவே நடந்திருக்கின்றன. நீ சீர்வரிசை மறுத்துக் கப்பம் கேட்டாயே, அது மிகப் பிரமாதம்! என்னிடம் பயின்ற உனக்கு இந்த அரச தந்திரம்கூட இல்லையென்றால் அர்த்தமே இல்லை. ஆயினும், நீ அபரஞ்சியை அவசரப்பட்டுத் தீவுக்கோட்டைக்கு அனுப்பிவிட்டாய்!"

"இல்லை, சுவாமி! சிந்தித்துத்தான் அனுப்பி வைத்தேன்!"

"என்ன சிந்தனையுடன் அனுப்பி வைத்தாய்?"

"அவளை ஒரு தியாகியாக்கிவிடவே அனுப்பி வைத்தேன்!"

"தியாகி என்றால்? புரியும்படி சொல்லப்பா!"

"சுவாமி! கிருஷ்ணப்பனுடைய போக்கு எனக்குப் புதிராகவே தென்பட்டது; மேலும், அந்த வஞ்ச நெஞ்சர் அப்பய்ய சாஸ்திரிகளை என்னால் நம்பவே முடியவில்லை! இந்நிலையில் காரணமில்லாமல் சோழ

கன் வேறு ஏன் வரவேண்டும்? இவற்றையெல்லாம் உத்தேசித்தால் ஏதோ நமக்குப்பின்னுல் பெருத்த சூழ்ச்சிகள் நடைபெற்று வருவனவாக உணர்ந்தேன். ஆகவே, அந்தச் சூழ்ச்சியை முறியடிக்க எண்ணினேன். அபரஞ்சியைச் சூத்திரப் பொருளாகப் பயன் படுத்த நினைத்தேன்!"

"அவள்தாஞ கிடைத்தாள்?"

"அவளாகவேதான் கிடைத்தாள்!"

"அதற்காக அவளை வஞ்சிக்கலாமா!"

"வஞ்சிக்க வில்லையே சுவாமி! தியாகியாகத் தானே ஆக்க முயன்றேன்!"

"தந்தையின் சூழ்ச்சிக்கு, மகளையே சூத்திரப் பொருளாக ஆக்கிவிட்டாய்!"

"ஆமாம்; சுவாமி!"

"இது மகாபாவம், ரகுநாதா!"

"உணர்கின்றேன், குருதேவா! வேறு வழியே இல்லை"

"சிந்தித்திருக்கலாம்!"

"சிந்தித்து முடிவு காணலாம்; ஆஞல், அரிய வாய்ப்பு கிடைக்காதல்லவா? தாங்கள்தான் அடிக் கடிச் சொல்வீர்கள்; கிடைத்தற்கரிய சந்தர்ப்பம் கிடைக்கின்றபோது, அதனை நழுவ விடுபவனைப் போன்ற முட்டாள் உலகததிலேயே கிடையாது என்று! நழுவவிட எனக்குச் சம்மதமில்லாமல் போய்விட்டது சுவாமி! எந்தப் பகைவனையும் சமாளித்துவிட முடியும் என்ற நம்பிக்கை என்னுள் துணிவாக இருக்கிறது. ஆஞல், தீவுக்கோட்டைசோழகன் பகைமை அப்பேர்ப்

பட்டதன்று. அதனை முறியடிக்க முடியும் என்பது, என்வரை ஐயத்திற்குரியதாகவே இருந்து வருகிறது. தீவுக்கோட்டையைத் துகளாக்கினால்தான் என்னுள் ஒரு நிம்மதி, மகிழ்ச்சி ஏற்படும். எனவே, ஓர் அபரஞ்சி பலியாவதில் குற்றமில்லை என்றே மனம் கூறியது. நாட்டுக்காக மனைவியைப் பலிகொடுப்பது குற்றமாகுமா, குரு சுவாமி!"

"ஆகாதுதான்; என்றாலும், அபரஞ்சி ஒரு புடம் போட்டத் தங்கம், ரகுநாதா!"

"நானும் உணர்வேன்! அவளுடைய அந்த ஒழுக்கம்தான் நம்மை—நம் நாட்டைக்காக்க முடியும் சுவாமி!"

"செய்வதைச் சரியாகத்தான் செய்திருக்கிறாய்! ஆனால், அபரஞ்சியை நினைக்கும்போதுதான் பாவமாகத் தெரிகிறது. சரி, சரி! இன்னோர் விஷயத்தை அறிய எதிர்பார்த்தேன். அது முடியாமல் போய் விட்டது!"

"அது என்ன, அந்த அபசுர ஓலையைப்பற்றியது தானே சுவாமி?'

தீட்சிதர் திகைப்புடன் நோக்கினார்.

"சுவாமி! நான் அனைத்தும் அறிவேன், தங்கள் மாணவன் தானே?" என்று கூறிய ரகுநாதன் ஓலை பற்றிய எல்லா செய்திகளையும் விவரித்துத் தன்னை மன்னிக்கும்படியும் வேண்டினான்.

எல்லாவற்றையும் செவிமடுத்த தீட்சிதர், பிறகு சொன்னார்:

"ரகுநாதா! உன்னை என்னமோ வென்று நினைத்தேன். என் ரகசியத்தையே உளவறிய வல்லவனாக உருவெடுத்து விட்டாய்! மகிழ்ச்சியே! இதனால், நீ அபரஞ்சி விஷயத்திலும் தீர்க்க தரிசனமாகச் செய்திருப்பாய் என்ற நம்பிக்கையும் என்னுள் எழுகிறது. முடிவைப் பொறுத்திருந்து பார்ப்போம்!"

விஜயரகுநாத பூபதியின் முகத்தில், மெல்ல மெல்லக் களைகட்டியது. மனம் அபரஞ்சியின் எதிர்காலத்தை நினைத்து அல்லலுற்றது.

## 23



# சகுனியின் கதை

கடந்த இரண்டு வாரங்களாக மனம் ஒரு நிலையில் இல்லாமல் பெரிதாகத் தவித்து அல்லல்பட்ட அப்பய்ய சாஸ்திரிகள், இப்போதுதான் கொஞ்சம் கொஞ்சமாக வெளியே தலைகாட்டி நடமாட லானார். மக்களிடம் அவருக்கிருந்த செல்வாக்கு எவ்வளவோ குறைந்துவிட்டது. அரண்மனை பக்கமாகத்தலை நீட்டுவதும், தன்னுடைய மாளிகைச்குத் திரும்புவது மாகவே இருந்தார். கோயிலுக்கும் ஓரிரு முறைதான் சென்றுதிரும்பினார். கோயில் குருக்களும்கூட அவரை ஒரு மாதிரியாகப் பார்த்தார். மக்கள் சிலர் கண்டும் காணுமலுமாகக் கேவலமாகப் பேசுவது, அவருடைய செவிகளில் விழத்தான் செய்தது. ஒரு சிலர் சாக்குப் போக்காகக் காரியுமிழவும் செயதனர். செஞ்சி இளவரசியைப்பற்றி அவர்கள் நன்கு அறிவர்; அபிமானமுள்ளவர்களும் கூட! அப்பேர்ப்பட்ட இளவரசியின் மீது அபாண்டமாகப் பழிசுமத்தி, வாழாவெட்டியாக்க முனைந்த அப்பய்ய சாஸ்திரிகளை அவர்கள் ஒரு போதும் மன்னிக்கத்தயாராக இல்லை. பாவம், சாஸ்திரிகள்! அவருடைய அரசியல் சதுரங்கத்தைப் புரிந்து கொள்ளும் அளவிற்கா மக்கள் இருந்தனர்? செஞ்சி அரசன் கிருஷ்ணப்ப நாயக்கனே புரிந்தும் புரியாதது

மாக இருந்தான் என்றால், மக்களைக் குறை கூறி என்னபயன் என்று,சாஸ்திரிகள் உள்ளூரக்குமைந்தார்.

கொஞ்ச நாளைக்கு வெளியில் எங்கேனும் சென்று. மனமாறுதல் பெறலாமா வென்று நினைத்தார். மக்களும் ஒருவாறு மறப்பர். தமக்கும் ஒரு நிம்மதி கிடைக்குமல்லவா? எங்குச் செல்வது?

செஞ்சி மக்களைப்பற்றி அவர் கவலைப்படவில்லை. நாயக்கன் வந்தாலும் காலை நக்குவார்கள்; முகமதியன் வந்தாலும் முகத்தைத் தடவிக்கொடுப்பார்கள். பொதுவாகவே, பிற்காலத் தமிழ் மக்களின் போக்கை அவர் எடை போட்டு வைத்திருந்தார். நானே நாமே பெரிய அரச தந்திரத்தின் மூலம் ரகுநாதனை வீழ்த்தி, கிருஷ்ணப்பனைப் பேரரசனாக ஆக்கிவிட்டால், வானளாவப் புகழ்வார்கள்! வெறும் ஆட்டு மந்தைகள்தாம் இன்றைய தமிழர்கள். நாட்டுணர்ச்சி, இன உணர்ச்சி, மொழியுணர்ச்சி யற்றவர்கள். தெலுங்கன் ஆள்கிறான் என்பதற்காக எத்தனை பேர்கள் விழுந்தடித்துக் கொண்டு தெலுங்குப் படிக்கிறார்கள்! வெறும் அரசாங்கக் காக்காய்கள்!

ஆமாம்; தீவுக் கோட்டைக்குப் புறப்பட்டுப் போவதுதான் சாலச் சிறந்தது. அவன்தான் இப்போதைக்குத் தம்முடைய பிடிக்கு அகப்பட்டவன்; ஆட்டி வைப்பதுபோல ஆட முன் வருபவன்! இந்தக் கிருஷ்ணப்ப நாயக்கன் கிழட்டுக் கழுதை! விபரம் தெரியாதவன்; அரசியல் தந்திரம் அறியாத இந்தக் கழுதை, முன்னே சென்றால் கடிக்கிறது, பின்னே சென்றால் உதைக்கிறது! அப்படியும் இந்தக் கழுதையைப் பேரரசனுக்கத்தானே மனம் செல்கிறது! இந்தப் பிறவி

யில் இவன் பேரரசனாக முடியாது. எப்போது பெண்ணைக் கொடுத்தானோ, அப்போதே மண்ணைக் கவ்விவிட்டான் என்றுதான் பொருள்! இவனுக்காகத் தம்முடைய மூளையைச் செலவிடுவதை விட, தீவுக்கோட்டை அரசன் சோழகனுக்குச் செலவிட்டால் பலவிதத்திலும் நன்மையுண்டு! தமிழ் மண்ணில் பிறந்தோம்! ஒரு தமிழனுக்கே உதவிபுரிவோமே! சே, சே! தமிழோ, தெலுங்கோ, அந்த அகங்காரம் பிடித்தவன் கோவிந்த தீட்சிதனைப் பழிவாங்கித் தம்முடைய பாதங்களில் விழச் செய்யவேண்டும்! அப்போதுதான் அப்பய்ய சாஸ்திரியைத் தென்னாடு உணரும்! தென்னாட்டுச் சாணக்கியர் என்று, நாளைய உலகம் புகழும்!

பலமான சிந்தனையுடன் அரண்மனையை நெருங்கிக்கொண்டிருந்தார் அப்பய்ய சாஸ்திரிகள். அரண்மனை வாசலையடைந்ததும் பல்லக்கு நின்றது. நேரே கம்பிரமான தோற்றத்துடன் நுழைந்தார். பாதக்குறட்டின் 'டக்டக்'கென்ற ஓசையைக கேட்டு அரண்மனையே விலகி வழிவிட்டது. வழிவிட்ட கண்களில் எல்லாம் முந்தி மாதிரி வாழ்த்து தென்படவில்லை. வசை கணைகள்தாம் தென்பட்டன. சுக்கிராச்சாரியாரைப்போன்று காக்கை நோக்கில் அனைவரையும் கவனித்த வண்ணம் உள்ளே சென்றார் சாஸ்திரிகள். அவருடைய வருகையை அறிந்து, செஞ்சி அரசன் எழுந்துவந்து கரம் கூப்பி வரவேற்றான். கிருஷ்ணப்ப நாயக்கனுக்கு முன்பிருந்த கோபம் படிப்படியாக சாஸ்திரிகளுடைய சமாதானத்தின் மூலம் எவ்வளவோ குறைந்திருந்தது.

"என்ன சுவாமி? இன்று வருகையில் ஏதோ ஒரு வேகம் இருக்கிறது?"-கிருஷ்ணப்ப நாயக்கன் சிவந்த கண்களை நளினமாக உருட்டிய வண்ணம் கேட்டான்.

அப்பய்ய சாஸ்திரிகள் அலட்சியமாகச் சிரித்தார். "என்னுடைய வேகம் குன்றி எத்தனை நாட்களாய் விட்டன கிருஷ்ணப்பா! முயலாகத் துள்ளிய சாஸ்திரி ஆமையாக மாறிவிட்டான். அதாவது ஐம்புலன்களை யும் அடக்கிக்கொண்டான்! அவனுக்கு இனியும் ஒரு வேகமா? ரகுநாதன் வாழ்ந்தால் என்ன? தீவுக்கோட் டையான் வீழ்ந்தால் என்ன? செஞ்சி கிருஷ்ணப்பன் எப்படிப்போனுல் என்ன? அக்கடா வென்று எதேனும் கோயில் பிரசாதத்தில் காலம்தள்ள நினைத்துவிட்டா லும் ஆச்சரியப்படுவதற்கில்லை! சாணக்கியரின் மறு பிறவியான என் அறிவு, இப்படி உறங்கிக்கெடவேண் டும் என்றிருக்கிறதே!"

"இப்போது தங்களை யார் என்ன சொன்னூர்கள்?"

"என்ன சொல்ல வேண்டும்? வந்து தங்கிய அந்த மூரிரு நாட்களில்; ரகுநாதன் செஞ்சியை—அதாவது மக்களையும், அரசனையும் நன்ருகவே எடைபோட்டு விட்டான். என்னைப் பழி வாங்கவே வந்தான். பழி வாங்கித் தலை குனியச் செய்து விட்டும் போய்விட்டான். எந்த நலத்துக்காக இந்த அப்பய்ய சாஸ்திரி இவ்வாறு நாடகம் நடத்திஞன் என்று உணர செஞ்சி அரசனுக்கே இத்தனை நாட்கள் பிடித்தன வென்ருல், செஞ்சி மக்களுக்கு இன்னும் எத்தனை நாட்கள் பிடிக்குமோ? ஆகவே..."

சாஸ்திரிகள் தயங்கிஞர்.

"ஆகவே...? சொல்லுங்கள் சுவாமி!"

"ஆகவே என்ன? எங்கேனும் தலை மறைவாகச் சென்று, சிலகாலம் தங்கிவிட்டு வரலாம் என்று

நினைக்கிறேன். இதை உன்னிடம் சொல்லிவிட்டுப் போகலாம் என்றுதான் வந்தேன்!"

"தலை மறைவாகவா?"

"நான் கொள்ளப்போகும் ஒய்வுக்குப் பெயர் வேறு என்ன சொல்ல முடியும்?"

"அந்த ஒய்வை இங்கிருந்து எடுக்க முடியாதா?"

"முடியாது. என்னைச் சிறுகச்சிறுக மனவேதனைப் படுத்தி இந்த மக்கள் சாகடித்து விடுவார்கள்!"

"இதற்காக எங்குச் செல்லலாம் என்று சிந்தித்து இருக்கிறீர்கள்?"

"இன்னும் முடிவு செய்யவில்லை. இனிமேல்தான் முடிவு செய்ய வேண்டும்! ஒரு வேளை பயணப்பட்ட பிறகும் முடிவு செய்யலாம். என் போக்கு இப்போ தெல்லாம் எனக்கே புரியவில்லை கிருஷ்ணப்ப நாயக்கனே!"

"முடிவில்லாத பயணமா?"

"அதுதானே வாழ்க்கையும்!"

"இம்......"

"ஏன்? நீயே ஒரு இடத்தைக் குறிப்பிட்டுச்சொல். அங்கு வேண்டுமானாலும் போய் ஒய்வு கொள்ளு கிறேன்."

"எங்குச் செல்ல முடியும்? செஞ்சிக்கு அடுத்து நமக்கிருக்கும் ஒரே இடம் தீவுக்கோட்டைதான்!"

"தீவுக்கோட்டைக்கா?"

"ஏன் பயப்படுகிறீர்கள்?"

"ஐயோ! நீயாவது என்மீது கோபப்பட்டு, பிறகு உணர்ந்து வழிக்கு வந்தாய். சோழகனுக்குக் கோபம் ஏற்பட்டுவிட்டால், பிறகு நான் ஒரு முந்தலை இரைக்குப் போதுமானவனாக முடியுமா?"

"சோழகனை அப்படி யெல்லாம் சொல்லாதீர்கள். உங்களைத் தெய்வமாகப் பூஜிக்கிறான்!"

"நம்புகிறாயா?"

"கண்ணை மூடிக்கொண்டு நம்புவேன்!"

"உனக்கு விருப்பமானால் தீவுக் கோட்டைக்கே சென்று, சில காலம் தங்கிவிட்டுத் திரும்புகிறேன்!"

"அங்கே அபரஞ்சி இருக்கிறாளே! அவள் தஞ்சைக்குச் சென்றுவிட்டாளா இல்லையா என்பது தெரியவில்லையே?"

"அநேகமாகச் சென்றிருப்பாள்!"

"எனக்குத் தகவல் தெரியவில்லையே!"

"என்ன அசந்தர்ப்பமோ! நான் சென்றதும் உனக்குத்தகவல் அறிவிக்கிறேன் கிருஷ்ணப்ப நாயக்கனே!"

"நல்லது சுவாமி! நாளையே நீங்கள் புறப்படலாம்!"

"நாளை வேண்டாம் அஷ்டமி! இன்றே புறப்பட்டு விடுகிறேன்!"

"அப்படியே செய்யுங்கள். புறப்பாட்டுக்கான ஏற்பாடுகளை இதோ கவனிக்கிறேன்!"

செஞ்சியரசன் வேகமாக அமைச்சரைக் காண விரைந்தான். அவன் செல்லும் திசையைச் சிறப்பற்ற தன்மையுடன் நோக்கி, உள்ளுக்குள் சிரித்துக் கொண்

டார் அப்பய்ய சாஸ்திரிகள். அவருடைய வாய் "அபரஞ்சி" என்று முணுகிக்கொண்டது. நல்ல சமயத்தில் கிருஷ்ணப்ப நாயக்கன் நினைவுபடுத்திஞன். அத்துடன் நாமாகக் கேட்க வந்ததுபோக, அவனுகவே தீவுக்கோட்டை நோக்கி அனுப்பி வைக்கிருன்! அபரஞ்சி மட்டும் தீவுக்கோட்டையில் இருக்க வேண்டும்......பிறகு நடப்பதே வேறுதான்!

பாவம், சாஸ்திரிகள்! சாணக்கியராக உருவெடுக்க நினைத்தார்! ஆனுல், சகுனியாக முடியப்போகும் அவருடைய கதை அவருக்கே தெரியாதே!

தன்னுடைய் கதை மட்டும் தனக்குத் தெரிந்துவிட்டால், பிறகு மனிதன் ஊரார்க் கதைக்கு ஒப்பாரி வைப்பதை நிறுத்திக்கொள்வானே!

24



# காதலுக்குக் கப்பம்

கிழக்கே கடலும், மேற்கிலிருந்து பாய்ந்து வந்து வடக்குத் தெற்குமாய்ப் பிரிந்து கடலில் சங்கமமாகும் கொள்ளிடமும் கொண்ட அந்த 'ஜலக்கோட்டை' என்ற தீவுக்கோட்டையினுள், அபரஞ்சி சொல்லொணாத் துயராழியில் மூழ்கிக் கிடந்தாள். இந்த முதலையரக்கனின் தீவுக்கு வந்து இத்தனை நாட்களாகியும், இன்னும் இதைவிட்டுக் கிளம்ப முடியவில்லையே என்று பெரிதும் வருந்தினாள். தன்னுடன் வந்த காவற்படைவீரர்கள் என்னவானார்கள் என்றும் அவளுக்குத் தெரியாது. அவர்கள் பத்திரமாக இருக்கிறார்கள் என்றே அவள் நினைத்தாள். அவளுக்கு அழகான பளிங்குமாளிகை அளிக்கப்பட்டிருந்தாலும், அது சிறைவாசமாகவே அவளுக்குத் தெரிந்தது. தெரிவதென்ன? சிறைவாசமேதான்! சோழகன் அவளைச் சுளையோடு விழுங்கவே இந்தத்திட்டம் தீட்டி வரலானான. ஆனால், அந்தத் திட்டம் இன்னும் முழுமை பெறவில்லை. தஞ்சைப் பேரரசன் ரகுநாதனைப் பற்றிய பயம் அவனுக்கில்லை. ஆனால், அபரஞ்சி செஞ்சி கிருஷ்ணப்பனுடைய புதல்வியாயிற்றே! அவனுடைய பகையைச் சம்பாதிக்க நேரிடுமே! பிறகு பலமற்ற நிலையில் போய்விட நேரிடும் என்றுதான் அஞ்சினான். அந்த அஞ்சுதலுக்கு இன்னும் சரியான ஆறுதல் கிடைக்கவில்லை.

ஆகவே அபரஞ்சிக்குப் போதுமான சமாதானத்தை அளித்துவந்தான்.

அன்றைக்குப்பார்த்து அபரஞ்சி பெரிதாக அமர்க்களப்படுத்தத் தொடங்கிவிட்டாள். உணவு உண்ணவில்லை. தோழியர்களை யெல்லாம் கண்டபடி வசைமொழிந்தாள். ஒரு குறை அழுதும்விட்டாள். அவளுக்குக் கணவன் ரகுநாதன் பைத்தியம் பிடித்துவிட்டது; இருக்காதா? இதயத்தோடு வைத்துப் பூசித்தாளே! இருக்காதா? எண்ணத்தோடு எண்ணமாக வைத்து இரண்டறக் கலந்துவிட்டாளே! இருக்காதா? நெஞ்சில் தெய்வ மலராக அரும்பி மணம்வீசும் பேரரசனுயிற்றே ரகுநாதன்! இருக்காதா?

மனம் பித்துக்கொண்டதில் குற்றமென்ன இருக்க முடியும்? அதிலும் திக்குத்தெரியாத காடுபோன்றதீவுக் கோட்டையுள்,சிறைவாசம் போலக் காலம் தள்ளிவரும் நிலையைக் கண்ட எவள் நெஞ்சம்தான் அமைதி காண முடியும்?

கேள்விப்பட்ட சோழகன் அங்கு வந்து சேர்ந்தான். அவனைக் கண்டதும் அபரஞ்சி ஆவேசம் கொண்டவளைப்போல நோக்கி, அதிகாரக் குரலுடன் கேட்டாள்:

"சோழிய அரசே! நீங்கள் எந்தத் திட்டத்தின் கீழ் என்னை இவ்வாறு சாக்குபோக்குகள் சொல்லிச் சிறை வைத்திருக்கிறீர்கள்?"

சோழகன் கலகலவென்று சிரித்தான்.

"தஞ்சை மகாராணியைச் சிறைவைப்பதா? கப்பம் கொடுத்தல்லவோ தஞ்சைக்கு அனுப்பிவைக்கவேண்டும். தஞ்சை மன்னரின் பதில் வரட்டுமே என்றுதானிருக்கிறேன்!"

"அவரிடமிருந்து என்ன பதில் வரவேண்டி இருக்கிறது?"

"மீண்டும் மீண்டும் விளக்கிச் சொல்லவேண்டுமா? மகாராணியாரே! உங்களை என்னுடனுப்பிவைத்தது போலவே, அழைத்துச் செல்லவும் அவர் இங்கு வர வேண்டும்!"

"அவர் இங்கு வருவதா?"

"ஏன் வரக்கூடாதா? வந்தால் முதலைகள் விழுங்கி விடுமா?"

"அவரைப்பற்றி உங்களுக்குத் தெரியாது. இந்த முதலைகளை யெல்லாம் ஒரே வாயால் விழுங்கி விடுவார்!"

"திமிங்கலமோ?"

"இந்த அலட்சியம் செஞ்சியில் எங்கே போயிற்று? ஒரு பேடிகூட இப்படிப் பேசமாட்டான்!"

"வாய் நீளுகிறது!"

"இல்லை உங்களுக்குக் காலம் நெருங்குகிறது!"

"அந்தக் காலம் வரட்டும்! அப்போது நானே உன்னை நெருங்கிவிடுகிறேன்!"

சோழகன் இவ்வாறு கூறியதும் அவனுடைய உள்நோக்கம் நன்றாகவே புரிந்துவிட்டது அபரஞ்சிக்கு! அவள் "அட பாதகா!" என்று வாய் பிளந்து அரற்றினாள். கொஞ்சமும் லட்சியம் செய்யாத சோழகன், கடகடவென்று சிரித்துக்கொண்டே அவ்விடத்தைவிட்டகன்றான். அப்போது பார்த்து ஒரு சேவகன் ஓடோடிவந்து "அரசே! செஞ்சியிலிருந்து ஸ்ரீ. ஸ்ரீ. ஸ்ரீ. அப்பய்ய சாஸ்திரிகள் வந்திருக்கிறார்!" என்று அறிவித்தான்.

முதலில் பொறி கலங்கினாலும் பிறகு நிலையைத் தேற்றிக்கொண்டு ஓடோடிச்சென்று வரவேற்கலானான். சாஸ்திரிகளும் சகலகலா சிரிப்புடன், அரண்மனையில் நுழைந்தார்.

முதலில் சிரமப்பரிகாரங்கள் தேவைப்பட்டன. அப்பய்ய சாஸ்திரிகளுக்குத் தீவுக்கோட்டையே பணி விடை செய்ய முனைந்துவிட்டது.

இதனைக் கண்ட சாஸ்திரிகளுக்கு உச்சிக் குளிர்ந்துவிட்டது.

'தனக்குப் பொருத்தமானவன் தீவுக்கோட்டையி லிருக்க நாம் செஞ்சியில் வாடி வதங்கினோமே' என்ற எண்ணமே அந்த உச்சிக்கும் மேலோங்கி எழுந்து நின் றது. 'சந்திரகுப்தனை எங்கெங்கோ தேடியலைந்தோமே! இதோ இருக்கிறானே! அடடா! இத்தனை நாட்கள் எத்தனை முட்டாள்தனமாகக் காலம் கடத்திவிட்டோம்! இந்நேரம் அந்த கோவிந்த தீட்சிதனை இருக்குமிடம் தெரியாமல் நொறுக்கிவிட்டிருக்கலாமே! இப்போது மட்டுமென்ன, காலமா தாழ்ந்துவிட்டது?'

ஒரு நொடியில் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி, எட்டாத கோட்டை கட்டி வாயெல்லாம் பற்களாகச் சிரித்தார். அவருடைய அந்தச் சிரிப்பு, சோழகனுக்குப் புளகத்தையே உண்டுபண்ணியது.

"சுவாமி! இப்படித் திடீரென்று வருகை தந்து விட்டீர்களே! அறிவித்திருக்கக் கூடாதா?"

"கூடாது! தெய்வ தரிசனம் அறிவித்துக்கிடைப்ப தில்லை!"

"உண்மை சுவாமி! முற்றிலும் உண்மை! செஞ்சி அரசர் நலமா?"

"நலம்தான்! சோழகனே! நீ நலமா? அபரஞ்சி நலமா?"

"நான் நலமே! அபரஞ்சியும் நலம்தான்!" சோழனுக்கு முகம் ஒருவாறு கோணியது. இதனைக் குறிப்பால் உணர்ந்துகொண்டார் அப்பய்ய சாஸ்திரிகள்.

"ஏன்? என்ன ஒருமாதிரி முகம் சுளிக்கிறாய்?"

"தங்களுக்குத் தெரியாதது என்ன சுவாமி! என்ன திமிர் இருந்தால், அந்த ரகுநாதன் ஒரு பெண்ணிடம் கப்பத்தை செலுத்த ஆணையிட்டிருப்பான்! அதுவும் நான் காத...

முடிக்கவில்லை. சாஸ்திரிகள் முடித்தார்:

"சொல் சோழகனே! நீ காதலித்த ஒரு பெண்ணுக்கு நீயே கப்பம் செலுத்துவதா? அவமானம்தான்! பெருத்த அவமானம்தான்!"

"அந்த அவமானத்துக்கு ஒரு முடிவு தெரியாமல் தான் தவித்துக்கொண்டிருக்கிறேன்!"

"அதற்காகத்தான் நான் வந்திருக்கிறேனே! இப்போது தெரிகிறதா? தெய்வம் ஆபத்தில்தான் திடீர் தரிசனமளிக்குமென்று?"

"தெரிகிறது சுவாமி!"

இச்சமயத்தில்—

அமைச்சர் ஓடோடி வந்தார். அவர் அறிவித்த செய்தி இதுதான். "அரசே! தஞ்சையிலிருந்து தூதுவர்கள் வந்திருக்கிறார்கள்!"

சோழகன் என்ன, அப்பய்ய சாஸ்திரிகளே அதிர்ச்சி கண்டார்.

25

# சங்கீத கோபம்

தஞ்சை அரண்மனை முழுவதும் ஒரே வீணு கான ரசனையில் மூழ்கியவர்களுடைய விமர்சனக் குரல்கள்தாம் எதிரொலித்துக் கொண்டிருந்தன. என்றுமில்லாமல் மன்னர் இன்று புதிய முறையில், வேக கதியில் வீணையை மீட்டிக்கொண்டிருக்கிருராம். இதுபற்றியே பலரும் பேசத் தொடங்கினர்.

அரண்மனைப் பளிங்குக் கூடத்துச் சித்திராசனத்தில் அமர்ந்துகொண்டு தஞ்சை மன்னன் ரகுநாத போஜன், வீணையை மீட்டிக்கொண்டிருந்தான். அந்த மீட்டலில் ஒரு புதியலாகவம் தென்பட்டது. அருகே அமர்ந்து செவிசாய்த்துக்கொண்டிருந்த பட்டத்தரசி கலாவதிதேவியும் கூட வியந்துபோனுள். இது என்ன இப்படித் தாறுமாருக வக்கிரப் பிடிகொண்டு வாசிக்கிருரே! எந்த ராகமென்று உறுதியாகச் சொல்ல முடியாத அளவுக்கு வாசிக்கிருரே? ஒரே வெறி கொண்ட நிலையில் தந்திகளை மீட்டி, மனம்போன போக்கில் கற்பனைகளைச் செலுத்தி, பன்னிரண்டு சுரங்களையும் ஏககாலத்தில் மாற்றி வாசிக்கும் பாணி மிகப் புதியதாகவே தென்பட்டது. அத்துடன் மேலும் இரண்டு சுரங்கள் புதியனவாக வந்து ஒலித்தன.

இத்தனையும் தொலைவில் சாளரத்து வழியாகக் கவனித்துக் கொண்டிருந்த சகலகலா வல்லுநர்—கோவிந்த தீட்சிதர் பிரமித்துப்போனார். இப்படி ஓர் அசுர சாதனையா? மனத்தில் இருக்கும் வேகவெறி இப்படி வீணையின் மூலம் குரல் எழுப்புவதா?

உடனே ஆளை யனுப்பி மகன் *வேங்கிடமகியை அழைத்து வரும்படிப் பணித்தார் கோவிந்த தீட்சிதர். வேங்கிடமகி இசைப் பேரறிஞர்.

சற்றைக்கெல்லாம் குமாரர் வேங்கிடமகி அங்கே வந்தார். மகனைக்கண்ட கோவிந்த தீட்சிதர் மெல்ல சமிக்ஞை காட்டி அருகே அழைத்துச் சொன்னார்.

''மகனே! மன்னன் ரகுநாதன் மனவேதனையால் இசையைப் பிழிந்தெடுக்கிறான். இப்படி ஒரு வாசிப்பு —அசுர சாதனையை நானே கண்டதில்லை. கேள்! இது என்ன ராகம்? பாஷாங்கமா? உபாங்கமா? வர்ஜமா? வக்கிரமா? ஔடதமா? ஷாடவமா? கவனி! அதோ பார்! இரண்டு மத்தியமும் ஏக காலத்தில் மிதக்கின்றன! பன்னிரண்டு சுரங்களுடன் வேறு இரண்டு சுரங்களும் ஒலிப்பதாக உணர்கிறேன். இத்தனையையும் ஒன்றுகூட்டி ஒரு நிலையில் வீணை வாசிப்பது என்பது குதிரைக் கொம்பு! அதோ, ரகுநாதன் அதனை உருவாக்குகிறான்!''

தந்தையின் சொற்களை ஒரு செவியிலும், ரகுநாதனுடைய வீணை வாசிப்பை மறு செவியிலும் உட்கொண்ட வேங்கிடமகி அயர்ந்து, அதிர்ந்து அப்படியே சிலையாக நின்றுவிட்டார். அவரே அறியாத—கேள்விப்படாத முறையில் அந்த வீணை வாசிப்பு

* இன்றைய இசைமுறை வேங்கிடமகியால் திருத்தம் பெற்றதுதான்.

இருந்தது. அடடா! அந்த வாசிப்பில், இசையைக் கண்டுபிடித்தவனுடைய பிரமிப்பே அடங்கிக் காணப் பட்டது.

வெகு நேரம்வரை தந்தையும், மகனுமாக சாளரத் துப் புறமாக நின்று இசைப் பிரயோகத்தை ஆய்ந்து கொண்டிருந்தனர். இத்தனைக்கும் கோவிந்த தீட்சித ருடைய மாணவன்தான் ரகுநாத நாயக்கன்! அதனு லென்ன? கற்பனை மீறிய ஒன்ருக இருக்க முடியாதா? இருக்கக்கூடாதா?

ஆமாம்! ரகுநாதன் ஏன் என்றுமில்லாமல் இன்று இவ்வாருக வீணையில் தன்னுடைய உணர்ச்சிகளைக் கொட்டவேண்டும்? உடலில் பரவிப் பாய்ந்தோடும் அத்தனை நரம்புகளையும், வீணையின் ஏழு நரம்புகளில் ஐக்கியம்படுத்திவிட்டானே? இதய உணர்ச்சிகளைப் பிழியாகப் பிழிந்து நாதமயமாக்கிக் கொண்டிருக்கி ருனே!

வேங்கடமகிக்கு இதன் உண்மை புரியாவிட்டா லும், மகாமேதையான கோவிந்த தீட்சிதர்க்குமா புரி படாமல் போய்விடும்? அவர் தமக்குள் தாமே மெல்லச் சிரித்துக்கொண்டார். எல்லாம் அபரஞ்சியின் பிரிவாற் ருமையால் வந்த வினைச்சுழல்!

மகன் வேங்கிடமகியைப் போய்விடும்படிக் கண் களால் சமிக்ஞை செய்தார். தந்தையின் கட்டளைப்படி மகன் சென்றுவிட்டார். ஆயினும் கோவிந்த தீட்சிதர் அந்தச் சாரளத்தை விட்டு நகர்ந்தாரில்லை.

தஞ்சை மாமன்னன் விஜய ரகுநாத போஜனுடைய வீணை வாசிப்பில் தன்னைப் பறிகொடுத்தவளாய் அருகே அமர்ந்திருந்த பட்டத்தரசி கலாவதி தேவிக்கு

இப்போது ரசனை மறைந்து மருட்சியே ஏற்பட்டது! என்ன காரணத்தை முன்னிட்டு இவர் இப்படி ராக மில்லா ராகமாக வீணையை வாசிக்கவேண்டும்? எல்லாச் சுரங்களையும் ஒலிமாலையாகப் புனைகிருரே! அப்போதும் அது ஓர் அபசுரமாகத் தட்டவேண்டுமே!

கலாவதி காரணம் புரியாமல் திருதிருவென்று விழித்தாள். மேலும் மேலும் விழித்தாள். ரகுநாத னுடைய முகம் குருதியாகச் சிவந்து, கொன்றைப் பூப்போலக் காட்சி தந்தது. கலாவதிக்கு எழுந்து சென்றுவிடலாமாவென்றும் தோன்றியது. ஆயினும் அவளால் அப்படி எழ முடியவில்லை. வீணையின் வாசிப்பு வேகம் கணத்துக்குக் கணம் அதிகரித்துக் கொண்டே இருந்தது.

பட்டத்தரசி கலாவதியின் நிலைமையைக் கண்ட கோவிந்த தீட்சதருக்குச் சிரிப்பே மேலிட்டது. மெல்லக் கனைத்தார். கலாவதி திரும்பிப் பார்த்தாள். கண்சாடை மூலம் எழுந்து வரும்படி அழைத்தார். கலாவதியும் மெல்ல எழுந்து பாதச் சிலம்பின் கிண்கிணியோசை கேட்காமல் மெல்ல-மெல்ல நடந்து ஆசானும் அமைச் சருமான தீட்சிதரை நாடிச் சென்ருள்.

பூஞ்சை மனம் படைத்த அவளுடைய மெல்லி தான ஒற்றைநாடி யுடல் நடுக்கம் கண்டிருந்தது.

"கலாவதி! உடல் ஏன் நடுங்குகிறது?"—தீட்சிதர் ஒன்றுமே புரியாதவகையிலே மெல்லிய குரலில் கேட்டார்.

"அதுதான் எனக்கே புரியவில்லை சுவாமி!"

கலாவதியின் குரலிலும் பொடி நடுக்கம்.

"சங்கீதம் உடலைத் தேற்றி உற்சாக மூட்டும் என்றுதான் சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. ஆனால், அது பயமுறுத்தவும் செய்யும் என்பதை இப்போது தான் என்னால் காணமுடிகிறது; உணர முடிகிறது!"

"எனக்கும் இதுதான் சுவாமி வியப்பாக இருக் கிறது!"

"உனக்கும் சங்கீதம் தெரியும்தானே?"

"ஓரளவு தெரியும் சுவாமி! உங்களுக்கு முன்னால் பேரளவு தெரியும் என்று என்னால் எப்படிச் சொல்ல முடியும்?"

"உன் அடக்கத்தை மெச்சுகிறேன், பட்டத்தரசி! ஆமாம்: இது என்ன ராகம் என்று உன்னால் சொல்ல முடியுமா?"

"ஏன்? கண்டுபிடிகக முடியவில்லையா?"

கலாவதி சிரித்தாள்.

"ஏன் சிரிக்கிறாய் கலாவதி?"

அவள் மேலும் சற்றே ஓசையிட்டுச் சிரித்தாள். பிறகு சொன்னாள். "சுவாமி! கோபித்துக் கொள்ள வேண்டாம். இது தங்களுக்கே தெரியாத ஒன்று! எனக்கு மட்டும் எவ்வாறு தெரியும்?"

தீட்சிதர் அயர்ந்து போனார். உண்மையிலும் அவ ருக்குத் தெரியாத ஒன்றுதானே? எல்லாச் சுரங்களை யும் இணைத்து ஆலத்தியும், தானமும் வாசித்துக் கொண்டிருந்தால் இதனை என்ன ராகம் என்று யாரால் சொல்ல முடியும்? வேண்டுமானால் 'ரகுநாத ராகம்' என்று சொல்லிவிட்டுப் போகலாம்.

தீட்சிதருடைய விழிப்பைக் கண்டு, கவனத்தை வேற்றுத் திசையில் திருப்ப நினைத்த பட்டத்தரசி கலாவதி, "சுவாமி! என்றுமில்லாமல் இன்று மன்னர் இப்படிச் சங்கீத கோபம் கொள்வானேன்?" என்றாள் அடக்கமாக.

தீட்சிதர் பொருளுடன் கூடிய ஒரு புன்னகையுடன் "இதுவா? அபரஞ்சி ராகத்தின் புதிய அனுசுரங்கள்! ஆரோகணம்: பிரிவாற்றுமை; அவரோகணம்: நம்பிக்கைத் துரோகம். எல்லாவற்றையும் பிறகு விளக்குகிறேன் கலாவதி!" என்று கூறி முடிப்பதற்கும், தஞ்சை மன்னன் ரகுநாத நாயக்கனுடைய வீணை வாசிப்பிலிருந்து ஒரு தந்தி படீரென அறுந்து தெறிப்பதற்கும் சரியாக இருந்தது. இந்தச் சமயம் பார்த்துத்தான், துணைத்தளபதி கன்னியப்பன் ஓடி வந்து தீட்சிதரை வணங்கி நின்றான்- "சுவாமி! தீவுக் கோட்டைக்குச் சென்ற தூதுவர்கள் திரும்பி இருக்கிறார்கள்!"

தீட்சிதரும், கலாவதியும் திகைப்பும் வியப்புமாக வெளியேறினர்.

26

# அபரஞ்சி ராகம்

வீணையின் தந்தி அறுபட்ட மறு கணமே பெரிதாகப் பெய்து கொண்டிருந்த இனி மையான ஒலிமழை ஓய்ந்துவிட்டது. அமைதி எங்கும் நிலவியது. ரகுநாத நாயக்கன் இன்னும் கண்திறவாம லேயே இருந்தான். அவனுடைய இதயமும், நாடி நரம்புகளும் அமைதிபெற பல கணங்கள் பிடித்தன. அன்புக்கும் ஆசைக்கும் உரிய அபரஞ்சியின் இழப்பை, அவனால் ஏற்றுச் சமாதானம் அடைய முடியவில்லை. 'எப்படியும் அபரஞ்சியை இழந்து விடப்போகிறோம்' என்ற மனப்போராட்டமே நாளுக்கு நாள் மேலோங்கியது. போர் மூளப் போவது திண்ணம். தீவுக்கோட்டை துகளாகப்போவது உறுதி. ஆனால் அபரஞ்சி? அவளை வைத்துச் சூதாடினால்தான் போருக்கு இலகுவான காரணம் பிறக்கும் என்று தெரிந்து ஆடிய ஆட்டத்தில் அவள் துன்பியல் பாத்திரமாகத்தானே போகமுடியும்?

இவ்வாறெல்லாம் நினைத்த ரகுநாதனுக்கு நேற் றிரவு கனவு பெரிதாகச் சோதித்து விட்டது. இருபது நாழிகைத் தூக்கத்திலும் அபரஞ்சியே காட்சி தந்தாள். ஒரு துன்பமான கனவாக அது இருந்தது.

பொழுது விடிந்து இரண்டு மூன்று நாழிகைகள் மறைந்தும், கண்ட கனவு மறையவில்லை. கொண்ட அபரஞ்சியின் நினைவு இதயத்தை தலைவிரித்தாடியது. அது மன அமைதியைத் தேட வீணையை நாடியது. ஆனால் பிறந்ததோ, சங்கீத கோபம்.

ஆஃகா! அந்தக் கோபத்தால் ஏற்பட்ட நன்மை எத்தனை பெரிதாக இருந்தது! கோபத்தால் நன்மை ஏற்படுவதா? இது என்ன விந்தை? கோபம் குடியைக் கெடுக்கும் எனபார்களே! ஆனால், இங்கே அது கலையை வளர்க்கச் செய்துவிட்டது.

தஞ்சைப் பூபதி ரகுநாத நாயக்கனுடைய சினப் பொறியால்—தீவுக்கோட்டையான் அபரஞ்சியை வைத்துக்கொண்டு சூதாடப்போகிறான் என்று எதிர்பார்த்தது நடக்கப்போகிறது என்று தெரிய வந்தபோது ஏற்பட்ட கோபக்கனலால் பிறந்த இசைத்தீயில், எத்தனை எத்தனை சங்கீதப் பொறிகள்! செவிசாய்த்த வேங்கிடமகிக்கு அது பெரிய சிந்தனைக் கிளர்ச்சியை மூளச்செய்துவிட்டது; அந்தச் சிந்தனைப் புயல்மட்டும் அன்று ஏற்படாமல் போயிருந்தால், இன்று நமக்கு எழுபத்திரண்டு மேள கர்த்தாக்களும், எத்தனையோ பாஷாங்க ராகங்களும், வக்கிரப் புதிய அபூர்வ ராகங்களும் கிடைத்திருக்க முடியாமல் போயிருக்குமே!

வீணையைத் தரையில் வைத்துவிட்டு மெல்ல எழுந்தான் ரகுநாத போஜன். அவனுடைய கண்கள் செம்மலராய் மலர்ந்து காணப்பட்டன. பாதச்சிலம்பு கீதமிசைக்க அங்கே அப்போது வந்தாள் பட்டத்தரசி கலாவதி தேவி.

"பிரபோ! உணவு தயாராக இருக்கிறது. வாருங்கள்!" வீணையிலும் இனிதான குரல் படைத்த கலாவதி அன்புடன் அழைத்தாள். அப்படி அழைத்து ஆறுதல் கூறும்படி அனுப்பிவைத்தவர் மகாமேதை யான சகலகலா வல்லுநர் கோவிந்த தீட்சிதர்தான். ஆயினும் தீவுக்கோட்டைச் செய்தியைக் கூற வேண் டாம் என்று கண்டிப்பாக உத்தரவிட்டிருந்தார். கலாவதி அதுபற்றி வாய்திறந்தாளில்லை.

முன்னே கலாவதி செல்ல, பின்னே உத்தரீயத்தை எடுத்துப் போர்த்திக்கொண்டு ரகுநாதன் பதுமை போல நடந்தான். அந்த நடையிலும் ஒரு லயம்! மறைந்திருந்து கவனித்த அரண்மனைக் கண்களில்தாம் எத்துணை வியப்பு! எத்துணை திகைப்பு!

தங்கத்தால் செய்த வாழையிலைத்தட்டை வைத்து, பட்டத்தரசி கலாவதி தேவியே பரிமாறினாள். அறு சுவையுண்டி ஆனந்தமாக இருந்தது. எனினும், ரகு நாதனை அவை மயக்கித் தன்னிலைக்குக் கொண்டுவர வேண்டுமே!

ஏதோ கடமைக்கு உண்பவனாகவே தெரிந்தான் தஞ்சை மன்னன். அவனை மேலும் கூறி உண்ண வைக்கத் தக்க துணிவும் கலாவதியிடம் கிடையாது. என்றாலும் அடக்கமாக வாயால் சொல்லாமல் மேலும் முனைந்து பரிமாறினாள்.

"சுவாமி! உங்களுக்கே பிடித்த மாவடுக் குழம்பு! இன்னும் கொஞ்சம் அன்னம் வைக்கட்டுமா?"— சுந்தரத் தெலுங்கில் சுகமாகக் கூறினாள். ரகுநாதன் வெறுமனே தலை யசைத்தான். "ஏன் பிரபோ என்னமோபோல் காணப்படுகிறீர்கள்?"

"..................."

"வீணை வாசிப்பு விண்ணைக் கலக்கிவிட்டது!"

அண்ணாந்து கவனித்த ரகுநாதன் இமைகளை மேலே தூக்கி "உம்" என்று ஓசை யெழுப்பினான். அது 'அப்படியா?' என்று கேட்பது போலிருந்தது.

"ஆமாம், பிரபோ! தேவர்கள் கூட அந்த வாசிப்பைக் கேட்டு அதிர்ச்சி கண்டிருப்பார்கள்!"

"அப்படி என்ன ராகம் வாசித்தேன்?"

"அதுதானே யாருக்குமே புரியவில்லை. குரு கோவிந்த தீட்சிதர் அவர்களும் புரியாமல் தவியாய்த் தவித்தார்!"

"ஓ..கோ?"

"ஆமாம்; அவருடைய சங்கீதக் குமாரர் வேங்கிட மகியவர்களே கேள்விப்பட்டு ஓடோடி வந்து வெகு நேரம் வரை நின்று கவனித்தார். அவருக்கும் என்ன ராகமென்று புரியாமல் தவித்தார். பன்னிரண்டு சுரங்களையும் ஒருங்கே தேக்கி, அபசுரமடிக்காமல் வாசித்த இந்த முறை, இசை உலகமே கண்டறியாத புதுமை என்று அவரேசொன்னாராம். இப்போதும்கூட இதே முறையை வீட்டில் வீணையை வைத்துக்கொண்டு வேங்கிடமகி அவர்கள் ஆராய்ந்து வருகிறாராம்! இசை ஆராய்ச்சிக்கே பல புதிய கோணங்கள் தென்படுகின்றனவாம்!"

"ஆச்சரியமாக இருக்கிறது!"

"உங்களுக்கே ஆச்சரியம்தானா!"

"இல்லை!"

''பின் என்ன ராகம் பிரபோ?''

''அதை நீ யறியவேண்டியதில்லை?'

''அப்படி யென்ருல் நானே சொல்லுகிறேன் ரகுநாதா! அந்த ராகத்துக்குப் பெயர் அபரஞ்சி!''

தெள்ளத் தெளிவாகக் கூறிக்கொண்டே உள்ளே நுழைந்தார் கோவிந்த தீட்சிதர். அவருடைய நுழைவைக் கண்ட ரகுநாதன், கை கழுவ எழுந்து கொண்டான்.

''பிரபோ!''

''போதும், கலாவதி!''

''ஏன் ரகுநாதா! வயிருர உண்ணலாமே!''

''வயிறு நிரம்பிவிட்டது, சுவாமி!''

''ரகுநாதா! தீவுக்கோட்டையிலிருந்து தூதுவர்கள் வந்திருக்கிருர்கள்!''

கை கழுவிய ரகுநாதன் பெருத்த வியப்புடன் ''வந்துவிட்டார்களா?'' என்ருன். அத்துடன் ''அபரஞ்சியும் வந்துவிட்டாளா!'' என்ருன் பெருத்த ஆர்வமுடன்.

கோவிந்த தீட்சிதர் சற்றே பொறுத்துக் கூறிஞர்:

''நீ செய்துவிட்டு வந்த காரியத்துக்கு அபரஞ்சியை எதிர்பார்க்கலாமா? மறந்துவிட வேண்டியதுதான்!''

''என்ன சொல்லுகிறீர்கள், சுவாமி!''

''அபரஞ்சியை அழைத்துச்செல்ல வேண்டுமாஞல், இந்தக் கோவிந்த தீட்சிதன் நேரில் வரவேண்டுமாம்.

இப்படி அபரஞ்சியே சொல்வதாகத் தீவுக் கோட்டைச் சோழகன் சொன்னாும்!"

"நீங்கள் நம்புகிறீர்களா, சுவாமி!"

"நான் நம்புவதாவது? அங்கே இப்போது அப்பய்ய சாஸ்திரி இருக்கிறான் ரகுநாதா!"

இதைக் கேட்டதும் பேயோலம்போல இடிநகை புரிந்தான் ரகுநாத போஜன். அவனுடைய முகம் பயங்கரமாக மாறியது. அவன் எதிர்பாராதது அப்பய்ய சாஸ்திரிகள் தீவுக்கோட்டைக்குச் சென்றிருப்பது. அடுத்து பூதாகாரமான குரலெழுப்பிக் கூறினான். "சுவாமி! தாங்கள் நேரில் சென்றால் 'அபரஞ்சியுடன் சோழகனுடைய தலையும் வந்தாக வேண்டும்' என்று ஓலையனுப்புங்கள்."

சற்றே அமைதியாக—பொறுமையாக இருந்தார் கோவிந்த தீட்சிதர்.

"ஏன் குருசுவாமி, மௌனம்?"

மீண்டும் பொறுமையாக இருந்தார் தீட்சிதர்.

சற்றைக்கெல்லாம்...

போர் முரசும் ஒலிப்பது மெல்லக் கேட்டது.

"சுவாமி.........?"

"அதோ கேள் ரகுநாதா! அதுதான் என் பதில்!"

"என்ன? போர் முரசம்!"

"ஆமாம்; நான்தான் முழங்க உத்தரவு பணித்தேன். நாளையே தீவுக்கோட்டையை நோக்கிப் போர்ப் பயணம்! போருக்குத் தலைமை தாங்கிச் செல்பவனும் நான்தான். நீ தஞ்சையிலேயே இருக்கலாம்!"

"இல்லை! சோழகனை நானே பழிவாங்கவேண்டும்!"

'அவன் எதிர்ப்பார்ப்பது என்னை!"

"ஆனால் சபதம் எடுத்தவன் நான்! சுவாமி! அந்த அப்பய்ய சாஸ்திரிகளின் மண்டையில் உங்கள் திருப் பாதம் படவேண்டும். சோழகனுடைய சிரத்தை என் வீரவாள் கொய்யவேண்டும். இதன்மூலம் கொஞ்ச நஞ்சமிருக்கும் சிறு பகைகள் ஒழியட்டும்!"

"ஆனால் அபரஞ்சி!"

"அபரஞ்சி......?"

கண்களை மூடி சற்றே சிந்தித்த ரகுநாதன், "அபரஞ்சி!" என்று புயலாக அலறினான். அவனுடைய அலறலை மீறிக்கொண்டு போர் முரசும் அலறியது.

**27**



# "ரகுநாதா! ரகுநாதா!"

?வுக்கோட்டைக்கு ஏதோ சாபந்தான் நெருங்கிக்கொண்டு வருவதாக நினைத்தனர் சோழியமக்கள். ஆண்டாண்டுகாலப்பெருமை கொண்ட அந்த மக்கள், ஏதோ புலிப் பெருமையை அந்தத் தீவுக்குள்ளிருந்து இதுகாறும் பேசிக்கொண்டிருந்தார்கள். அந்தப் பேச்சில்-அதனில் வீசிய பெருமையெனும் சிறிய மூச்சில் ஏதோ புத்தின்பமும் கண்டு வந்தனர். இப்போது அதற்கும் துன்பம் வந்து விட்டது. தென்னாட்டுப் போஜமகாராஜனாய் விளங்கும் ரகுநாத நாயக்கனையா பகைத்துக் கொள்வது? என்ன மடமை இந்தச் சோழகனுக்கு? என்ன செய்ய? பன்றிகளுடன் சேர்ந்த கன்றாகி விட்டான் என்று சொல்ல முடியாவிட்டாலும், சொல்ல நேரிடுகிறது. ஏனென்றால், ஏற்கெனவே சோழகன் ஒரு எருமைக்குச் சமமாகவே வாழ்ந்து வந்திருக்கிறான். அதுவும் இந்தச் 'செஞ்சிச் சேர்க்கை'யால் என்று பலரும் சொல்லுகிறார்கள்! எது எப்படியோ! சோழகன் ஓர் பெண் வெறியன்! அதுவே அவனைப் பேயனாகவும், நாயனாகவும் மாற்றிவிட்டது. இப்போது போர் மூளைத்து இருக்கிறது. அபரஞ்சிதேவி எந்த நேரத்தில் தீவுக் கோட்டைக்குள் காலெடுத்து வைத்தாளோ, அன்றே அஷ்டமத்தில் இவனுக்குச் சனிபகவான் வந்து அமர்ந்துவிட்டானே!

எந்த நேரத்திலும் போர் முரசம் முழங்கலாம் என்று எதிர்பார்த்தனர் பலரும். எந்த நேரத்தில் போர் முரசம் கொட்டலாம் என்று எதிர்பார்த்தான் தீவுக் கோட்டை அரசன் சோழகன். செஞ்சி நோக்கி அவன் அனுப்பிய தூதில் அந்த எதிர்பார்ப்பு அடங்கி இருந்தது.

அறிஞர்ப் பெருமகனாராய் மதிக்கப் பெற்ற அப்பய்ய சாஸ்திரிகள் கூறிய ஆலோசனைகள் அனைத்தையும் ஒன்றன்பின் ஒன்ருகச் சிந்தித்து அசைபோட்டுப் பார்த்துக் கொண்டான். சோழகன் அடடா! ஆலோசனைப்படி வெற்றி கிடைத்துவிட்டால்... ஆ.்.கா! அழகிய தமிழகத்துடன் அழகே பரிசாய் வந்து கிடைத்தது போன்ற அபரஞ்சி! செஞ்சி அரசன் பிறகு இஞ்சிப் பச்சடிக்குச் சமம்! அப்பய்ய சாஸ்திரிகள்தாம் அந்த ரங்க ஆலோசகக் குரவர்; ஆனல், அவருடைய கனவு?

'கோவிந்த தீட்சிதர் சமாதியின் பேரில்தான் தம்முடைய மாளிகை எழவேண்டும்' என்கிருரே, இது என்ன புதிய சபதம்! இது ஒரு விதமான சாணக்கியம் போலும்!

பெருத்த சிந்தனையுடன் தனிமையில் அமர்ந்திருந்த சோழகன் மெல்ல எழுந்தான். அவனுடைய நினைவும், உணர்வுகளும் அபரஞ்சியையே சுற்றிச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்தன.

மாலை சரிந்து இரவு நன்ருகவே கவிந்துகொண்டது. வளர்பிறை நிலவும் வானத்தில் வந்து உதயமானது. போதை மயக்கம், என்றும்போலவே அன்றும் சோழகனுடைய நெற்றியைத் தட்டிப் பார்த்தது. திறந்து விடுவது என்பது அத்தனை எளிதான

காரியமா? ஒருபுறம் பெருமன்னன் ரகுநாதன். அவனுடைய ஆசை மனைவி அவள்!..கிடக்கிறுன் அவன்... போரில், 'ஒன்று அவன், இல்லை நான்' என்று பார்த்து விடலாம். ஆனுல், கிருஷ்ணப்ப நாயக்கன்? துணை நிற்கும் நண்பனுயிற்றே! அவனுடைய திருப்புதல்வி யல்லவோ அபரஞ்சி...!

"அபரஞ்சி...! நீயாக மட்டும் ஒப்புக்கொண்டால்..." — முணுமுணுத்தான். முடிகிற காரியமா? வீணை எங்கே? வெறுங்கட்டை எங்கே? அபரஞ்சி ஓர் இனிய ராகமாயிற்றே! அப்படியென்றல்...ரகுநாதன் எல்லா அமைதியும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற இலக்கணம் நிறைந்த வீணையாயிற்றே! இது பண்டைப் பண்பாட்டைமறந்த சோழகனுக்கு எவ்வாறு தெரியும்?

நேரே கோட்டையை விட்டு வெளியே வந்தான். அரசனுடைய போக்கை நன்கு உணர்ந்தவர்கள் காவல் வீரர்கள். எனவே, வெறுமனே நின்று கவனித்தனர். கோட்டைக் கதவங்கள் மீண்டும் சாத்தப்பட்டன. ஆனுல், திட்டி வாசல்கள் மட்டும் மரியாதைக்குத் திறக்கப்பட்டன.

கோட்டையைச் சுற்றிக் கொள்ளிடநதி அமைதியாகச் சென்று கடலுடன் சங்கமமாகிக் கொண்டிருந்தது. அலைமோதும் கண்களுடன் நோக்கினுன். கிழக்கே கடல் 'சோ' வென்று இரைந்துகொண்டிருந்தது.

நீரரணுக விளங்கிய கொள்ளிடத்தை உற்றுக் கவனித்தான். அவனுடைய மனத்தின் 'சோ'வென்ற ஓசை அதில் எதிரொலித்தது. அந்த எதிரொலி அங்கும் இங்குமாக உலவிக்கொண்டிருந்த ஆயிரக்

கணக்கான முதலைகளுக்குக் கேட்க வேண்டுமே! எத்தனை முதலைகள்—சிறிதும் பெரிதுமாக அந்த நீரரணில் உலவிக் கொண்டிருந்தன! சில கரையோரங்களில் நீண்ட கட்டுமரங்களைப்போல் படுத்துக் கிடந்தன.

ரகுநாதனுடைய பெயர் சிந்தனையில் வந்து நின்றது. இதற்குக் காரணம் இல்லாமலில்லை. ஒரு முதலையின் பெயர் ரகுநாதன். அடுத்து தஞ்சை ரகுநாதனை நினைத்தான். இந்நேரம் தூதுவர்கள் செய்தியறிவித்திருப்பார்கள். போர் ஆயத்தங்கள் நடைபெறும்! அன்றே செஞ்சி நோக்கி அனுப்பிய தூதுவனையும் எண்ணிப் பார்த்தான். செஞ்சி அரசன் கிருஷ்ணப்ப நாயக்கனும் படைகளுடனும், சில துணைகளுடனும் புறப்பட்டிருப்பான் அல்லவா? அப்படி அவன் தீவுக் கோட்டையை வந்தடைந்ததும், அபரஞ்சி பற்றி என்ன சமாதானம் கூறமுடியும்? என்ன கூறுவது? தானே பார்த்துக் கொள்வதாகத்தான் அப்பய்ய சாஸ்திரிகள் வாக்களித்திருக்கிறரே!

சோழகன் வந்துநின்ற அந்தச்சிலகணங்களுக்குள் முதலைகள் வரிசை வரிசையாக நெருங்கி வந்து குழைந்தன. அவற்றைக் கண்ட சோழகன், "ரகுநாதா!" என்று குரல் கொடுத்தான். பெருத்த நீண்ட ஒரு முதலை தொலைவிலிருந்து விரைவாக வந்துகொண்டிருந்தது. அதற்குச் சோழகன் செல்லமாக இட்ட பெயர்தான் ரகுநாதன்!

ரகுநாதன் பெயரைத் தாங்கிய முதலை வந்து நின்றதும், கொஞ்சமும் தாமதியாமல் இறங்கி அதன்

முதுகில் ஏறிக்கொண்டான். அந்த முதலையும் படகு போல் மெதுவாக நீந்திச் சென்றது!*

ஏனைய முதலைகள் முன்னும் பின்னும், பக்கவாட்டிலுமாகச் சென்றன. நிலவு பாலாகப் பொழிந்து கொண்டிருந்தது.

இந்தப் பயங்கரமான காட்சியைக் கரையோரமாகக் கட்டப் பெற்றிருந்த எழுநிலை மாடத்திலிருந்து கண்கொட்டாமல் கவனித்து வியந்து கொண்டிருந்தாள் தஞ்சை அரசி அபரஞ்சி.

முதலைப்படகுச் சவாரியை முடித்துக்கொண்டு கோட்டை வாசலை நெருங்கியபோதுதான் அந்தச் செய்தி அவனுக்காகக் காத்திருந்தது. "ரகுநாதன் படைகளுடன் தீவுக்கோட்டையை நோக்கி வந்துகொண்டிருக்கிறுன்" என்று அமைச்சர் அறிவித்தார். அந்தச் செய்தியைக் கேட்டதும், மீண்டும் "ரகுநாதா!" என்றலறி இடிமுழக்கம் போலச் சிரித்தான். இம்முறை அவன் உண்மையான ரகுநாதனை அழைத்ததால், முதலை ரகுநாதன் மருண்டு அருகே வந்து 'திருதிரு' வென்று விழித்து நோக்கியது. சோழகன் மேலும் நகைத்தான். அந்த விதியின் நகைப்பொலி அபரஞ்சியின் செவிகளுக்கும் மெல்ல எட்டியது.

* இப்படி அவன் பலமுறை சென்ற காட்சியை நேரில் கண்டதாக 'பிமண்டோ' என்கிற போர்த்துக் கீசிய பாதிரியார் எழுதி வைத்திருக்கிருர்.

28



# காமுகன் கண்ட கனவு

“பொழுது விடிந்ததும் போர் முரசம் முழங்க லாம்; அதுவரை செய்தி ரகசியமாகவே இருக்கட்டும்!” என்று அமைச்சருக்கு உத்தரவளித்து விட்டு, நேரே அப்பய்ய சாஸ்திரிகளின் மாளிகையை நோக்கி விரைந்தான் சோழகன். வரும் பொருளுரைக் கும் அமைச்சர் பக்கத்திலிருந்தும், ஆலோசிக்காமல் அலட்சியமாகச் செல்கிறனே! அமைச்சர் தலையசைத் துக்கொண்டார். அது அழிவு காலத்தை அறிவிப்பது போலத் தெரிந்தது.

இரவின் நிம்மதியில் தூக்கக் கன்னியின் துணை யோடு ஐக்கியமாகிச் சுகானுபவம் கண்டிருந்த அப்பய்ய சாஸ்திரிகள், கதவுகள் தட்டப்படும் ஓசை யைக் கேட்டுக் கண்விழித்தார். இந்த நேரத்தில் தன்னைவந்து எழுப்பும் துணிவு அரசனுக்கே இருக்கும் என்ற சிந்தனையுடன கதவுகளைத் திறந்தார். சோழகன் வேகமாக உள்ளே நுழைந்து, “சுவாமி! ரகுநாதன் படை திரட்டிக்கொண்டு வருகிறனும்!” என்றுன் துடிப்புடன். “இது நாம் எதிர்பார்த்ததுதானே சோழ கனே?” என்றார் சாஸ்திரிகள், அமைதியாக.

“சுவாமி! இன்னும் செஞ்சி கிருஷ்ணப்பனைக் காணோமே!”

"ஏன், ஐயம் கொள்கிருய் சோழகனே! இப்படி உட்கார். நான் என் திட்டத்தை இப்போது தெளிவாக விளக்குகிறேன்!" என்ருர் அப்பய்ய சாஸ்திரிகள். சோழகனும் அருகே இருந்த ஆசனத்தில் அமர்ந்தான். அவனுடைய மனம் மட்டும் அமைதி பெறவில்லை. இதனுல் ஏற்படும் நிலையை அவனுல் ஊகிக்கவே முடியவில்லை. அப்பய்ய சாஸ்திரிகள் எப்படியும் தனக்கு ஒரு மாபெரும் வெற்றியைத் தேடித்தந்துவிடு வார் என்று பரிபூரணமாக நம்பினுன். ஒரு மகதப் பேரரசை உருவாக்கிய சாணக்கியரைப் போலத் தனக்கும் ஒரு சோழப் பேரரசை மீண்டும், உருவாக்கித் தருவார் என்று அதுவரை கனவு கண்டு வந்தான். அவனுடைய கனவு நனவாகுமோ? அன்றி கனவோடு நிற்குமோ? போர் மூண்டால்தான் புலனுகும். ஆயினும், பக்கபலத்தைப் பலமாகத் தேடிக்கொண்டான். அவனுக்கு இராமாயணத்தில் சீதையின் கதாபாத்திரம் நினைவுக்கு வந்தது. அத்துடன் கிரேக்கர்கள் மூலம் கேள்விப் பட்டிருந்த திராய்நகரத்து ஹெலனின் எண்ணமும் ஊடே எழுந்தது. தமிழ்த்தென்னிலங்கையும், யவனத்திராய் நகரமும் பெண்களால்தாமே அழிந்து பட்டன! இதோ தீவுக் கோட்டை! ஏன் இது மட்டும் மாறுதலாக முடியக் கூடாது?—சோழகனுடைய நெஞ்சில் இப்படியும் ஓர் எண்ணம் எழுந்தது. அப்படி எழுந்தது குற்றமென்றும் சொல்லிவிட முடியாது.

சோழகனுடைய ஆழ்ந்த ஆலோசனையை முகக் குறிப்பால் உணர்ந்துகொண்ட அப்பய்ய சாஸ்திரிகள், தமக்குள் குறும்பாகக் குறுநகை புரிந்துகொண்டார்.

"சோழகனே! களம்பல கண்ட சோழ மரபில் வந்தவன் நீ! கங்கை வரை படைகொண்டு சென்ற கரி

காலன் உன் முன்னோன். இராசேந்திரன் உன் மரபினன். அப்பேர்ப்பட்டவன் மரபில் வந்தவன் நீ! இப்படிக் களத்துக்குக் களங்கலாமா?'

"சுவாமி! நான் கரிகாலன் இருக்கும் நிலையில் இல்லை; இராசேந்திரருடைய அரியணை பலம் பொருந்தியது. வலிமையற்ற நான் பொருத நினைப்பது மலை போன்ற ரகுநாதனுயிற்றே என்றுதான்...!"

சோழகன் மெல்ல இவ்வாறு நெஞ்சைத் திறந்து தன்னைப் பலவீனனுகக் காட்டிக்கொண்டான்.

சாஸ்திரிகள் 'கலகல' வென்று நகைத்தார்.

"ஜலக்கோட்டை நாயகனே! முதலைகளைப் படைகளாகக் கொண்டவன் நீ, மூச்சித் திணறலாமா?" கரிகாலனே, இராசேந்திரனேகூட இப்படி ஒரு படை வைத்துக் கொண்டு சரித்திரத்தை வியக்கச் செய்தார்களில்லை. நீயோ, உலகமே வியக்கும் முதலைப் படைகளைக் கொண்டிருக்கிருய்! பிற்கால வரலாற்றில் இதனைப் படிப்பவர்கள் வியப்பதோடு மட்டுமல்ல, நம்பவும் மாட்டார்கள். அத்தகைய புதுமையரசன் நீ! நிச்சயம் ரகுநாதனைப் புறங்கண்டு விடலாம். உன்னைத் தனியாகப் பொருதவிட்டு நான் வேடிக்கைப் பார்க்கமாட்டேன். கேள்! ரகுநாதன் படைகள் தீவுக் கோட்டையை முற்றுகையிடத் தொடங்கியதும், செஞ்சிப் படைகள் வரும்வரை நாம் காத்திருக்கவேண்டும். வெறும் செஞ்சிப் படைகள் மட்டும் வாரா! முகமதியப் படைகளையும் துணைக்கு அழைத்து வரும்படித் திருமுகம் விடுத்திருக்கிறேன். கிருஷ்ணப்பன் அவ்வண்ணமே செய்வான். அவன் படைகள் வந்ததும், நாம் கோட்டைக் கதவங்களைத் திறந்துவிட வேண்டி

யதுதான். நம்மிடமுள்ள சொற்பப் படைகளை விட்டுத் தாக்கச் செய்யவேண்டும். அப்போது நடுவே அகப் பட்டுக்கொண்ட நாயக்கப்படைகள் நசுங்கித் தோல்வி யடைவது உறுதி!''

இந்த மிகச் சாதாரணமான படைத் தந்திரத்தை மிகப் பெரிய அரச தந்திரமாக நினைத்துக் கொண்ட சோழகன், உள்ளுக்குள் பெரிதாக மகிழ்ந்துபோனான். பெண் வெறியனான அவனுக்கு அரசதந்திரமோ, ஆட்சி முறையோ, போர்க் கலைத்திறனோ நிறைவாக எப்படி இருக்கமுடியும்?

சாஸ்திரிகளைப் பலமாகப் பாராட்டினான். அப்பய்ய சாஸ்திரிகளும் பெரிதாக மகிழ்ந்து போனார். காமத்தில் புரளும் அறிவும், கருவம் நிறைந்த பொரு மையில் நிறையும் சிந்தையும் ஒன்று சேரும்போது அங்கே உருவாவது சூன்யம்தானே?

இருவரும் விடைபெற்றுப் படுக்கைக்குச் சென் றனர். பொழுதும் சூன்யமாக விடிந்தது. போர் முரசமும் ஆவேசமாக ஒலித்தது. கண்விழித்த தீவுக் கோட்டை மக்கள் கவனம் விழித்துக் கலக்கம் கொண் டனர், படைதிரட்டி வருபவன் ரகுநாத போஜன் என்ற செய்தியைக் கேள்விப்பட்டு!

29



# அர்ச்சுனனும் ஆலோசனையும்

ஆதவன் ஆகாயத்தை அளந்து முடிவதற்கும் நாயக்கர்ப் படைகள் கொள்ளிடக் கரையோரம் முழுவதும் கூடாரங்களை அமைத்து முடிவதற்கும்சரியாக இருந்தது. இரண்டாகப்பிரிந்து தீவுக்கோட்டையை அணைத்துக்கடலில் சங்கமமாகும் கொள்ளிடம் முழுவதும் கூடாரங்கள்! கூடாரங்களையே ஆபரணமாகக் கொண்டுவிட்டாள் கொள்ளிடக் கன்னியாள், என்று ஒரு தஞ்சைப் படைத்தளபதி கொஞ்சும் தமிழில் கவிதை பாடிப்பார்த்தான். இத்தனைக்கும் அவன் ஒரு துணைப்படைத் தளபதிதான். அவன் பெயர் கன்னியப்பன். தன் பெயரிலிருந்த கன்னியெனும் மறை பேசும் தமிழ்ச் சொல்லைக் கொள்ளிடத்துக்கு இணைத்துக் கவிதை பாடியதில் அவனுக்கோர் இன்பம் போலும்!

குடதிசை நோக்கி ஆதவன் தங்கக் குடமாக இறங்கிக் கொண்டிருந்தான். கூடாரங்களெல்லாம் நன்கு அமைவு பெற்று விளங்குகின்றனவா என்று மேற்பார்வையிட. தானைத் தலைவன் அர்ச்சுனன் புரவி மீது அமர்ந்து சென்று கவனிக்கலானான். இடையே கவிதை லயத்தில் மூழ்கிய வண்ணம் புரவி மேல் சாய்ந்து நின்றிருந்த கன்னியப்பனைக் கண்டு பெரி

தாகக் குரல் கொடுத்தான். அந்தக் குரல் அந்த நேரத்தில் அந்தப் பிராந்தியத்தைக் கலக்கியது. அத்துணைக்கு அந்த மாலைப்போது அமைதி நிறைந்து காணப்பட்டது.

தளபதியைக் கண்ட கன்னியப்பன், கவிதை நினைவிலிருந்து விடுபட்டுப் புரவியைச்செலுத்திக்கொண்டு அருகே வந்தான். கன்னியப்பனை அறிவான் அர்ச்சுனன். எனவே இருவருமாகக் கூடாரங்களைப் பார்வையிட குதிரைகளைச் செலுத்தினர். படை வீரர்கள் நல்ல ஓய்வுகொண்டு அமைதி தேடிக்கொண்டிருந்தனர். அவர்களுடைய ஆட்டமும், பாட்டமும் அப்போதைக்கு வெளிப்படவில்லை. இந்த விசித்திரமான போரைப் பற்றிப் படை வீரர்கள் அறிவர். தங்கள் அரசி அபரஞ்சியை மீட்கத் தொடுத்த போர் இது! எனவே அவர்கள் ஆட்டம் பாட்டம் ஏதுமின்றி அமைதியை வாழவைத்துக்கொண்டிருந்தனர்.

வண்ணக் கூடாரத்துள் மன்னன் ரகுநாதபோஜனும் மந்திரிப் பிரதானியாரான கோவிந்த தீட்சிதரும் ஏதோ ஒரு முக்கியமான திட்டத்தை வகுத்துக்கொண்டிருந்தனர். அந்தத் திட்டத்தில் பல உட்பொருள்கள் நிறைந்து காணப்பட்டன. போரில் சோழர்களை தோறகடிப்பது ஒரு பெரிய காரியமல்ல. அதே நேரத்தில் அபரஞ்சியை உயிருடன் மீட்க வேண்டும். மேலும் நீரரணைப் பலமாகக் கொண்டிருக்கிறன் சோழகன். ஆயிரக்கணக்கான முதலைகள்! முதலைப் படைகளை முதலில் ஒழித்தாலன்றி கோட்டையுள் நுழைய முடியாது. எனவேதான் சூட்சமமான ஒரு திட்டத்தை அவர்கள் வகுத்துக்கொண்டிருந்தனர்.

சுற்றிலும் ஒரே பொட்டல் காடாக விளங்கிய அந்த இடத்தில் அமைதி ஓர் அழகைத் தேடித்தந்து கொண்டிருந்தது. விவசாயம் முழுதும் முடிந்த காலம். மண்மாதா வானகங்கையின் வருகைக்காகத் தவமிருந்தாள். ஆனால் ரத்த ஆறு பெருக்கெடுத்து ஓடப் போகிறதே என்பதையறிந்து பூமிதேவி பெரிதாகப் புலம்பிக் கொண்டிருந்தாள். அவ்வப்போது செம்போத்துப் பறவைகள் 'சம்போ சம்போ' என்று குரலையெழுப்பிய வண்ணம் தொலைவில் தெரிந்த மாந்தோப்பை நோக்கிச் சிறகடித்துச் சென்றன. சுற்றுப்புறத்தில் சிற்சில சிற்றூர்களிருந்தன. அந்த இடத்திலிருந்து ஒரு காவதத் தொலைவு சென்றால் அந்தச் சிற்றூர்களைக் காணலாம். அந்தச் சிற்றூர் வாசிகளும் மூண்ட போரைப் பற்றிக் கொஞ்சமும் கவலைப்பட்டார்களில்லை; பயந்தார்களில்லை. அவர்களைத் தஞ்சைப் படைகள் தாக்குவதற்குக் காரணமே இல்லை. தென்னகத்தின் போர் மரபே உலகிற்கு விசித்திரமும் வியப்பையுந் தேடித்தருவதாயிற்றே! போர் தீவுக்கோட்டை அரசன் பேரிலேயே யொழிய மக்கள் பேரில் அல்ல! பகைவன் மக்களையும் சேர்த்துப் பழிவாங்கிவிட்டுச் சென்றால்தானே தென்னாட்டவர்கள் பகைவர்களுடைய நாட்டைச் சூறையாடித் தீக்கிரையாக்குவார்கள். இது பழிக்குப் பழிவாங்கும் மான உணர்ச்சியாகும். அக்காலத்தில் போரை நாகரிகமாக உலகம் கருதியது என்பதை நிறைவான வரலாற்றறிவுடையவர்கள் அறிவர்.

படைத்தளபதி அர்ச்சுனனை அழைத்து வரும்படி காவல் வீரனுக்குக் கட்டளைப் பணித்தான் தஞ்சை

மன்னன் ரகுநாத பூபதி. சற்றைக்கெல்லாம் படைத் தளபதியும் அங்குவந்து சேர்ந்தான்.

"வா, அர்ச்சுனு! கூடாரங்கள் எல்லாம் நன்ருக அமைக்கப் பெற்றிருக்கின்றனவா?"—மகாப்பிரதானி தீட்சதர் கேள்வியைச் சிரமேற்தாங்குபவன் போலத் தலைகுனிந்து ஏற்றுச் சொன்னுன் அர்ச்சுனன்: "நன் ருக அமைக்கப் பெற்றிருக்கின்றன, மகாப்பிரதானி யாரே! உணவுக்கும் ஆகவேண்டியவைகளைக் கவ னித்து விட்டேன்!"

"பலே! அர்ச்சுனன் என்ருல் அர்ச்சுனன்தான்! இப்படி உட்கார்!"

அர்ச்சுனன் அருகே இருந்த ஆசனத்தில் அமர்ந் தான். ஆஜானபாகுவான அவனுடைய உடற்கட்டு ரகுநாதனுக்கு ஈடு செய்வதாக இருந்தது. போர்க்கள மறவன் இருக்க வேண்டிய இலக்கணமுடன் அவனி ருந்தான். கோவிந்த தீட்சிதர் உள்ளுக்குள் பெருமைப் பட்டுக்கொண்டார். அர்ச்சுனன் ஒரு நன்றியுள்ள தமிழ் மகனுக நடந்துகொண்டதோடு மட்டுமல்லாமல், வஞ்சனையில்லாமல் பல போர்க்களங்களில் வெற்றி யைத் தேடித்தந்திருக்கிருன்.

"அர்ச்சுனு! இந்தப் போர் நம் நிலைக்கும், படைத் தகுதிக்கும் ஒத்திட்டுப் பார்த்தால் மிகச் சாதாரணம். ஆனுல் இதுவே மிகக் கடினம் என்பதை நீயுணர் வாயா ?"

மகாப்பிரதானியாரே இவ்வாறு கேட்பதைக்கண்ட அர்ச்சுனனுக்கு மலைப்பே ஏற்பட்டது. மன்னன் ரகுநாதன் மேல்வாய்க்கட்டையில் கையை யூன்றி

யமர்ந்து கொண்டியிருந்தானே யொழிய ஒன்றையும் பேசிக்கொள்ளவில்லை.

"சுவாமி! நான் தங்கள் முன் சிறியவன். போர்க் கலையின் கடைமாணவன். விளங்கும்படியாகச் சொல்லவேண்டுகிறேன்!" அர்ச்சுனன் அடக்கமாகக் கேட்டுக்கொண்டான்.

மகாப்பிரதானியார் கோவிந்த தீட்சதர் மட்டு மல்லாமல் மன்னன் ரகுநாதனும் தளபதியின் அடக்க மான பதிலைக்கேட்டு மெல்லச் சிரித்துக்கொண்டனர்.

"அர்ச்சுனு! போர்க்களம் புகுமுன் ஒரு நாடக மாட நானும் மன்னர் ரகுநாதரும் ஆலோசித்திருக் கிறோம். அதை உன்னிடம் சொல்லித்தானாகவேண்டும். அதாவது, அரசி அபரஞ்சியை உயிருடன் மீட்க வேண்டும். அதற்காக நானே தீவுக்கோட்டையுள் தூது செல்லவிருக்கிறேன்."

"தனித்தா, சுவாமி?"

"ஆமாம்; அப்படி நான் தனித்து வரவேண்டும் என்பதுதான் சோழனுடைய ஆசை!"

"இல்லை சுவாமி! அந்த அப்பய்ய சாஸ்திரி களின் ஆசை!"

"எப்படியோ தனித்துச் சென்றுதான் பார்ப் போமே!"

"எனக்கென்னமோ இந்தக் கருத்து நிறைவாகத் தெரியவில்லை, சுவாமி; அதனால் என்னை மன்னிக்கவும் வேண்டுகிறேன்!"

மிக அழகான தனி மாளிகை; எடுபிடிக்குத் தோழியர்கள்; இன்னும்பிற எத்தனையோ வசதிகள் இருந்தாலும் சிறைவாசம்தானே?

அபரஞ்சி, சுவைத்து உண்டு எத்தனை நாட்களாய் விட்டன! சுகமாக உறங்கி எத்தனை நாட்களாய் விட்டன! இதோ வெளியே அந்த அயோத்தி ரகுநாதனுடைய தென்னகப் படையுதவியைப் போல, தஞ்சை ரகுநாதன் கொள்ளிடக்கரையில் தண்டு இறக்கி யிருக்கிறான். சாளரங்களின் வழியாக இதனைக் கவனித்த அபரஞ்சிக்குத்தான் எத்துணை ஆனந்தம்!

இதே நேரத்தில் ஆனந்தத்தையே அழித்துக் கொண்டு அவல நினைவுடன் அல்லலுற்று அரண்மனையுள் உலவிக்கொண்டிருந்தான் தீவுக்கோட்டை அரசன் சோழகன். போர் ஏற்படும் என்று அவன் எதிர்பார்த்துத்தான் இச்செயலில் இறங்கினான். ஆனால் எதிர் பார்த்த உதவிகள் இப்படி மோசம் செய்யும் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லை. பலரைத் துணைக் கொண்டு செஞ்சி கிருஷ்ணப்பன் வருவான் என்று அவன் எதிர்பார்த்தான். ஆனால் காணேமே! அதற்குள் தஞ்சைப் படைகள் தண்டு இறங்கிவிட்டன! என்ன செய்வான்? கோட்டையைத் திறந்துவிட முடியாது! எத்தனை நாட்களுக்கு இப்படி இருக்கமுடியும்? எத்தனை நாட்களுக்கு இப்படி இருந்தால்தான் என்ன நட்டம் வந்துவிட முடியும்? நட்டம் தஞ்சைப் படைக்குத்தான்! காத்திருந்து ஏமாற்றமுடன் திரும்பட்டுமே! தீவுக்கோட்டை மக்கள் இதனால் பாதிக்கப் போவதில்லை. எல்லா நலன்களும் உள்ளே இருக்கின்றன.

அகழிகளில் முதலைகள் காவல். முதலைகளைப் பற்றிய எண்ணம் வரவே அவனுக்கு ஒரு நினைவு

வந்தது! இன்னும் அவற்றிற்குத் தீனி போடவில்லையே! சே! அரை வயிறுவது போடச் சொல்ல வேண்டும்! போர் எப்போது நடப்பது? அவற்றிற்குப் பசி வேகம் வந்து எப்போது சூறையாடுவது?

தீவுக்கோட்டை அரசன் சோழகன் எண்ணச் சுழல்களுக்கிடையே பொங்கி வந்த வேதனையுடன் மேலும் உலாவத் தொடங்கினான். அந்தச்சமயம் அவன் எதிர் பாராத அப்பய்ய சாஸ்திரிகள் அங்கு வந்துசேர்ந்தார். அவருடைய வருகையில் விரைவு இருந்தது; முகத்தில் மலர்ச்சியும் இருந்தது.

நேற்று முதலாகவே அப்பய்ய சாஸ்திரிகளிடம் ஒருவிதமான வேற்றுமை நினைவுடன் உறவாடலானான் சோழகன். அவனுள் ஓர் ஐயம்! சொன்ன சொல்படி கிருஷ்ணப்பனுடைய படைகள் வராமையால் ஏற்பட்ட ஐயந்தான் அது! ஒருவேளை தீவுக் கோட்டையை மண்மேடாக்க கிருஷ்ணப்பன் செய்த ஏற்பாடாக இருக்குமோ? இதற்காகவே இந்த சாணக்கிய சாஸ்திரிகள் இங்கு வந்து நாடகம் ஆடுகிறாரா? இந்த நேரம் வரை கிருஷ்ணப்பனுடைய படைகள் வந்துசேரவில்லையென்றால் இதனை என்னென்று நினைப்பது? என்ன இருந்தாலும் கிருஷ்ணப்பன் அபரஞ்சியின் தந்தை—ரகுநாதனுடைய மாமனார்! தன்னுடன் சேர்ந்து தஞ்சையதிபதியை எதிர்ப்பானா?—அந்த ஒரு கணத்தில்—ஒரே ஒரு கணத்தில் இப்படியாக வெல்லாம் சிந்தித்துவிட்டான் சோழகன். அவன் சிந்தனையும் நியாயமானதுதானே?

சிறப்பற்ற தன்மையில் சோழகன் நோக்கினான். அவனுடைய அந்த நோக்கலைப் பற்றிய ஆராய்ச்சியில் மூழ்கக்கூட அப்பய்ய சாஸ்திரிகளுக்கு நேர

மில்லை. அவர் சொல்ல வந்த செய்தி அத்தனை விரைவுடையது—வியப்புடையது. "தீவுக்கோட்டைச் செல்வனே! ஒரு நல்ல செய்தி! நம்முடைய கோட்டை வாசலில் கோவிந்த தீட்சிதன் உத்தரவு வேண்டுகிறான்!"

சோழகன் மெல்லச் சிரித்து நோக்கினான்.

"ஏன் நிற்கவேண்டும்?"

"ஏன் நிற்கவேண்டுமா? என்ன கேள்வி கேட்டு விட்டாய் சோழகனே! தூதுவனுத்தான்!"

"அபரஞ்சியை மீட்டுச் செல்லத்தானே?"

"அத்துடன் சமாதானமும் வேண்டுவான்?"

"கனவு காண்கிறீர்களா? சுவாமி! தீட்சிதர் வருகையால் உங்கள் எண்ணங்கள் நிறைவேறலாம். ஆனால் என்னுடைய எண்ணம் நிறைவேற வேண்டுமல்லவா?",

"போரில் வெற்றித்தானே?"

"போரை யார் கேட்டார்கள்? அபரஞ்சியை நான் அடைய வேண்டும்!"

"கடைசி பாணம் பலாத்காரம். இது கூடவா தெரியாது?"

சேழகன் கடகடவென்று நகைத்தான்.

"பலாத்காரம்! சோம்பேறிகள் செய்யக் கூடிய செய்கை! முரட்டுத்தனமாகச் சாக்கடை நீரை அருந்துவதைவிட, பொருத்திருந்து காவேரியைப் பருக வேண்டும்! அபரஞ்சியின் மனம் கனிந்து என் நெஞ்சு இனிக்க வேண்டும்! ஆகவே எந்தத் தூதுவனுக்கும் நான் ஒருப்படமாட்டேன். அபரஞ்சியை அனுப்பவு மாட்டேன்."

"யார் உன்னை அனுப்பச் சொன்னார்கள்?"

"கிருஷ்ணப்ப நாயக்கன்! சுவாமி! அவன் என்னை ஏமாற்றிவிட்டான். அதற்காக அபரஞ்சியை நான் பழி வாங்கியே தீருவேன்!"

"நானும் அதைத்தான் சொல்கிறேன் சோழகனே! கிருஷ்ணப்பனையே ஒருகை பார்த்துவிட்டு, சோழ சாம் ராஜ்யத்தைப் பெருக்க நான் தீட்டிய திட்டத்தை நீ யறிய மாட்டாய்!"

மிகச் சாமர்த்தியமாகச் சொன்ன பதிலைக் கேட்டு சோழகன் ஒருகணம் அதிர்ந்துவிட்டான். சாஸ்திரி களை நம்பலாமா?

"சுவாமி! தீட்சதனை எப்படி நடத்த உத்தேசம்?"

"இரு கூறுகப் பிளந்து கோட்டை வாயிலில் தொங்கவிட உத்தேசம்!"

சோழகன் மேலும் அதிர்ச்சி கண்டான்.

"போர்?"

"கிருஷ்ணப்பனுக்கும், ரகுநாதனுக்கும்!"

"கிருஷ்ணப்பன் வருவானா?"

"உறுதியாக வருவான்!"

"நம்பலாம்!"

"நான் சத்தியபுருஷன்!"

"நம்புகிறேன், சுவாமி, நம்புகிறேன்! அப்படி யென்றால் தீட்சிதனை உள்ளே அழைத்துவர உத்தரவு பணியுங்கள்!"

அப்பய்ய சாஸ்திரிகள் அங்கமெலாம் குளிர அவ் விடத்தைவிட்டு வெளியேறினார். சோழகனுடைய மனம்

மட்டும் மீண்டும் 'நம்பலாமா?' என்று தன்னுள் கேட்டுக்கொண்டது.

உத்தரவுக்குப் பிறகு தீவுக்கோட்டைக் கதவங்கள் திறந்தன. அரசப் படகு கொள்ளிட நதியைக் கடந்து கரைப்பக்கம் வந்தது. படகிலிருந்து அரண்மனைச் சேவகத் தலைவன் இறங்கினான்.

கரையில் காத்திருந்த தீட்சிதரையும் துணையாகச் செல்லவிருந்த வீரன் ஒருவனையும் ஏற்றிக் கொண்டு அரசப்படகு மீண்டும் கொள்ளிடத்தைக் கடந்தது. அப்போது முதலைகள் பெருத்த ஆரவாரம் செய்தன. ஏதோ ஒரு சமிக்ஞை குரல் எழுப்பினான். அந்த சோழிய வீரன். முதலைகளெல்லாம் பிரிந்து வழி விட்டன. சற்றைக்கெல்லாம் தீவுக் கோட்டையுள் தீட்சிதர் பிரவேசித்தார்.

31



# முதல் ஏமாற்றம்!

நாயக்கமரபின் நாயகமாய்த் திகழ்பவராயிற்றே கோவிந்த தீட்சிதர்! ஆகவே அவரைச் சகல மரியாதையுடன் அழைத்துச் செல்ல வேண்டும். அதுதான் முறையும்கூட. ஆனால் மதி கெட்டுப்போன சோழகன் அவ்வாறான மரியாதை கொடுத்து வரவேற்றானில்லை. அது அப்பய்யசாஸ்திரிகளுக்குப் பெரிய மனநிறைவு. அவ்வாறு மரியாதை கொடுத்து வரவேற்கக்கூடாது என்று கருத்தை அறிவித்தவர் அவர்தானே?

அரச கொலுமண்டபத்தை அலங்கரித்து அழைக்க வேண்டும் என்ற நினைவையே மறந்து அரண்மனைக் கூடத்துக்கு அழைத்துவரும்படி ஆணையிட்டான். அந்த ஆணையில் புதைந்துகிடந்த மறைவு எதுவோ?

அரசக்கூடத்தில் நடுநாயகமாகத் தங்காசனத்தில் வீற்றிருந்தான் தீவுக்கோட்டை அரசன் சோழகன். அவனுக்குப் பக்கத்தில் அப்பய்ய சாஸ்திரிகள் அலங்காரத்தோரணையுடன் அமர்ந்திருந்தார். அவர் மீது ஜவ்வாது மணம் கம்மென்று கமழ்ந்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் அரசி அபரஞ்சி காற்சிலம்பு கொஞ்ச அங்கே வந்தாள். தீட்சிதர் வருகிறார் என்ற செய்தியைப் பரிபூரணமாக அறிந்த பின்னரே

அவள் அங்கு வருகை தரச் சம்மதித்தாள். அவளுக் கென அளிக்கப் பெற்றிருந்த ஆசனத்தில் அமைதி யாக அமர்ந்தாள். அவளுடைய அழகை மெல்ல அண்ணுந்து நோக்கினர் அதுவரை நேர்முகமாகச் சந்திக்காத—சந்திக்க விருப்பமில்லாத—இல்லே, முக மில்லாத அப்பய்ய சாஸ்திரிகள். அடடா! செஞ்சிக்கு அரம்பையர் போல் வந்த அபரஞ்சியா இவள்? எத்தனைக்கு இளைப்புத்தட்டி உருமாறிக் காணப்படு கிருள்! அவளிருந்த இருப்பென்ன? இப்போது சிரிக் கும் சிரிப்பென்ன?

அபரஞ்சி மெல்லச் சிரித்தாள். அப்பய்ய சாஸ்திரி களை நன்ருகவே நோக்கினுள். சாஸ்திரிகள் ஏதேனும் பேசுவார் என்றுதான் அவள் எதிர்பார்த்தாள். ஆனல் அவர் பேசவேண்டுமே! பேசத்தான் முகம் உண்டா? ‘அபரஞ்சி ஓர் அபசுரம்!’ என்று வதந்தி பரப்ப நினைத்தவரல்லவா? இப்போது அபசுரமாக்கவே இங்கு வந்திருக்கிருர் போலும்!

அபரஞ்சிக்கு இந்த எண்ணம் எழும்போது மனம் வேதனைப்படத்தான் செய்தது. ஆயினும் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் வரவிருக்கும் தீட்சிதரை எண்ணி-தனக்காகத் தூதுவரும் அளவுக்கு ஆளான தீட்சி தரை எண்ணி ஒருபுறம் மகிழ்ச்சி யடைந்துகொண் டாள். ஆயினும் தன்பொருட்டு அவரா வரவேண்டும்? தென்னகத்தின் மண் முழுவதும் மதிக்கத்தக்க மாமனிதராயிற்றே அவர்!

தீட்சிதர் வருகிருர் என்ற செய்தியை முன்கூட்டி ஒரு வீரன் வந்து அறிவித்துச் சென்ருன். சாஸ்திரிகள் மெல்லத் தொண்டையின் குரலேச் சரி பார்த்துக்

கொண்டார். என்ன கேள்வியை எப்படிக் கேட்டு எவ்விதமாக தீட்சிதனைப் பழிவாங்குவது?

கொஞ்சம்கூட மதிப்போ சிறப்போ இல்லாத ஒரு குற்றவாளியைப்போல வீரர்கள் புடைசூழ அழைத்துவரப்பட்டார் தீட்சிதர்.

அரண்மனைக் கூடத்தில் மூவர் மட்டுமே அமர்ந்திருப்பதைக் கண்டார் தீட்சிதர். ஆனால் அவரைக் கண்டதும் அபரஞ்சியின் கண்கள் ஏன் இப்படி மருளுகின்றன?

அவள் ஏதேனும் சத்தம் போட்டுவிடுவாளோ என்று பயந்த தீட்சிதர், தஞ்சை யரண்மனையின் முக்கிய சமிக்ஞையின் மூலம் ஒருவரும் கண்டு கொள்ளாவண்ணம் அறிவித்தார். அபரஞ்சி அடங்கி விட்டாள்.

அழைத்து வந்து நிற்கவைத்தார்களே யொழிய யாரும் அமரும்படிச் சொல்லவில்லை. இது அபரஞ்சிக்குப் பெரிதும் வேதனையாக இருந்தது. ஆயினும் அவள் தன்னை வெகுவாகத் தேற்றி அமைதியாக அமர்ந்திருந்தாள். என்ன நடக்கிறது என்றுதான் பார்ப்போமே!

'இங்குள்ளவர்களுக்குத் தமிழ் தெரியும்தானே?'' தீட்சிதர் கேட்டார். வேண்டுமென்றேதான் அவர் அப்படிக் கேட்டார்.

சோழகன் கலகலவென்று நகைத்தான்.

"ஏன் நகைக்கவேண்டும்?''

"நல்ல கேள்வியைக் கேட்டுவிட்டாய் தீட்சிதரே! தமிழ் வளர்த்த சோழ மரபினனைப் பார்த்துக் கேட்க வேண்டிய கேள்வியா இது?''

"அதுவும் ஒரு தெலுங்கன்!"—அப்பய்ய சாஸ்திரிகள் ஒத்து ஊதினர்.

தீட்சிதர் கலகலவென்று நகைத்தார்.

"ஆனால் நான் தமிழன்!"

"அப்படியா?"

"பின்? சோழ அரசே! தமிழனாய்ப் பிறப்பது ஒரு பெரிதல்ல; பண்புள்ளவனாகப் பிறக்கவேண்டும்! ஏனென்றால் தமிழர்கள்—முற்காலத்திய தமிழர்களைச் சொல்லுகிறேன்—அவர்கள் பண்புள்ளவர்கள்!"

"அப்படியா?"

தலையசைத்தார் தீட்சிதர்.

"ஓ.ஃகோ! ஆனால் நீங்கள் மரியாதைக்குரியவர் அல்லர்" சாஸ்திரிகள் சொன்னார்.

"ஓ.ஃகோ நீங்கள்தானே அப்பய்ய சாஸ்திரிகள்?"

"சாட்சாத் சாஸ்திரிகள்தான்?"

"அதுதான் பண்பு செத்துவிட்டது. சாஸ்திரிகளை நான் அறிவேன்!"

"என்ன அறிவாய்?"

"ஒருமைப் போட்டுப் பேசும் ஒருமைக்குரியவர் என்று!"

"அப்படியென்றால்..."

"கேவலம் ஒரு மரியாதை தெரியாத மனிதர் என்று!"

"அதிகமாகப் பேசுகிறீர்கள்!"

"பேசவைத்துவிட்டீர்கள்!"

சோழகன் குறுக்கிட்டான்:

"போதும் மரியாதை பிரச்னை! மரியாதை என்பது கொடுப்பது; கேட்டு வாங்குவதல்ல! வந்த காரியம்?"

"தஞ்சை அரசி அபரஞ்சி தேவியாரை என்னுடன் அனுப்பிவைப்பீர்கள் என்று மரியாதையாக எதிர் பார்க்கிறேன!"

"தவறினல்!"

"வீணுகத் தீவுக்கோட்டை தரைமட்டமாகும்!"

"அப்படித் தரைமட்டமானல், ரகுநாதன் பெற்றுச் செல்லும் பரிசு இரண்டு பிணங்கள்! ஒன்று அபரஞ்சி! மற்றென்று தஞ்சையின் உயிர் நாடியான தீட்சிதர்!" அப்பய்ய சாஸ்திரிகள் அகம்பாவமாகக் கெக்கலிக் கொட்டிச் சிரித்தார். அடுத்து சொன்னர்: "ஓய்! தீட்ச தனே! ஒன்றைமட்டும் ஒழுங்காகச் செய்து முடித்தால் அபரஞ்சியை அனுப்பிவைப்போம்!"

"என்ன அது?"

"தீவுக்கோட்டை அரசர் காலில் விழுந்து அபரஞ்சி யைப் பிச்சையாகக் கேட்கவேண்டும்! அடுத்து என் காலில் விழுந்து போர் தொடுத்தது தவறு என்று மன்னிப்பு கோரவேண்டும்! இல்லையேல்......"

"இல்லையேல்?"

"உங்களுக்கு விரோதமான முகமதியப் படைகள் எனக்குத் துணை செய்ய வருகின்றன. இதனல் தஞ்சை தரைமட்டம் ஆக நேரிடும்!"

"கனவு!"

"கனவா?"

"பின் என்ன? கனவில்கூட நீங்கள் கோரிய கோரிக்கைகள் நடைபெறு! எனக்குத் தெரியும். நீங்கள் ஏமாற்றவே என்னை அழைத்தீர்கள் என்று! நானும்மீண்டும் தீவுக்கோட்டையிலிருந்து வெளியேற முடியாது என்ற முடிவுடன்தான் நுழைந்தேன்! குறைந்த பட்சம் என்ன செய்துவிடுவீர்கள்? என் உயிரைப் போக்கப்போகிறீர்கள். அவ்வளவுதானே?"

அப்பய்ய சாஸ்திரிகள் இந்தப் பேச்சைக் கேட்டதும் அர்த்தமில்லாமல் சிரித்தார்.

"மகா புத்திசாலியடா, தீட்சிதனே, மகா புத்திசாலி! இதையறிந்தா இந்தக் கோட்டையுள் நுழைந்தாய்!"

"அடேய், அப்பய்ய சாஸ்திரி! கொள்ளிடத்து முதலைகள் எவ்வளவோ, மேல்! நீ அவற்றைவிட கொடிய ஜந்து! என் புத்திசாலித்தனத்தை நீ சோதிக்கிருயா? இதோ பார்! எங்கள் மகாமேதை தீட்சிதர் அத்தனை ஏமாளியல்ல, உங்களைப்போல்! சோழகனே! இந்த அப்பய்யனுடைய பேச்சைக் கேட்டு அழிவது நிச்சயம்!"

தீட்சிதர் வேடத்தைக் கலைத்தார். அபரஞ்சி கலகலவென்று வெண்கலமாகச் சிரித்தாள். வந்தவன் தீட்சிதன் அல்லன்; அவர் வேடம் பூண்டு வந்த ஒரு சாதாரண வீரன் என்பதை யறிந்து சோழகனும், சாஸ்திரிகளும் அயர்ந்துபோய்விட்டனர். தங்களை எவ்வாறு ஏமாற்றி, மரியாதைக் குறைவாகப் பேசிவிட்டான் இவன்?

ஏமாற்றத்தின் எதிரொலியாக அப்பய்ய சாஸ்திரிகள் கர்ஜித்தார். "இவனைக் கிழித்துத் தோரணமாகக்

கட்டி வெறும் படகில் வைத்து ரகுநாதனுக்கு அனுப்பி வையுங்கள்!"

வீரன் மரணத்தின் ஓலமாகச் சிரித்தான்.

"இதை நான் எதிர்பார்த்தது தான். தஞ்சை வீரர்கள் மரணத்துக்கு அஞ்சுபவர்களல்லர்! கோழைகளே! கோட்டையைத் திறவுங்கள்! இதே கதி இங்குள்ள ஒவ்வொரு ஆடு மாடுகளுக்கும் கிடைக்கும்!"

வீரனின் வீராவேசத்தைக் கேட்டு சோழகன் ஒரு கணம் அதிர்ந்துவிட்டான். அபரஞ்சி அலட்சியமாகச் சிரித்து இருப்பிடத்தை விட்டு எழுந்தாள். அவமானத்தால் அனைவரும் தலை குனிந்தனர்.

32



# முதலைப் பாலம்

தஞ்சை மண்ணுக்காகத் தன்னைத் தானே தியாகம் செய்து கொண்ட அந்தச் சுத்த வீரனுக்கான சவ அடக்கத்தை நேரிலிருந்து கவனித்தான் தஞ்சை மன்னன் ரகுநாதபோஜன். அந்தச் சவ அடக்கத்தின்போது அவனுடைய இதயம் மகாசமுத்திரத்தைப் போன்று பொங்கி வழிந்தது. எத்தனை அகம்பாவ மிருந்தால் கோட்டையுள் நுழைந்த தூதுவனைத் தோரணமாகக் கிழித்து, வெற்றுப்படகில் வைத்து முதலை மூலம் கரையைக் கடக்கச் செய்து அனுப்பியிருப்பான் அந்தச் சோழகன்! அவனை இதே வண்ணம் கிழித்துத் தோரணம் கட்டி இதே கோட்டை வாயிலில் தொங்கவிட்டு தஞ்சை திரும்புவேன் என்று ரகுநாதனுடைய மனம் வஞ்சினம் எடுத்துக கொண்டது.

தொலைவில் நின்று தலை வணங்கி வீர வணக்கம் செய்துகொண்டிருந்த தளபதி அர்ச்சுனன், மகாமதியாளரான கோவிந்ததீட்சதரை நோக்கினான். கோவிந்த தீட்சிதர் மெல்லச் சொன்னார்: "அர்ச்சுனா! அரசதந்திரத்தில் இது ஒரு வகை. நாட்டுக்காக அரசந்திரம் எழுகிறது. அதற்காகச்சிலர் பலியாகவேண்டியதுதான். அதிலும் இந்தச் சுத்த வீரன் ஒருநாள் தீட்சிதனாக

இருந்து உயிர்த் தியாகம் செய்யும் பாக்கியம் பெற்ருன்! போரில் வீரசொர்க்கம் அடைபவர்கள் எல்லாரும் வரலாற்றில் இடம்பெற்று விடுவதில்லே. இப்படியான தியாக உருவங்கள்தாம் இடம் பெறுகின்றன.''

தளபதி அர்ச்சுனன் தலேவணங்கி அவருடைய சொல்லே ஏற்ருன.

அத்துடன் போருக்காக அவர் வகுத்த திட்டத்தை நினேத்துப் பார்த்துக்கொண்டான். அந்தத் திட்டத்தில் தொக்கி நின்ற ஒன்றை அவனுல் நினேத்துக் கூட பார்க்க முடியவில்லே. இப்படியான ஒரு அசம்பாவிதம் நிகழ்ந்தால் அபரஞ்சியை உயிருடன மீட்கமுடியாது, என்று அவர் எத்தனே தீர்க்கதரிசனமாகக் கூறியிருக்கிருர்! உண்மையில் அப்படித்தான் நிகழப்போகிறதா? அர்ச்சுனனுல் சகிக்க முடியவில்லே. முடிவாக, இந்தப் போர் அபரஞ்சிக்காக என்று நினேப்பது மடமை. தீவுக் கோட்டைச் சச்சரவை ஒழிக்க இது ஓர் உபாயம் உண்மையில் எப்படியும் நடக்கவேண்டிய போரே!'' என்று தீட்சிதர் கூறிய விதத்தை மன்னர் ரகுநாதர் எததுனே புன்னகையுடன் ஆமோதித்து ஏற்ருர்!

எல்லாவற்றையும்முடித்துக்கொண்டு மூவருமாகக் கூடாரத்துள் நுழைந்தனர். மாலே மறைந்து இரவும் வந்தது.

ஏழு நாழிகைப் போதுக்குமேல் இருக்கும். கையில் தீப்பந்தம் பிடித்துக்கொண்டு இருவர் கூடாரத்தை அடைந்தனர். பின்னுல் ஒரு குதிரையின் முதுகில் ஒரு பொதியிருந்தது. அவர்களுடைய வருகையைக் கண்ட தீட்சிதர், புன்னகையுடன் வெளியே வந்தார். குதிரை

யின்மீதிருந்த பொதியைக் கவனித்தார். அத்தனையும் பச்சிலைகள். ஏன் இந்தப் பச்சிலைப் பொதி?

ஆனந்தமாக தலையசைத்துக்கொண்டார். அன்று காலை அவர் காட்டிவிட்டு வந்த அதே பச்சிலையை எக்கச்சக்கமாகப் பறித்து வந்துவிட்டனர் புத்திசாலி வீரர்கள்.

''அர்ச்சுனா! இது என்ன தெரியுமா?''

''பச்சிலை சுவாமி!''

''ஆமாம்! எதற்காக?''

''முதலைகளைக் கொல்ல!''

''ஆமாம், இது முதலைக்கொல்லும் பச்சிலை! இதன் சாற்றைப் பிழிந்து, சோற்றுடன் கலந்து உருண்டையாகப்பிடித்துக்கொள்ளிடத்தைச் சுற்றி இன்றிரவோடு இரவாகவே எறியுங்கள். நாளைய காலை முதலைகளெல் லாம் கொள்ளிடத்தில் படகுகளாக மிதக்கும்! உடன் நீ சென்று இதனைக் கவனித்துவிட்டு ஓய்வு எடுத்துக் கொள் அர்ச்சுனா!''

''ஆகட்டும் சுவாமி! அவ்வண்ணமே செய்து முடிக்கிறேன்!''

தளபதி அர்ச்சுனன விடைபெற்றான்.

மன்னன் ரகுநாதனும், கோவிந்த தீட்சிதரும் படுக்கைக்குச் சென்றனர்.

பொழுது விடிந்தது. கொள்ளிடத்தின் சங்கமக் கோலம் நிறைந்த கடற்பகுதிக் காட்சி பார்வைக்கு பேரானந்தமாக இருந்தது. இயற்கையின் அந்த எழிலோவியத்தைத் துய்க்கும் அளவிலா அவர்களிருந் தார்கள்?

மகாமந்திரி கோவிந்த தீட்சிதரும், மன்னன் ரகு நாதனும் முதல், காரியமாகக் கொள்ளிடத்து முதலை களைப் பார்வையிட வந்தனர். போட்ட திட்டம் நன்கு பயன் தந்துவிட்டது. பசியோடு உலவிவந்த முதலை கள் நச்சுப்பச்சிலைச் சாற்றுடன் கலந்த சோற்றுப் பறுக்கைகளை யுண்டதன் காரணமாகப் பிணமாகி மிதந்தன! எங்கும் கட்டுமரங்கள் மிதப்பன போன்ற காட்சிதான்! அறிவின் ராட்ஸரான கோவிந்த தீட்சிதர் அகம் குளிரச் சிரித்தார். அடுத்த கணமே ஆணை பிறந்தது. "எல்லா முதலைகளையும் ஒன்று திரட்டிக் கோட்டைக் கதவங்களையடைய பாலமாகப் போடுங் கள். முதலைகள் மீதே படைகள் சென்று கோட்டைக் கதவங்களைத் தாக்கட்டும்! இன்னும் பத்து நாழிகைப் போதுக்குள் கோட்டைக் கதவங்கள் திறந்தாக வேண்டும், தளபதி அர்ச்சுனா!"

தளபதி அர்ச்சுனன் தலை வணங்கி ஆணையை ஏற்றான்.

அடுத்த கணமே செயலில் இறங்கிவிட்டான். எல்லா வீரர்களுமாகச் சேர்ந்து கயிறுபோட்டு முதலை களை இழுத்துச் சேகரித்தனர். அப்படிச் சேகரிக்கப் பட்ட முதலைகளைக் கொண்டுவந்து மூட்டை யடுக்கு வதுபோல அடுக்கிக் கேட்டைக் கதவங்கள் வரை பால மாகப் போட்டனர். அடடா! அடுக்க அடுக்க மாளாத. எத்தனை எத்தனை முதலைகள்.

பாலம் அமைக்கப்பெற்றதும் தஞ்சைப் படைகள் அதன்மீது நடந்து சென்று கோட்டைக் கதவங்களைத் தாக்கின. அந்தத் தாக்குதலுக்குப் பத்து யானைகள் பயன் படுத்தப்பட்டன. முதலைப் பிணப் பாலத்தின்

மேல் யானைகளை ஓட்டிச் சென்று கோட்டைக் கதவங்களைத் தாக்கும் அந்தக் காட்சியைக் காண மன்னன் ரகுநாதனுக்கே வியப்பாக இருந்தது. இதுவரை நாவலந்தீவின் வரலாற்றிலேயே இப்படியான ஒரு நிகழ்ச்சி நடந்து இருக்கமுடியாது. எத்தனையோ தாக்குதல்கள் நடைபெற்றிருக்கின்றன. ஆனால் முதலைகளைப் பிணமாக்கி, அவற்றின் உதவியால் ஒரு நதிக்குப் பாலம் அமைத்து, அதன்மீது களிறுகள் சென்று தாக்கும் அந்தக் காட்சி ஓவியனுடைய கற்பனைக்கோ, காவியமகனின் கற்பனைக்கோ எட்டாத காட்சியல்லவா?

பத்து நாழிகைப் போதுக்குள்ளாகவே கோட்டைக் கதவங்கள் திறக்கப்பட்டுவிட்டன. தஞ்சைப் படைகள் வீராவேசமுடன் தளபதியின் உத்தரவைத் தாங்கித் தீவுக்கோட்டையுள் பிரவேசித்தன. இதே நேரத்தில் தொலைவில் படைமுழக்கம் ஒன்றுகேட்டது. ரகுநாதன் வியந்து நோக்கினன். செஞ்சிப் படைகள்தாம். கிருஷ்ணப்பநாயக்கன் தலைமையில் வந்து கொண்டிருந்தன. நல்ல வேளையில்தான் செஞ்சிப் படைகளும் வருகின்றன. வரட்டும். சேர்த்துப் பாடம் கற்பிப்போம்' என்று உள்ளூரக் கருவிக்கொண்டான் மன்னன் ரகுநாதபோஜன்.

தீவுக்கோட்டையைத் துகளாக்க உத்தரவிட்டான் மன்னன் ரகுநாதன். படைகள் பொங்கி வந்த சினச் சீற்றமுடன் தாக்கத் தொடங்கின. எதிர்பாராத இந்தத் தாக்குதலால் தீவுக்கோட்டைப் படைகள் முதலில் அரண்டுமருண்டு போயின.

கேள்விப்பட்ட அரசன் சோழகன், உடனடியாக வட்டுடையணிந்து போர்க்களத்தில் குதித்தான்.

அதன் பிறகு தீவுக்கோட்டைப் படைகளுக்கு ஓர் உற்சாகம். இருதிறத்துப் படைகள் போரிட்டுக் கொண்டிருந்த அதே வேளையில், செஞ்சிப் படைகளும் இடைப் புகுந்தன. சோழகனுக்கு மிகுந்த மகிழ்ச்சி! நல்ல தருணத்தில் ஆபத்துதவியாக செஞ்சி கிருஷ்ணப்ப நாயக்கன் கலந்து கொண்டானே என்ற மகிழ்ச்சிப் பெருக்கால் தீவிரமாகப் போரிட முனைந்தான்.

எங்கும் தூளிப்படலம் சூழ்ந்தது. எங்கும் ரத்த ஆறு பெருக்கெடுத்தது. எங்கும் வீரர்களின் பிணங்கள் மலைமலையாகக் குவியத் தொடங்கின!

ஒரு புறம் ஆவேசம்! மறுபுறம் அவல ஓலம்!

கோட்டையின் உச்சியில் புலிக்கொடி கடைசி மூச்சை நினைத்துப் பரிதாபமாகப் படபடத்துப் பறந்தது. அதன் பெருமை மிக்க வரலாறு எங்கே! இப்போது சிறுமை மிக்க சோழகனால் அதன் அத்தியாயம் முடியும் சோகக் கதை எங்கே!

புலிக்கொடி புலம்பியது.

33



# வீர சொர்க்கம்

மாலைச் சூரியன் மறைந்துகொண்டிருந்தான். அவனுடைய செம்மைக்கோலமும் ஒரு போர்க்கோலம்போலவே காணப்பட்டது.

தீவுக்கோட்டையின் முற்றுகைக்குத்தான் நாள் பிடித்ததேயொழிய, அதன் போர் முழக்கத்துக்கு ஒரு நாளே போதுமானதாக இருந்தது. படைக்களத்தில் மன்னன் ரகுநாதனும், மகாமந்திரியார் கோவிந்த தீட்சதரும், தளபதிகளான அர்ச்சுனனும், கன்னியப்பனும் தஞ்சை வீரர்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் ஊட்டிப் போரிட்டனர். தீவுக்கோட்டைப் படைகளும், செஞ்சிப் படைகளும் பெரிதாக வீழ்ச்சி கண்டன. தஞ்சைப் படைகளுக்கு மேலும் வேகம் பிறக்கச் செய்தது ஒரு செய்தி. அது:

செஞ்சியரசன் கிருஷ்ணப்பநாயக்கன் சிறைப்பட்டான் என்பதுதான்! சிறை பிடித்தவன் தளபதி அர்ச்சுனன் என்ற செய்தி வீரஉணர்வுடன் பரவியது. செஞ்சிப்படைகள் தஞ்சைப் படையுடன் தஞ்சம் புகலாயின.

இதனைக் கண்ட தீவுக்கோட்டைப் படைகள் திணறல் கண்டன. களத்தில் சோழகனும், ரகுநாதனும் நேருக்குநேர் போர்புரியலாயினர். மன்னன்

ரகுநாதன் குஞ்சரம் ஊர்ந்து போரிட்டான். அரசன் சோழகனோ தன்னுடைய வல்லமைபொருந்திய குதிரை யின்மீது ஆரோகணித்துப் போர் புரிந்தான்.

சோழகனுக்குப் பல இடங்களில் கத்தி வெட்டுக் கள் விழுந்தன. இந்தச் சமயம் பார்த்துதானா செஞ்சி கிருஷ்ணப்பன் சிறைப்பட்டான் என்ற செய்தி இவனுடைய காதில் விழவேண்டும்? நாடி தளர்ந்து விட்டது. எனவே மேலும் போரிட்டு உயிர் துறக்க மனமில்லாத சோழகன் தப்பி யோடினுன் போதும் என்ற நினைவுடன் குதிரையைத் திருப்பிக்கொண்டு ஓட்டம் பிடித்தான். தப்புவதும் தப்புகிறோம்; அபரஞ்சியுடன் தப்பித்துச் சென்று விடுவோமே என்ற அந்த நப்பாசை அவனைவிட்டுப் போகவில்லை. அவன் காற்றென கடுகிச் சென்றான். ரகுநாதனும் அவனை விடுவதாக இல்லை. பின்னால் துரத்திக் காண்டே சென்றான்.

சோழகன் அரண்மனையை அடைந்தான். நேரே அப்பய்ய சாஸ்திரிகளின் அறைக்குச்சென்றான். அங்கே அப்பய்ய சாஸ்திரிகளைக் காணோம். திட்டப்படி அவர் அங்கு இருக்கவேண்டும். ஏதேனும் நேர்ந்தால் அபரஞ்சியுடன் மூவருமாகச் சுரங்கப்பாதை வழியா கத் தப்பிச் சென்றுவிட வேண்டுமென்பது திட்டம். ஆனால் எங்கே இந்த அப்பய்ய சாஸ்திரிகள்?

கோபம் கோபமாக வந்தது சோழகனுக்கு. போட்ட திட்டப்படி இவர் இங்கு இல்லாமல் எங்குப் போய்விட் டார்? சிந்திக்க நேரமில்லை. பின்னே ரகுநாதன் தூரத்தில் வந்துகொண்டிருந்தான். எனவே புரவி

யைச் செலுத்திக்கொண்டு நேரே அபரஞ்சியை அடைத்துவைத்திருந்த மாளிகை நோக்கி விரைந்தான்.

மாளிகையை அடைந்ததும் அடையாததுமாக உள்ளே சென்று கவனித்தான். அங்கு அபரஞ்சி யைக் காணும். விசாரித்துப் பார்த்ததில் சற்று முன்னம்தான் அப்பய்ய சாஸ்திரிகள் வந்து அரசர் அழைத்துவரச் சொன்னார் என்று செய்தி அறிவித்து விட்டு அழைத்துச் சென்றார் என்று காவலன் அறிவித் தான். இடிவிழுந்த நிலைக்கு ஆளான சோழகன் ஏதும் புரியாவண்ணம் பரிமேல் ஏறி நேரே சுரங்கப் பாதை நோக்கிப் பறந்தான். அதிகமான சலுகையும், அதிகார மும் வழங்கப்பட்டதால் அப்பய்ய சாஸ்திரிகள் தன்னை ஏமாற்றிவிட்டார் என்ற சினச் சிந்தையுடன் சுரங்கப் பாதையை அடைந்து விசையைத் திருப் பினான். சுரங்கம் திறந்தால்தானே? அது ஏற்கனவே திறக்கப்பட்டு உள்ளே சென்று யாரோ உறுதியாக மூடிவிட்டனர். தான் விட்ட அம்பு தன்னையே குறி பார்த்துவிட்டதே என்று பொறிகலங்கிப்போனான் சோழகன். இனிமேல் அவனால் ஏதும் செய்ய இயலாது. தனக்கென்று—தன்னுடைய ஆபத்துக் காலத்தில் உதவுமென்று தயார் செய்த சுரங்கம் தனக்கே உதவா மல் போன நிலைகண்டு ஒரு குறை அழுதுவிடலாம் போலத் தோன்றியது.

கொள்ளிடத்து அடிப் பாகத்தைக் குடைந்து வெளியே செல்ல அமைத்த அந்தச் சுரங்கப் பாதை கடைசியில் அப்பய்ய சாஸ்திரிகள் தப்பியோடவா உதவவேண்டும்?

செய்வதென்னவென்று தோன்றாத நிலையில் தவித்துக்கொண்டிருந்தபோதே அங்குத் தஞ்சை வீரர்க

ளுடன் ரகுநாத போஜன் வந்துவிட்டான். இருவருக்கும் தனித்த வாட்போர் நிகழ்ந்தது. வீரர்கள் யாரும் குறுக்கிடவில்லை. சோழகனும் சாமான்யமானவன் அல்லவே! வாளை மிகுந்த லாகவமாகச் சுழற்றிப் போரிட்டான். என்ன போரிட்டு, என்ன திறமையைப் பயன்படுத்தி என்ன பயன்? முடிவில் தஞ்சை வீரர்களிடம் சரணமடையவேண்டியதுதானே?

இந்த உணர்வே சோழகனைப் பலவீனமாக்கி வந்தது. என்றாலும் ரகுநாதனைத் தன்னுடைய கையால் வீழ்த்தினேம் என்ற நிறைவு கிடைக்குமல்லவா? எனவே ரகுநாதனைக் குறிபார்த்து வீழ்த்த வாளைச் சுழற்றினன். ரகுநாதனுடைய இடக்கரத்தில் பலத்த காயமும் ஏற்பட்டுவிட்டது, அப்படியும் தனித்தே போரிட்டான் ரகுநாதன். முடிவில்......

சோழகனுடைய மார்பில் ரகுநாத போஜனுடைய வீரவாள் புகுந்துவிட்டது. மலையென கீழே விழுந்த சோழகன் கடைசி மூச்சுடன் கோட்டைமேல் பறந்த புலிக்கொடியைக் கண்டான். மனத்தில் என்ன தோன்றியதோ, இருகரம் கூப்பி வீரவணக்கம் செய்து வீர சொர்க்கம் புகுந்தான். மனத்தில் புலிக்கொடியின் பழம் வரலாறு பதிந்து இருக்கவேண்டும். அது முடிந்துவிட்டது. புலிக் கொடியும் வீழ்ந்து பட்டது.

## 34



# வெற்றி முரசம்

துகளான தீவுக் கோட்டையை விட்டுத் தஞ்சைப் படைகள் வெற்றிப் பெருமிதத்துடன் வெளியேறின. வெற்றி முரசும் ஆர்ப்ப தஞ்சை மன்னன் குஞ்சரம் ஊர்ந்து கூடாரத்தை அடைந்தான். கோவிந்த தீட்சிதரும், தளபதி அர்ச்சுனனும் பக்கலில் வந்து சிரமப்பரிகாரம் செய்தனர். அப்போது......

படைகளுள் ஓர் ஆரவாரம் திடும்மென்று எழுந்தது. அரசி அபரஞ்சி வந்துவிட்டார் என்ற செய்திக் குரல் கூடாரத்துள் நுழைந்தது. மன மகிழ்ச்சியுடன் தஞ்சை வேந்தன் விரைவுகொண்டு வெளியே வந்தான். அப்பய்ய சாஸ்திரிகளுடன் அபரஞ்சி உருக் குலைந்து வந்துகொண்டிருந்தாள். அனைவருடைய முகங்களிலும் ஆச்சரிய ரேகைகள்!

அபரஞ்சியை அழைத்து வந்த அப்பய்ய சாஸ்திரிகள் தஞ்சை மன்னன் ரகுநாத போஜனை வணங்கிச் சொன்னார்:

“தஞ்சைபுரி வேந்தர்க்கு என் வணக்கம்! நான் நினைத்ததைச் சாதித்துவிட்டேன். செஞ்சியில் தாங்கள் என் மீது சுமத்திய குற்றத்திற்கு பிராயச்சித்தம் தேடி விட்டேன். அபரஞ்சியை அபசுரமாகக்கினேன்! உண்மை. மறுக்கவில்லை. காரணம் கிருஷ்ணப்பநாயக்கனுக்காக! ஆனால், என்னால் ஏற்பட்ட களங்கம்

என்றால் எப்படித் துடைக்க முடியும் என்று சிந்தித்தேன். சோழகன் அபரஞ்சியைத் தீய நோக்குடன் சிறைப்படுத்தி யிருக்கிறான் என்று தெரிய வந்தது. எனவே தீவுக்கோட்டையுள் பிரவேசித்தேன். போர் மூள வழி வகுத்தேன். தாங்கள் அனுப்பிய தூதுவரை அமைதிக்கச் செய்தவனும் நான்தான். ஏனென்றால், தாங்கள் எப்படியும் அபரஞ்சியை மீட்க வீராவேசமுடன் போர் தொடுக்க வேண்டும்; சோழகன் அழிய வேண்டும் என்பதற்காகத்தான்! இப்போது அது நடந்து முடிந்தது. இதோ அபரஞ்சியைச் சுலபமாகச் சுரங்கப் பாதையின் மூலம் தப்பிக்கச் செய்து அழைத்து வந்திருக்கிறேன். இப்போர் நடைபெற வில்லையானால் இவ்வாறு அபரஞ்சியை நான் மீட்டுவர முடியாது. பிணமாகத்தான் மீட்டுவர முடிந்திருக்கும். எனவே, என் பிழை பொறுத்து மன்னிக்க வேண்டுகிறேன்!''

அப்பய்ய சாஸ்திரிகளின் விளக்கம் அனைவர்க்கும் ஆச்சரியத்தை யுண்டுபண்ணின. மகாமேதையான கோவிந்த தீட்சிதரே வியந்தார். தனக்கும் எட்டாத அரச தந்திரம் இது என்று வாயாரப் புகழ்ந்தார்! போதுமே! இந்த ஒரு புகழ்ச்சியே அப்பய்ய சாஸ்திரிகளின் மனத்தைக் குளிரச் செய்துவிட்டது. எந்த கோவிந்ததீட்சிதரைப் பழிவாங்க நினைத்தாரோ, அந்த கோவிந்த தீட்சிதரால் பாராட்டப் பெற்று விட்டாரே! அதுவும் தனக்கும் தோன்றாத அரசதந்திரம் என்று! இனிமேல் அவர் அக்கணமே இறப்பதானாலும் சம்மதிப்பார்.

அபரஞ்சியும் புன்னகையுடன் அப்பய்ய சாஸ்திரிகளை மன்னிக்க வேண்டினாள். பிறகு அட்டியேது?

"சாஸ்திரிகளே! உங்களுடைய உதவிக்கு என் நன்றி. எங்களுடன் தஞ்சைக்கு வந்து தங்கியிருந்து நாங்கள் தரும் வெகுமதிகளைப் பெற்றுச் செல்லலாம், வாருங்கள்!"

மன்னன் ரகுநாதபோஜனும் மனம்குளிர அப்பய்ய சாஸ்திரிகளை வேண்டினான். சாஸ்திரிகளின் கபடநாடகத்தை அவன் அறிவானா? இதைக் கபடநாடகம் என்றும் சொல்லிவிட முடியாது. இது ஒரு காரிய நாடகமாயிற்றே!

"தஞ்சை மன்னர்பிரானே! நான் உங்களுடன் வர தகுதியற்றவன். என்னை இப்படியே விட்டுவிடுங்கள். என் போக்கில் எங்கேனும் சென்று பிழைத்துக் கொள்ளுகிறேன்!"

"இல்லை! உமக்கு ஏதும் கொடுக்காமல் வெறுங் கையுடன் அனுப்ப என் மனம் சம்மதிக்கவில்லை. தஞ்சைக்கு வருவதால் எந்தவிதமான பங்கமும் ஏற்படாது!"

"அதற்குச் சொல்லவில்லை. எனக்குத் தகுதியில்லை என்றுதான் சொல்லுகிறேன்!"

"அப்படியென்றால் இந்த இடத்திலேயே நீங்கள் விரும்பியதைக் கேட்கலாம். என்னரும் அபரஞ்சியை மீட்டுத் தந்த உங்களை வெறுங்கையுடன் அனுப்ப மாட்டேன். சொன்னால் தாங்கள் இருக்கும் இடந்தேடி கேட்கும் பொருளை வெகுமதியாக அனுப்பி வைக்கிறேன்!'

"நான் கேட்கும் பொருளை நீங்கள் கொடுப்பீர்களா வேந்தே? நிச்சயமாகக் கொடுக்க முடியாது!"

"கேளுங்கள், சத்தியமாகக் கொடுக்கிறேன்!"

"என், அரசனை என்னிடம் கொடுத்துவிடுங்கள்!"

மறுகணமே தஞ்சை வேந்தன் மட்டும் அல்லாமல், மகாமேதையான கோவிந்த தீட்சிதரும் வியப்புடன் வாய் பிளந்தார்.

கொஞ்ச நேரம் அமைதி.

பிறகு தீட்சிதர் சொன்னார்:

"சாஸ்திரிகளே! உங்கள் அரசப்பக்திக்கும், அரச தந்திரத்திற்கும் என் தலை வணங்குகிறது. மன்னன் சார்பில் நானே செஞ்சியையும், அதன் அரசனையும் வெகுமதியாகக் கொடுக்கிறேன். எடுத்துச் செல்லலாம்!" என்று தீட்சிதர் சொல்லி வாய் மூடியவுடன் தஞ்சை மன்னன் கட்டளைப் பிறப்பித்தான்.

"செஞ்சியரசர் கிருஷ்ணப்ப நாயக்கரை விடுதலை செய்யுங்கள்!"

அப்பய்ய சாஸ்திரிகளின் மனம் மட்டுமல்லாமல் அபரஞ்சியின் மனமும் குளிர்ந்தது.

செஞ்சி யரசன கிருஷ்ணப்ப நாயக்கனுடன், எஞ்சிய படைகளை அழைத்துக் கொண்டு விடைபெற்றார் அப்பய்ய சாஸ்திரிகள். அவரைப் பாராட்டிய தீட்சிதரே முன்னிருந்து வழியனுப்பி வைத்தார்.

ஒன்றை நினைத்தோம்; அது மற்றொன்றாக முடிந்து விட்டது. எப்படியோ உயிர் தப்பியதோடு, கிருஷ்ணப்பனையும் மீட்க முடிந்தது. அத்துடன் கோவிந்த தீட்சிதனுடைய தலையும் வணங்கி விட்டது, என்ற நினைவு மேலோங்கியபோது தம்முடைய கபடநாடகத்தை நினைத்து ஒருமுறை உள்ளுக்குள் சிரித்துக் கொண்டே செஞ்சி நோக்கிப் பயணமானார். வழியில் கிருஷ்ணப்ப நாயக்கன் சாஸ்திரிகளின் பாதம்தொட்டு வணங்கி மகிழ்ச்சியையும், நன்றியையும் தெரிவித்துக்கொண்டான்.

அப்பய்ய சாஸ்திரிகள் மேலும் சிரித்துக் கொண்டார். ஒன்றை நினைத்தோம்; அது மற்றொன்றாக முடிந்தது. எப்படியோ எண்ணம் நிறைவேறியது; இனி மனிதனாக நடந்து கொள்வோம்' என்ற நல்லெண்ணமே அந்தச் சிரிப்பில் குடிகொண்டிருந்தது.

வெற்றி முரசுடன் தஞ்சைப் படைகள் தெற்கு நோக்கிப் பயணமாயின.

இருபத்திநான்கு புரவிகள் பூட்டப் பெற்ற முத்துத்தேரில் அபரஞ்சியுடன் ஆனந்தமாகப் பயணமானான் தஞ்சை மன்னன் ரகுநாத போஜன். பின்னே

மகாமந்திரி கோவிந்த தீட்சதர் களிற்றின்மீது அமைக்கப்பெற்றிருந்த தங்க விமானத்தில் அமர்ந்து குறு நகையுடன் பயணமானர். அப்பய்ய சாஸ்திரிகளை அவரால் மறக்கவே முடியவில்லை!

அவருக்குப் பின்னே தளபதி அர்ச்சுனன் புரவி மீது பயணமானன். வரிசை கட்டிச்சென்ற தஞ்சைப் படைகள் மன்னரை வாழ்த்திக் குரலெழுப்பிக் கொண்டிருந்தன.

மன்னன் ரகுநாத போஜன் ஆசை நாயகி அபரஞ்சியை அரும்பு நகையுடன் நோக்கினன்: "அபரஞ்சி! முன்னம் போரில் செஞ்சியரசனை உன் தந்தையை நீ மீட்டாய். இப்போது சாஸ்திரிகள் மீட்டுவிட்டார்!" என்றான், குறும்புடன்!

"ஏனென்றல் அவர் என்னையே மீட்டுத் தந்து விட்டாரல்லவா?" என்றாள் அபரஞ்சி தலை குனிந்த வண்ணம்.

"ஆமாம்; உண்மையில் அவர்தான் மீட்டார். அவருடைய அரச தந்திரத்தின் முன்னே என்னுடைய இந்த மிகப்பெரிய போர்ப்பயணம் சாதாரணமாகப் போய்விட்டது!"

"அப்படிச் சொல்லிவிட முடியாது. நமக்குள்ள ஒரு முக்கிய பகைவன் வீழ்ந்தான். அடுத்து கனவில் கூட இனிமேல் அப்பா தங்களுக்குத் துரோகம் செய்ய நினைக்கமாட்டர். உண்மையில் நான் உயிருடன் தங்களைச் சந்திப்பேன் என்று நினைக்கவே இல்லை!"

"வாழ்க, அப்பய்ய சாஸ்திரிகள்!"

இருவரும் ஒருவரோடொருவர் உரசியவண்ணம் கலகலவென்று சிரித்துக்கொண்டனர். அந்தச் சிரிப்பொலி கேட்டு விதியாகிய காலதேவனும்கூட ஒரு கணம் அயர்ந்து மெய்விதிர்த்துப் போனன். அப்பய்ய சாஸ்திரிகளின் திடீர்த்திருப்பம் நிறைந்த குயுக்தி அந்தக் காலதேவனுக்கே புரியாத நிலைபோலும்! அவனே இப்படி எதிர் பார்க்கவில்லையென்றல் மற்றவர்களைப் பற்றி என்ன சொல்ல?

